


சாகித்திய அகாதெமி

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# தி.ஜ.ரங்கநாதன்

பழ.அதியமான்



உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.( பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# தி. ஜ. ரங்கநாதன்

பழ. அதியமான்



சாகித்திய அகாதெமி

*Thi. Ja. Ranganathan:* Monograph in Tamil by Pazha Athiyaman, Sahitya Akademi. New Delhi, Reprint, 2008, Rs. 40


முதல் பதிப்பு: 2004
இரண்டாம் பதிப்பு: 2008

**சாகித்திய அகாதெமி**

இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110001.

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக்
கட்டடம், டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூர் 560 001.

குணா பில்டிங்ஸ், 443, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், நான்காவது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், மும்பய் 400 014.

விலை: ரூ. 40
ISBN-81-260-1716-3

அச்சு: வி.பி. கே. ஆப்செட், சென்னை

# பொருளடக்கம்

# முன்னுரை

கி.பி.1900 க்குப் பிறகு, அச்சுத்தொழில் இந்திய மொழிகளில் செல்வாக்குச் செலுத்தத் தொடங்கியது. இதனால் இந்திய மொழிகளில் இலக்கியங்கள் பெருகத் தொடங்கின. ஆங்கிலக் கல்வியும், நகர நாகரிக மாற்றமும், தொழிற் பெருக்கமும், தொடர்புச் சாதனங்களின் வரவும், இந்திய விடுதலை இயக்கமும், மேற்குலக அறிவின் இந்தியப் பரவலும் இவ்விலக்கியங்கள் பெருக வழி செய்தன. இம்மாநில மொழி இலக்கியத்தின் செம்மையில், இந்திய இலக்கியத்தின் ஆளுமையும் மிளிர்ந்தது.

கி.பி.1900க்குப் பிறகான காலப் பகுதியில், தமிழ் இலக்கிய உலகம் பெரிய மாறுதல் கண்டது. பதிப்பு, நிறுவனச் செயலாக மாறியது. இந் நிறுவனம் வாயிலாகவும், தனிப்பட்ட முறையிலும் புத்தக வெளியீடு வளர்ந்தது. ஆங்கிலக் கல்விக் கூடங்களின் உருவாக் கத்தால் பெருகிய நவீன படித்த வர்க்கத்திற்குத் தீனி போட வேண்டிய தேவையும் அறிவுலகத்துக்கு நேர்ந்தது. இலக்கியத்தில் நாவல் என்ற வகைமை இறக்குமதியாகி, வளர்ந்து நிலைபெற்றது. சிறுகதையும் நாவலின் வளர்ச்சிக்கு ஈடுகட்டும் அளவில் இல்லையாயினும் அதுவும் வளர்ந்தது. மேற்கின் அறிவு வீச்சால் புதுக்கவிதைகளும் தோன்றிப் பரவின. இந்திய விடுதலை இயக்கத்தை, மக்களிடம் மேலும் கொண்டு செல்லும் நோக்கோடு பத்திரிகைகள் தோன்றின. விடுதலைக்குப் பிறகு தமிழகத்தின் சமூகச் சூழல், தமிழ் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது. இதனால் இலக்கியத்தின் செல்வாக்குத் தொடர்ந்து வளர்ச்சிநிலையில் இருந்தது. இத்தகைய சமூகப் பின்னணியைக் கொண்டவர்களாக 1900க்குப் பிறகான தமிழ் எழுத்தாளர்கள் விளங்கினார்கள்.

பெருகி வந்த அறிவுலகச் செயல்பாடுகளை நிறைவேற்று வதற்கு எழுந்த அறிவுலகச் செயலர்களுள் ஒருவராக தி.ஜ.ர. என்றறியப்படும் திங்களூர் ஜகத்ரட்சக ரங்கநாதனை (1901-1974) கருதலாம். அவரது அறிவுலகப் பணிகளுள் தலையாயது பத்திரிகை ஆசிரியப் பணி யாகும். பத்திரிகைகளில் இடம்பெற்ற இலக்கிய, சமூக, பல் பொருள் பற்றிய கட்டுரை எழுதும் பணி, பத்திரிகைக்கு வரும் கட்டுரைகளைப் பத்திரிகைக்கேற்பத் திருத்தி அமைக்கும் பணி, ஆங்கில இதழ்க்

கட்டுரைகளைத் தமிழுக்கு மொழிபெயர்க்கும் பணி என அவரது பத்திரிகைப் பணிகளை விவரிக்கலாம். தவிர, இலக்கியச் செயல் பாடுகளாகத் தமிழில் முன்னுதாரணங்களாக அமையத்தக்க பல்பொருள் கட்டுரைகள் எழுதியது, தமிழின் சிறப்புமிக்க சிறுகதை களாகக் கருதத்தக்க சிறுகதைகளை எழுதியது, குழந்தை இலக்கியத்துக்கு முன்னோடி என்று சொல்லத்தக்க வகையில் குழந்தை இலக்கிய வகைகளைப் படைத்தது ஆகியவற்றைச் சொல்லலாம். மொழி பெயர்ப்பில் தி.ஜ.ர.வின் பணி மிகச் சிறப்புடையது. அரசியல் பிரபலங்களின் வாழ்க்கை, இலக்கியம் எனப் பல்துறை நூல்களை ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்தார். தவிர, பல ஆங்கில நூல்களின் சுருக்கப்பட்ட வடிவத்தைத் தான் பணியாற்றிய மஞ்சரி இதழில் வெளியிட்டார். இத்தகைய இலக்கியப் பணி மூலமாகவே பெரும்பான்மைத் தமிழர்களின் நினைவில் தி.ஜ.ர. வாழ்கிறார்.

### பத்திரிகைகள்

இந்திய விடுதலையைக் கோரிய பத்திரிகைகளிலேதான் அவரது பணி அமைந்தது. கோரிக்கையில் மிதவாதத் தன்மையும், காந்திவழிக் கொள்கைகளை வற்புறுத்தும் தன்மையும் கொண்ட பத்திரிகைகளே தி.ஜ.ர. பணியாற்றிய பத்திரிகைகள். சிறு வேறுபாடுகளைக் கட்சி சார்ந்து பெரிதுபடுத்தும் அரசியல் அல்ல தி.ஜ.ர. பேசிய அரசியல். நாட்டை நிருவகிக்கும் பல்வேறு வகை அரசியல்களின் அடிப்படை களைப் பற்றிப் பேசும் அரசியல் அவருடையது. இவ்வகையில் அமைந்த கட்டுரைகளையே தி.ஜ.ர. எழுதினார். விடுதலைக்குப் பிறகு அவர் பணியாற்றியது முற்றிலும் இலக்கியம் சார்ந்த பத்திரிகை. பல் வேறு இந்திய மொழியில் வெளிவந்த சிறந்த இலக்கியப் பூக்களை மொழிபெயர்த்துத் தமிழ் மஞ்சரியாகத் தொடுக்கும் பணி. பன்முகத்தன்மைக்குள் வெளிப்படும் ஒரு முகத்தைத் தேடும் இலக்கியச் சேவை அது.

### மொழிபெயர்ப்புகள்

தி.ஜ.ர.வின் மொழிபெயர்ப்புகள் அவரது விருப்பத்தெரிவா என்பது தெரியவில்லை. எனினும் தேர்ந்தெடுப்புகள் சாதாரண மானவை அல்ல. மகாத்மாவின் வாழ்க்கையைச் சுவைபடச் சொல்லும் லூயி பிஷரின் காந்தி வாழ்க்கை நூலும், தமிழர் பலரின் ஆங்கில ஈர்ப்புக்குக் காரணமாகச் சொல்லப்படும் ஜிம்கார்பெட்டின் குமாவும் புலிகள் நூலும் சோவியத்தின் புரட்சி வாழ்க்கையைத் தமிழர்க்குக்

காட்டும் புது நாள் நாவலும் என அந்தந்தத் துறையில் குறிப்பிடத்தக்க நூல்களாகவே உள்ளன.

## சிறுகதை

ஒரு நூறு சிறுகதைகளுக்குள் தம் சிறுகதைப்படைப்புகளை நிறுத்திக் கொண்டு விட்ட தி.ஜ.ர.வின் சிறுகதைகள் இந்தியத்தரத்துடன் கூடியவை. வடிவ ஒழுங்கும், கதைக்குள் இயங்கும் விவாதமும், சொற் செட்டும், விவரிப்பு முறையும், யதார்த்தப் பாடு பொருளும் தி.ஜ.ர.வின் சிறுகதை லட்சணங்கள்.

முழுவதும் கற்பனைப் பிரதேசத்தில் இயங்கும் கதைகளைப் பரிசோதனை முயற்சிகளாகக் கூட முயலாமல் அடக்கி வாசிக்கப்பட்டதாக அவராலேயே சொல்லப்பட்ட 'தனியன்' கள் அவரது சிறுகதைகள். பத்தோடு, பதினொன்றாகக் கருதப்படாமல் பேர் சொல்லும் பிள்ளைகள் அவருடைய சிறுகதைகள்.

## கட்டுரை

தமிழின் கட்டுரை வகையில் முன்னோடியாகக் கருதப் படக்கூடிய வகையில் அமைந்தவை தி.ஜ.ர.வின் கட்டுரைகள். பல்பொருள் பற்றியன. எண்ணிக்கையில் மிக்கன, சுவாரஸ்யம் மிகுந்தன தி.ஜ.ர.வின் கட்டுரைகள். அவரது இலக்கிய வாழ்வின் இறுதிநாள்களில் அவர் தேர்ந்து கொண்ட குழந்தை இலக்கிய வகை, அவரை முன்னோடியாய் இன்றும் கொண்டாடிக் கொண்டிருக்கிறது. அவரது கட்டுரைச் சாதனை கவனம் பெற வேண்டிய அளவிற்குக் குழந்தை இலக்கியச் சாதனை கவனம் பெற்றுவிட்டது.

பல சாதனைகள் புரிந்த பெரும்பாலான இந்திய இலக்கிய வாதிகளின் வாழ்க்கையைப் போலவே தி.ஜ.ர.வின் வாழ்க்கையும் அவலம் நிறைந்த சோக வாழ்க்கையாகவே இருந்தது.

தி.ஜ.ர. மறைந்து 25 ஆண்டுகளே ஆகின்றன. எனினும் அவரது வாழ்க்கையை அறிந்து கொள்வது சிரமமாகப் போய்விட்டது. ஆதாரமற்ற செவிவழிச் செய்திகளைக் கொண்டு, அவரது மகனது பெயரின் ஒரு பாதியைக் கொண்டு, ஒரு நகரத்தில் 70 வயதுக்கு மேலான (அனுமானம்தான்) அவரது மகனைத் தேடும் நிலை. முகவரி தெரியவில்லை. குடும்ப நிலவரம் தெரியவில்லை. தொழில் தெரியவில்லை. கோடையின் வெம்மை தகிக்கும் ஒரு பகல் நேரத்தில் 20,000 ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் வாழும் நகர் ஒன்றில்

தி.ஜ.ர. வின் மகனைத் தேடப்போய் மகனது மகளைத் தேடிப் பிடித்தேன். மூன்று தலை முறைக்கும் வறுமை நீண்டு பரவியிருந்தது. வறுமையைத்தான் இலக்கியம் கொடுக்குமென்றால் எதற்கு இலக்கியம்? வறுமையும் புறக்கணிப்பும்தான் மனத்துக்கத்தைக் கொடுத்து, இலக்கிய வாதிக்குப் படைப்பெழுச்சியைத் தரும் என்றால் இலக்கிய வாதியாக ஏன் இருக்க வேண்டும்? பெரும் வாழ்க்கையின் ஒரு கூறு இலக்கியம். அது வாழ்க்கையை அடியோடு வெட்டிச் சிதைக்கும் என்றால் இலக்கியத்தைக் கட்டிக்காக்க வேண்டியது ஏன்? என்ற துக்கக் கேள்விகள்தாம் எழுந்தன. எதிர்மறையில் படிப்பினை தரும் இலக்கியவாதியின் வாழ்க்கையாக தி.ஜ.ர.வின் வாழ்க்கை எனக்குத் தோன்றியது.

தி.ஜ.ர.வாழ்ந்த வாழ்க்கையையும் படைத்த இலக்கியத்தையும் பற்றிப் பருந்துப் பார்வையில் இந்நூல் கண்டு காட்ட விரும்புகிறது.

தி.ஜ.ர.வின் இலக்கிய, சமூகப் பார்வைகளைப் பகுப் பாய்வுக்குட் படுத்திப் பார்ப்பது இன்னும் அவரை ஆழமாகப் புரிந்து கொள்ளப் பயன்படும். எனினும் அவ்வாய்வு நீண்ட காலத்தைப்கோரி நிற்கும்.

இந்திய இலக்கிய வாசகனுக்குத் தமிழ் எழுத்தாளர் தி.ஜ.ர.வை அறிமுகம் செய்யும் நோக்கிலேயே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. அதன்படியே அவரது வாழ்க்கையையும் இலக்கியப் பங்களிப்பையும் விவரிக்கும் வண்ணம் இயல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

# 1
# வாழ்க்கை — இலக்கியம்

திங்களூர் ஜகத்ரட்சகன் ரங்கநாதன், தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவையாற்றுக்குக் கிழக்கே ஒன்றரை மைல் தூரத்தில் உள்ள திங்களூர் என்ற சிற்றூரைச் சேர்ந்தவர். இவரது தந்தை, ஜகத்ரட்சகன், தஞ்சாவூருக்குத் தெற்கே பதினைந்து மைல் தொலைவில் உள்ள ஒக்கநாடு மேலையூர் என்ற சிற்றூரில் கர்ணம் வேலை பார்த்தார். இங்கேதான் தி.ஜ.ர.வின் பள்ளிப்படிப்பு தொடங்கியது. 1901 ஏப்ரல் மாதத்தில் பிறந்திருந்த தி.ஜ.ர. வுக்கு அப்போது வயது ஆறு அல்லது ஏழு இருந்திருக்கும். ஒரத்த நாடு சத்திரத்தில் இருந்த பாடசாலையில் நான்காம் வகுப்பு வரை படித்தார். ஒவ்வொரு வகுப்பிலும் முதல் மதிப்பெண் வாங்கிப் பரிசுகளும் பெற்றார். ஆனால் அவரை, அவருடைய தந்தை மேற்கொண்டு படிக்க வைக்கவில்லை. தி.ஜ.ர. தொடர்ந்து படிக்க ஆசைப்பட்டார். தந்தையோ அவருடைய ஆசையைக் கடைசிவரை பூர்த்தி செய்யவேயில்லை(கு.அழகிரிசாமி கட்டுரைகள், பக்.426-27)

தந்தையுடன் ஊர் ஊராய்ச் சுற்றி வந்த இளம் பருவத்தில் இந்த நான்காம் வகுப்புக்கு மேல் பள்ளிப்பாடத்தைத் தொடரவில்லை. ஆனால் படிப்பைப் தொடர்ந்தார். தமக்குத் தாமே ஆசிரியராக விருந்து அறிவியல் துறை நூலெல்லாம் படிக்கத் தொடங்கினார். பதினைந்து. பதினாறாவது வயதில் சர்வே பயிற்சியின் போது நேர்கோண முக்கோணம் என்னும் தத்துவத்தால் கவரப்பட்டு ஜாமெட்ரியும் அல்ஜீப்ராவும் பயிலத் தொடங்கினார். கிடைத்தவை ஆங்கிலப் புத்தகங்கள். ஆகவே மொழிப் பயிற்சிக்கு இலக்கியமும் இலக்கணமும் அகராதியின் துணைகொண்டு படித்தார். (தி.ஜ.ர. மணி விழா மலரில் தம்பி. சீனிவாசன்)

22 வயதிற்குள் தி.ஜ.ர.விற்கு வாழ்க்கை முழு அனுபவத்தைக் காட்டிவிட்டது எனலாம். பெற்றவளின் மரணம்; கும்பகோணத்திலும், ஸ்ரீரங்கத்திலும் தஞ்சைக் கிராமங்களிலும் தொழில் நடத்திய தந்தையாருடன் பெற்ற அனுபவங்கள்; கர்ணம் வேலை பார்க்கப் பழகியது; நில அளவைக்கான பயிற்சி பெற்றது; இதற்குள் 14 ஆம்

வயதில் திருமணம்; மாமனார் ஊரில் சில மாதம் திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர் பணி; தஞ்சாவூர் வக்கீல் குமாஸ்தாவாக நான்கு மாதங்கள்; கும்பகோணத்தில் மளிகைக் கடையில் சிற்றாளாகக்கூட ஒரு வாரம் வேலை; இப்படி மனத்தையும், உடலையும் பல்வேறு விதமாகப் பக்குவப்படுத்தும் துன்ப வாழ்க்கையின் பல அனுபவங்களையும் இளம் வயதிலேயே பெற்றுவிட்டார் தி.ஜ.ரங்கநாதன். இவ்விவரங்கள் தி.ஜ.ர. வாழ்ந்த போதே வெளிவந்திருந்த அவரது மணிவிழா மலரில் கிடைக்கின்றன.

தி.ஜ.ர. குள்ளமாக இருப்பார். நான்கு முழ வேட்டி, ஒரு வெள்ளை அரைக்கைச் சட்டை, ஒரு வெள்ளைத் துண்டு - இந்த உடையில் தான் எப்பொழுதும் காணப்படுவாராம். உடை சலவைக்குப் போடப்படாமல், துவைக்கப்பட்டுக் காவியேறி யிருக்கும். எவ்வளவு விடா முயற்சியுடன் வாரி விட்டாலும் தலைமயிர் சிலிர்த்துக் கொண்டுதான் நிற்கும். பாதிக்கு மேல் நரைத்த தலை. இடதுக் கையை மடித்து அதில் ஒரு பையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அலுவலகத்துக்குப் போய் வருவார். பைக்குள் ஆங்கிலப் பத்திரிகைகள். புத்தகங்கள், சில சமயம் சிற்றுண்டிப் பாத்திரம் முதலியன இருக்கும் என்று தி.ஜ.ர.வின் தோற்றத்தை வர்ணிக்கிறார் கு.அழகிரிசாமி.

தி.ஜ.ர. வித்தியாசமான இலக்கியவாதியாக இருந்திருக்கிறார். இலக்கியத்தின் மீதான பிடிப்புக்கு இணையான பிடிப்பு இயந்திரங்கள் இயங்கும் நுட்பத்தை அறிவதிலும் அவருக்கு இருந்திருக்கிறது. எந்த இயந்திரம் எப்படி ஓடுகிறது? எந்த மாதிரி வடிவமைக்கப்பட்டிருக்கிறது? என்பதைக் கவனமாக ஆராய்ந்து பார்ப்பார். அவர் வீட்டில் ஒரு வானொலிப் பெட்டி இருக்கிறது. தி.ஜ.ர. கவனமாக ஆராய்ச்சி செய்ததன் பயனாகவோ என்னவோ, அது அவரைத் தவிர வேறு யார் திருப்பினாலும் ஒலி கிளப்பாது. சென்னை நிலைய நிகழ்ச்சிகளைக் கேட்க வேண்டுமென்றால் தி.ஜ.ர. எழுந்து ஒரு சிறு குச்சியால் வானொலியின் பின்புறத்தில் உள்ள ஏதோ ஒரு கம்பியை நகர்த்துவார். உடனே அது கேட்கத் தொடங்கிவிடும். இப்படித் திருப்புவதற்கென்று ஒரு குச்சியும் தயார்செய்து பக்கத்தில் வைத்திருப்பாராம். வானொலி இயங்கும் விதம் தொடர்பான விலை உயர்ந்த புத்தகம் ஒன்றையும் தி.ஜ.ர. ஒரு முறை வாங்கி வைத்திருந்தாராம். எந்திர சாஸ்திரம் அறிவியல் தொடர்பான அரிய நூல்களும், அகராதிகளும், கலைக் களஞ்சியங்களும் தி.ஜ.ர. விடத்தில் இருந்தது போல் அதிகமாக மற்றொரு எழுத்தாளரிடம் இருந்ததை தான் பார்க்கவில்லை என்று கு.அழகிரிசாமி குறிப்பிடுகிறார். (பக்.117-8, நான் கண்ட எழுத்தாளர்கள், )

தி.ஜ.ர.வின் இந்த இயந்திரங்களுடனான வித்தியாசமான ஈடுபாட்டை, அவருடன் பல காலம் பணிபுரிந்த எழுத்தாளர் கி.வா.ஜ.வும் நினைவுகூர்கிறார்.

"அவருடைய பொழுதுபோக்கே ரேடியோக் கருவியை நிமிண்டிக் கொண்டே இருப்பதுதான். பழைய புத்தகம் விற்கும் கடைமுன் நின்று அங்குள்ள புத்தகங்களை எவ்வளவு ஆர்வத்துடன் கவனித்தாரோ, அதே ஆர்வத்துடன் ஆணி, திருகு, ஸ்பானர் ஆகிய இரும்புச் சாமான்களை விற்கும் கடையையும் முற்றுகையிடுவார். ஏதாவது சாமான்களை வாங்கிச் செல்வார். பேனாவைப்பிடிக்கும் கை இரும்பைப் பிடிப்பது என்பது அநேகமாக எங்கும் காண முடியாத அதிசயம். அவர் பேனாவைப் பிடித்ததன் பயனைத் தமிழுலகம் அறிந்திருக்கிறது. ஆனால் இரும்பைப் பிடிக்கும் கையுடையவர் என்பது அவர் வீட்டுக்குச் சென்று பார்த்தவருக்கே தெரியும்" (கலைமகள், நவம்பர்,1974)

தி.ஜ.ர. எழுதிக் கொண்டிருக்கும்போதும், பேசிக் கொண்டிருக்கும் போதும் வானொலி பாடிக் கொண்டே யிருக்குமாம். அப்படிப் பாடாத நேரத்தில் யாராவது வீட்டுக்கு வந்துவிட்டாலும் வானொலியைத் திருப்பிப் பாட வைத்துவிட்டுத் தான் பேச உட்காருவாராம் என்று தி.ஜ.ர. வின் வானொலிப் பிரியத்தை விவரித்துள்ளார் கு.அழகிரிசாமி(ப.118, நான் கண்ட எழுத்தாளர்கள்.)

அழகிரிசாமி மட்டுமல்ல, தி.ஜ.ர.வைப் பற்றிப் பேசும் யாரும் அவரது இயந்திரப் பிரிய அம்சத்தையும், சதுரங்க விளையாட்டில் அவரது பிரியத்தையும் சொல்லாமல் விடுவதில்லை.

### சதுரங்கத்தில் ஈடுபாடு

"வாழ்க்கை என்பதுதான் என்ன? வெறும் மன அனுபவந் தானே? சிந்தனையும் உணர்ச்சியுந்தானே! அந்த அனுபவத்தை, சிந்தனை உணர்ச்சியை இதிலுந்தான் (சதுரங்கத்தில்) நான் அடைகிறேன். சதுரங்கத்திலே ஆடிமுடியும் ஒரு விநாடியாவது ஒரு ஸ்டாலின் ஆனந்தத்தையோ ஒரு கெய்சரின் துக்கத்தையோ நானுந் தான் அடைகிறேன். அதில் என்ன ஆச்சர்யம்" (பொழுது போக்கு) என்று வாழ்க்கையோடு சதுரங்கத்தை இணைத்துப் பார்த்தவர் தி.ஜ.ர. சதுரங்க விளையாட்டுப் பிரியரான அவர் அடிக்கடி, நண்பர் வி.வி. சடகோபனுடன் சதுரங்கம் விளையாடியதாக அவரது நண்பர்கள் கூறுகிறார்கள். 1930 - 40 களில் சதுரங்க விளையாட்டைப் பற்றிக் கட்டுரை எழுதுமளவிற்கு அவருக்கு அதில் ஈடுபாடு இருந்திருக்கிறது.

''பொறுமையும், ஏகாக்ர சிந்தையும் சதுரங்க விளையாட்டில் மகா அவசியம். கலாசௌந்தர்யம் நிறைந்தது சதுரங்கம். மதியூகத்தை வளர்ப்பது அது. அவதான சக்தியைப் பெருக்குவது அந்த விளையாட்டு'' என்பது தி.ஜ.ர. வின் மதிப்பீடு.

''சதுரங்கக் காய்கள் ஒவ்வொன்றின் இயக்கமும் என்ன அதிசயமானது! எட்டுத்திசையும் பாயும் அந்த மந்திரியின் சக்தி மகா அபாரம். நேரே பாயும் யானைகளும் குறுக்கே ஓடும் தேர்களும் என்ன பாடுபடுத்துகின்றன! ஆனால் 'காலப்' பில் போகும் அந்தக் குதிரையின் இயக்கமே ஒரு தனி அழகு. அது எங்கிருந்து எப்படித் தாவுகிறது! எதிரிகளின் படை நடுவே துணிச்சலுடன் புகுந்து அவர்களின் பலாபலத்தை உளவறிய முயலும் காவல் குதிரைப் படைகள் (இப்போது குதிரைகள் போய் டாங்கிகள் வந்து விட்டன) இந்தக் காலச் சேனைகளில் கூட உண்டே! சதுரங்கக் குதிரைகளும் அதே தீரத்தைக் காட்டுகின்றன.''

இவை அக்கட்டுரையின் இரு பகுதிகள். எவ்வளவு ஈடுபாட்டுடன் சதுரங்க விளையாட்டை அவர் ஆடியிருப்பார் என்பதை இப்பகுதிகளிலிருந்து நாம் உணர்ந்து கொள்ளலாம்.

**குணச்சித்திரம்**

பெரும்பான்மையான தஞ்சாவூர்க்காரர்களுக்கு இருக்கும் பழக்கமான வெற்றிலை. புகையிலைப் பழக்கம் தி.ஜ.ர.வுக்கும் இருந்ததாகத் தெரிகிறது. தி.ஜ.ர. பற்றி கு.அழகிரிசாமி 'தமிழ் நேசனில்' ஒரு சொற் சித்திரம் வரைந்து, அதை தி.ஜ.ர. விடம் காட்டித் தகவல் எல்லாம் சரிதானா? என்று கேட்டிருக்கிறார். பிரசுரமான அந்தக் குறிப்பில் பழக்கம் பற்றிய பகுதியில் தற்போது தான் பொடி போடுவதில்லை என்ற சிறு மாற்றத்தைத் தி.ஜ.ர. எடுத்துச் சொல்லியிருக்கிறார். அது பற்றிய தி.ஜ.ர.வின் விவரணை இது.

''மலேயாவுக்கு அவர் சென்ற நாளில் நான் பொடி போடும் பழக்கம் இருந்தது. இப்போது அது போய் வெற்றிலை பாக்குடன் புகையிலை அடக்கிக் கொள்ளும் கட்டத்திற்கு வந்திருக்கிறேன். எனக்குள்ள நிரந்தரமான மார்ச்சளி உபத்திரவத்துக்கும் மூச்சுத் திணறலுக்கும் பரிகாரமே இவை (என்றேன்)...

ஓ. திருத்திவிட்டால் போகிறது. புத்தகத்தில் திருத்தி விடுகிறேன் என்றார் அவர்.

புத்தகம் வந்தது. எனக்கு ஒரு பிரதி அன்பளிப்பாய்த் தந்தார். ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்பது போல,

தி.ஜ.ர. பொடியும் போடுவார். புகையிலையும் அடக்கிக்கொள்வார் என்று புத்தகத்தில் இருந்தது. பொடி போட்ட தி.ஜ.ர.வின் உருவம் எவ்வளவு ஆழப் பதிந்திருக்கிறது அவரது மனத்தில். உபரி வர்ணம் பூசுவது போலப் புகையிலை அடக்குவதையும் சேர்த்து விட்டார். எப்படியானால் என்ன? பல்லெல்லாம் போன பின் மீண்டும் பொடிக்குத் திரும்பி விடுவேனோ? என்னவோ? யார் கண்டார்? ஆனால் இப்போது பொடியின் துளி நெடியையும் என்னால் தாங்க முடியவில்லை'' (கலைமகள்,1941)

**எழுத்து வாழ்க்கை ஆரம்பமானது இப்படித்தான்**

தி.ஜ.ர. தம் பதினைந்தாவது வயதில் (1916 ஆம் வருடம்) திருவாரூருக்கு அருகில் உள்ள திருக்காராயல் என்ற கிராமத்தில் சின்னம்மா வீட்டில் வசித்து வந்தார். அப்போது 'ஐரோப்பிய யுத்த சரித்திரம்' என்ற ஒரு தமிழ் நூலைப் படிக்கும் வாய்ப்புக் கிட்டியதாம். முதலாவது உலகப் போர் பற்றிய அந்த நூலின் ஆசிரியர் டி.எஸ். விசுவநாதன் என்பவர். ''சுதேசமித்திரன்'' வெளியிட்ட ஐந்து பாகங்கள் கொண்ட அந்த நூலைப் படித்து முடித்ததன் பலனாக தி.ஜ.ர. அதுவரை அறிந்திராத எண்ணற்ற புது விஷயங்களைக் கற்றுக் கொண்டார். நவீன விஞ்ஞான உலகத்தில் சிந்தனைகள், நடைமுறைகள், வளர்ச்சிகள், சாதனைகள் போன்றவற்றை அவருக்குக் கற்பித்த அந்த நூலையே நமக்கு நவீன உலகைப் பற்றிய ஞானத்தை முதன் முதலில் போதித்த ஆசான் என்று தி.ஜ.ர. கூறுகிறார் என்று கு.அழகிரிசாமி குறிப்பிடுகிறார். அதை பைண்டு பண்ணித் தி.ஜ.ர. பத்திரமாக வைத்திருந்தாராம். அதன் முதல் பக்கத்தில் 'இந்த நூல்தான் எனக்குத் தலைமை ஆசானாக இருந்தது. எனவே இதை ஒரு போதும் வெளியே இரவல் கொடுப்பதற்கில்லை' என்று ஆங்கிலத்தில் எழுதி வைத்திருந்தாராம் (கு.அழகிரிசாமி கட்டுரைகள், எல்லோருக்கும் நல்லவர்,ப. 427)

தி.ஜ.ர.வின் எழுத்து வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருந்த அந்த நூலைப் படித்ததைத் தொடர்ந்து, பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதத் தொடங்கினார். முதல் கட்டுரை 1916 இல் 'ஆனந்த போதினி'யில் வந்ததாகத் தெரிகிறது. தி.ஜ.ர. ஒரு கவிதையும் எழுதினார் - வறுமையின் கொடுமையைப் பற்றியது அது. அப்போது நடைபெற்ற 'ஸ்வராஜ்யா' என்ற பத்திரிகையில் வெளிவந்தது. அதைத் தொடர்ந்து சுதேசமித்திரனில் எழுதிவரலானார் என்று தி.ஜ.ர. எழுத்துலகிற்கு வந்த கதையைத் தம்பி சீனிவாசன், தி.ஜ.ர.வின் மணி விழா மலரில் தெரிவிக்கிறார்.

பல பத்திரிகைகளில் எழுதினாலும், முழுநேரப் பணியாக, பத்திரிகைத்தொழிலை மேற் கொண்டது தஞ்சாவூரில் நடைபெற்ற 'சமரச போதினி' பத்திரிகையில் தான். அப் பத்திரிகையில் துணை ஆசிரியராகப் பணியமர்ந்தார். பின்னர் அங்கிருந்து காரைக்குடி 'ஊழியனுக்குச்' சென்றார். ஊழியனில் பணியாற்றியபோதுதான் விடுதலைப் போராட்டத்தில் தி.ஜ.ர.ஈடுபட்டார்.

அந்நியத் துணி விலக்கு இயக்கம் நடைபெற்ற 1920 களின் பிற்பகுதியில் தி.ஜ.ர. ஊழியன் ஆசிரியர் ராய. சொக்கலிங்கம் அவர்களுடன் சேர்ந்து காரைக்குடியிலும், தேவ கோட்டையிலும் தடை உத்தரவை மீறிப் பொதுக் கூட்டங்களில் பேசினார். சிவகங்கையில் அவ்வாறு தடையை மீறிப் பேசிய போது கைது செய்யப்பட்டார். 11 மாதங்கள் திருச்சிப் பகுதியில் சிறைவாசம் செய்தார். (மஞ்சரி, நவம்பர் 1975)

சமரசபோதினி, ஊழியன், சுதந்திரச் சங்கு, ஜய பாரதி, ஹனுமான், சக்தி, மஞ்சரி உள்ளிட்ட பல இதழ்களில் உதவி ஆசிரியர், துணை ஆசிரியர், கூட்டாசிரியர், ஆசிரியர் ஆகிய பதவிகளில் ஏதோ ஒன்றில் அமர்ந்து சேவை செய்துள்ளார்.

மூன்று நாளைக்கு ஒரு முறையே தபால் வரும் குக்கிராமத்தில் கிடைக்கும் பத்திரிகைகளைக் கொண்டே வெளி உலக அறிவைப் பெற வேண்டிய இளமைச் சூழலைப் பெற்றிருந்த தி.ஜ.ர. இவ்வாறு பல பத்திரிகைகளுக்கு ஆசிரியராக அமர்ந்தது, அதுவும் குறைந்த பள்ளிப்படிப்பறிவைக் கொண்டே எனும் போது அவரது கூர்மையான அறிவும், ஆர்வமும், திறமையும் புலப்படுகின்றன. சமரசபோதினியில் எழுத்துப்பணியைத் தொடங்கி, மஞ்சரி வரை பத்திரிகையிலேயே வாழ் நாளைக் கழித்த தி.ஜ.ர.வுக்கு அச்சு வேலைத் தொடர்பு சிறிது பரம்பரையாக வந்ததாகவும் தெரிகிறது.

தி.ஜ.ர.வின் தந்தையார், திருமணமாவதற்கு முன் அதாவது 1900 களுக்கு முந்தைய பத்தாண்டுகளில், தாமும் நாலைந்து பிரம்மசாரிகளுமாகச் சேர்ந்து ஒரு வகை ஆசிரமம் நடத்தினாராம். சுய தேவை பூர்த்தி செய்து வந்த அந்த அறுவரும், தொழிலில் ஈடுபட எண்ணித் தொடங்கிய முயற்சி, தஞ்சை குக்கிராம மொன்றில் ஒரு "கிளி பிரஸ்" ஆக அமைந்தது. கையால் இயக்கும் பழைய நாளைய இயந்திரம். தி.ஜ.ர.வின் தந்தை, கிரந்த அச்சுக் கோக்க, மற்றொருவர் அச்சு இயந்திரத்தை இயக்க, இவ்வாறு விஷ்ணு புராணத்தின் ஒரு பகுதியை வெளியிட்டனராம் அந்த இளைஞர்கள். (தம்பி சீனிவாசன், மணி விழா மலர்)

பத்திரிகைகளில் பணியாற்றிய தி.ஜ.ர. அவற்றில் தாம் எழுதிய கட்டுரைகளையும், சிறுகதைகளையும் நூலாக அவ்வப்போது வெளி யிட்டு வந்தார். முதன் முதலாக, 'சந்தனக் காவடி' என்ற சிறுகதைத் தொகுதியைத் தம் 37 ஆவது வயதில் வெளியிட்டார். அதைத் தொடர்ந்து 'பொழுது போக்கு' என்ற கட்டுரை நூலையும் வெளி யிட்டார். சிறுகதையாசிரியராகவும் கட்டுரையாசிரியராகவும் பிரபல மடையத் தொடங்கி விட்டார். தொடர்ந்து நூல்களை, தாம் ஆசிரியப் பணி செய்த பத்திரிகை காரியாலயம் மூலமாகவும், பின்னர் வேறு பதிப்பகங்கள் மூலமாகவும் வெளியிட்டு வந்தார். இதனிடையில் மொழிபெயர்ப்பிலும் தி.ஜ.ர. வின் திறமை பளிச்சிட்டதால், மொழி பெயர்ப்புகளும் வெளியாயின. படைப் பிலக்கியத்தில் சிறுகதையைத் தாண்டி, தி.ஜ.ர.வின் கை நீளவே யில்லை. அவருடைய காலத்தில் புகழ் பெற்றிருந்த நாவல் வடிவத்தை அவர் கையாளவேயில்லை. அதே போல நாடக, கவிதை வடிவத்தையும் தி.ஜ.ர. தொடரவில்லை. இந்த வடிவங்களில் கவிதை தவிர, நாவல், நாடக வடிவங்களில் அமைந்த புனைவுகளை அவர் மொழி பெயர்த்துள்ளார். வாழ்க்கை யின் இறுதி பகுதியில் குழந்தை இலக்கியத்தில் அவர் கவனஞ் செலுத்தத் தொடங்கிவிட்டார். அதில் குழந்தை எழுத்தாளர் சங்கம் போற்றிப் பாராட்டி, நினைவு வைத்துக் கொள்ளும் வண்ணம் சாதனையையும் புரிந்துவிட்டார்.

அவரது சிறுகதைத் தொகுப்புகளாவன சந்தனக் காவடி, காளி தரிசனம், மஞ்சள் துணி, நொண்டிக் கிளி, விசைவாத்து, கட்டுரைத் தொகுதிகள், பொழுது போக்கு, எப்படி எழுதினேன். எழுத்தும் எழுத் தாளரும், ஆகா ஊஹூ, புகழ்ச் செல்வர், இது என்ன உலகம்?, வளர்ச் சியும் வாழ்வும், மொழி வளர்ச்சி, வீடும் வண்டியும், யோசிக்கும் வேளையில் ஆகியன. மொழிபெயர்ப்புகளும், வாழ்க்கை வரலாறு களும், குழந்தை இலக்கியமும் மற்ற நூல்கள்.அவையாவன: தீனபந்து ஆண்ட்ரூஸ், புதுமைக் கவி பாரதியார், கூண்டுக்கிளி, அபேத வாதம், அட்லாண்டிக் சாசனம், ஒரே உலகம், லெனின் சரித்திரக் கதைகள், குழந்தைகள் அறிவு, புதுநாள், அற்புதப் பெண், காந்தி வாழ்க்கை, பாப்பாவுக்குக் காந்தி கதைகள் பாப்பாவுக்குப் பாரதி, ரோஜாப் பெண், அலமுவின் அதிசய உலகம், வண்ணாத்திப் பூச்சி, சமர்த்து மைனா, தலைவர் ஜவாஹர். கோயரிங், அரசியல் நிர்ணய சபை குமாவும் புலிகள். நூல்களின் உள்ளடக்கம், வகைமை ஆகியன கொண்டு, தொடர்பான இயல்களில் அவை பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

தி.ஜ.ர. சீர்திருத்த எழுத்தாளர் வ.ராமசாமி (வ.ரா) அவர்களைக் குருவாகக் கொண்டு, தம்மை அவரது வாரிசாக நினைத்துக் கொண்டு இலக்கிய உலகில் செயல்பட்டவர். அவ்வகையில் வ.ரா.வின் சீர்திருத்தப் போக்கு தி.ஜ.ர.வின் எழுத்துகளில் படிந்தது. எனவே தி.ஜ.ர.வின் இலக்கியம் கலைக்காக என்ற எல்லையைத் தாண்டி, பிரசாரத்துக்காகவும் பயன்பட முயன்றது. தி.ஜ.ர.வின் (1901 - 1974) எழுத்துக் காலப் பகுதி 1923-1970 என முடிவு செய்யலாம். இக் காலப் பகுதியில், தமிழகத்தில், இந்தியாவில், உலகத்தில் நிகழ்ந்த கலை, இலக்கிய, சமூக, அரசியல் நிகழ்வுகளில் தி.ஜ.ர. கவனம் செலுத்தினார். அவற்றைப் பற்றிய தீர்மானமான திடமான அபிப்ராயத்தையும் கொண்டிருந்தார். ஆனால் அவற்றை வற்புறுத்துவதில் அவர் முனைவதில்லை என்பது தான் அவரைப் பற்றிய சித்திரமாகப் பிற்கால வாசகருக்குத் தோன்றுகிறது.

தமிழகத்தில் கலைத்துறையில் நாடகத்தின் செல்வாக்குக் குறைந்து திரைப்படக்கலை உருவான காலம் தி.ஜ.ர. காலம். கலை வடிவ மாற்றங்களில் ஒன்றான இது பற்றி தி.ஜ.ர. பேசியிருக்கிறார். இந்த மாற்றத்தை வரவேற்ற தி.ஜ.ர., திரைப்படம் என்ற புதிய கலை வடிவம் எப்படியிருக்க வேண்டும் என்பது பற்றிய சிந்தனைகளையும் முன் வைத்தார். அந்தச் சிந்தனைகளை வைத்துப் பார்த்தால், தி.ஜ.ர., புதிய வாழ்க்கையை வரவேற்பவராக, வாழ்க்கையின் யதார்த்தத்தைச் சித்திரிப்பதை விரும்புபவராக, போலி வாழ்க்கை, போலிச் சித்திரங்கள் ஆகியவற்றை வெறுப்பவராகத் தோற்றமளிக்கிறார்.

அதே போல இலக்கியத்துறையில் தோன்றிய புதிய இலக்கிய வகைமையான சிறுகதை வடிவத்தை வரவேற்று, அதில் தொடக்க முயற்சிகளைச் செய்தார். சிறுகதையின் உருவம், உள்ளடக்கம், உத்தி முறைகளைப் பற்றித் தமது விருப்பங்களை வெளியிட்டார். அவை தொடக்கக் காலத் தமிழ்ச் சிறுகதையாசிரியர்களுக்குப் பயன் பட்டதாகச் சிறுகதை வரலாற்று ஆசிரியர்கள் தெரிவித்துள்ளார்கள். 1930 களில் தமிழில் தேசிய இயக்கத்தின் விளைவாகப் பத்திரிகைகள் தோன்றின. அந்தப் பத்திரிகைகளிலும் பங்கேற்றுப் பணி புரிந்திருக் கிறார் தி.ஜ.ர. சமூகத் துறையில், அரசியல் துறையில் ஏற்பட்ட பெண் விடுதலை, மூட நம்பிக்கையொழிப்பு, பிராமணரல்லாதார் இயக்கம், பொதுவுடைமை இயக்கம், தேசிய இயக்கம்,தனித்தமிழ் இயக்கம், இரண்டாம் உலகப் போர், மொழி வழி மாநிலங்கள் பிரிவு, அதன் விளைவுகள், கிராம நாகரிகம் மாறித் தொழில் வளர்ச்சியால் நகர நாகரிகம் தொடங்குவது, அதன் பக்க விளைவான குடியிருப்பு,

போக்குவரத்து பிரச்சனைகளால் நகரம் விழி பிதுங்கி நின்றது. மேற்கின் ஆட்சியால், கருத்து நிலைகளில் ஏற்பட்ட பல்வகையான மாற்றங்கள். அனைத்தையும் தி.ஜ.ர. இலக்கியத்தில் எதிர் கொண்டிருக்கிறார். அவற்றை உள்வாங்கி, செரித்துத் தம் கருத்துகளோடு இலக்கியத்தில் பதிவு செய்திருக்கிறார்.

அவர் கால வாழ்க்கையின் யதார்த்த பிரதிநிதி தி.ஜ.ர. அவர் கால கிராம மற்றும் நகர வாழ்வின் ஒரு நேர்மையான பிரத்தியட்சமான சாட்சி. அவருடைய அனுபவங்கள் நடுத்தரவர்க்க உயர் சாதி மனோபாவ அனுபவங்கள்.

பிரித்தானிய ஆட்சியால் ஏற்பட்ட கல்வியும், அதன் விளைவாய் மேற்குலகின் அறிவு இந்தியாவில் பரவிதும் இக் காலப் பகுதியின் மன நிலையையே ஒரு குலுக்கு குலுக்கு விட்டது எனலாம். ஆங்கிலம் கற்ற புதிய தலைமுறை எழுத்தாளர்கள், இந்த மன நிலையில் பாதிக்கப்பட்டனர். கீழை நாடுகளின் கருத்துகளுக்கும், மேற்கு நாடுகளின் கருத்துகளுக்கும் இடையில் ஏற்பட்ட மோதலின் விளைவு எல்லோருக்குள்ளும் பரவிப் பாய்ந்தது. இத்தகைய மனநிலையில்தான் தி.ஜ.ர.வும் இருந்தார்.

தி.ஜ.ர.வின் மனம் இக்கருத்துகளுக்கிடையில் ஊசலாடிக் கொண்டே இருந்திருக்கிறது. 1950 இல் வெளிவந்த அவரது இது என்ன உலகம்? என்ற நூலில் உள்ள 'அதிசய தர்சனம்' கட்டுரையில் காணக் கிடைக்கும் ஒரு செய்தி, சடங்குகள் பற்றிய அவரது இவ்வகைக் கருத்து ஊசலாட்டத்துக்கு உதாரணமாகிறது. கடவுள் பூசையில் இடம் பெறும் சடங்கு பற்றியது அது. சடங்குகளில் நம்பிக்கையற்றவராகத் தன்னைக் காட்டிக் கொள்ளும் தி.ஜ.ர. இவ்விடத்தில் எழுதுவதைக் கவனியுங்கள்.

"கொஞ்ச காலத்துக்கு முன் ஒரு வீட்டில் ஒரு மடாதிபதி வந்தார். உள்ளே போனார். வாசலில் பெருங் கூட்டம். தாரை ஊதுகிறது. கண்டாமணி, கண கண என்று அடிக்கிறது. கம்பீரமான குரலில் மந்திரத்தை உச்சரித்து அர்ச்சிக்கிறான் ஒருவன். பின்பு ஜல்ஜல் என்று ஜாலா சத்தத்துடன் பாடி ஆடுகிறான் ஒரு சிறுவன். அதன் பிறகு ஏதோ சுலோகத்தை ஜபித்தார்கள் சிலர். ஆரத்திச் சுடரைச் சுற்றினான் மற்றொருவன். நன்றாக யோசித்துப் பார்க்கும் போது, இந்தச் சடங்குகளில் அர்த்தம் ஒன்றுமே நமக்குப் புரிவதில்லை. ஆனால் அங்கே அந்தச் சமயத்தில் நிற்கும் போது, நம்மையும் அறியாத ஒரு விறுவிறுப்பு நம் நரம்புகளில் துடி துடிக்கிறது" (இது என்ன உலகம்?)

ஒன்று சடங்குகளில் நம்பிக்கை இருக்க வேண்டும் அல்லது சடங்குகளில் நம்பிக்கை இல்லை என்ற நிலை வேண்டும். இரண்டுக்கும் இடையில் ஊசலாட்டம் ஆடுகிறது தி.ஜ.ர.வின் மனம். தி.ஜ.ர.வின் இம் மன நிலையும், இவை போன்ற கருத்து நிலையுமே அவரது இலக்கியத்தில் பிரதிபலிக்கின்றன.

இந்து சமய சாஸ்திரம் பற்றிய அவரது கருத்து நிலையையும் இதே போல நாம் பார்க்கலாம். மேற்கின் அறிவியல் ஒளி பரவப் பரவ அந்த வெளிச்சத்தில் சாஸ்திரங்கள் மறுபரிசீலனைக்கு உள்ளாயின. அவற்றை விட்டு விடுவதா? பற்றிப் பரவுவதா என்ற கேள்வி அக்கால மக்கள் மனத்தில் எழுந்தது. அவற்றைப் பற்றிப் பேசுகிறார் தி.ஜ.ர.

"சாஸ்திரங்கள்.. அந்த அந்தக் காலத்தில் இருந்தவர்கள் அந்த அந்தக் காலத்து நிலைமைகளுக்கும் சந்தர்ப்பங்களுக்கும் ஏற்றபடி சமூகம் முழுவதும் இன்புற்று வாழக்கண்ட பாதைகள் அவை. சாஸ்திரத்துக்கு மனிதன் அடிமை அல்ல; சாஸ்திரந்தான் மனிதனுக்கு அடிமை. பழைய சாஸ்திரம் பயனற்றுப் போகும் போது புதிய சாஸ்திரத்தைச் சிருஷ்டித்துத்தான் ஆக வேண்டும்" (இது என்ன உலகம்) என்பதே தி.ஜ.ர.வின் சாஸ்திரம் பற்றிய கருத்து. இது ஒருவகையில் சாஸ்திரத்துக்கு ஆதரவான கருத்து நிலை தான் என்றாலும் அது பற்றி இவ்வளவு வெளிப்படையாகப் பேச வேண்டிய சூழலைக் கவனத்தில் கொள்ள வேண்டும். எனினும் தி.ஜ.ர.வின் மனஊசல் ஆடிக் கொண்டேயிருக்கிறது. "சாஸ்திரப் பித்தம்" எனும் கட்டுரையில் வரும் ஒரு கற்பனைச் சித்திரம் இவ்வாறு பேசுகிறது.

"கடிகாரம் என்னைத் தூங்க விடவில்லை. சுவர்க் கோழி என்னை விழிக்க விடவில்லை. வெகுநேரம் இதே சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்தேன். தூக்கத்தைத்தான் இறுதியில் உதறி எழுந்தேன். வெளியே போய் நின்று வானத்து நட்சத்திரங்களை ஏறிட்டுப் பார்த்தேன். அவை மின்னி மின்னி புன்னகை பூத்தன. அது இயற்கை தேவியின் புன்னகை. அந்த மோகனப் புன்னகையிலே, என் விவேக கீதம் லயிக்க வேண்டும். சாஸ்திரம் அதற்கு உப சுருதியாகத் துணை நிற்க வேண்டும். தவறினால் சாஸ்திரத்தின் அப சுருதியைத் தள்ளி விட்டு, ஏகாங்கியாக என் விவேகம் இசைக்க வேண்டும். அபசுருதியை விட, அசுருதியற்ற கீதமே மேல்..." (இது என்ன உலகம்?)

**கடவுள் பற்றிய கருத்து நிலை**

"சாதாரண காலங்களிலே நான் ஒரு சம்சய வாதி. ஒரு சமயம் கடவுள் உண்டா இல்லையா? என்று சந்தேகம் கொள்ளுவேன். இன்னொரு சமயம் கடவுளாவது மண்ணாங்கட்டியாவது என்று நாஸ்திக மனோபாவம் கொள்ளுவேன். மற்றொரு சமயம் கடவுள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நமக்கென்ன என்ற அலட்சிய வாதமும் செய்வேன். வேதாந்த பரமாக அத்வைத நோக்கோடு, நிர்க்குணப் பிரம்மமான ஒரு சூன்யத்தைத் தியானிப்பதும் சில சமயம் என் வழக்கம். காலும் கையுமாக ஒரு உருவம் பெற்ற கடவுளைப் பற்றி நினைப்பது மட்டும் எனக்குப் பெரும்பாலும் அசாத்தியமாக இருந்தது. ஆனால் அந்த ஜப்பான் காரனின் குண்டு சத்தத்தைக் கேட்ட பிறகெல்லாம் அகுணப் பிரம்மம் ஒன்று கையும் காலும் முளைத்து உருவம் பெற்ற தெய்வம் ஒன்று எனக்கு அவசியமாகிவிட்டது. அடியோடு புகல் அடைய அப்படிப்பட்ட ஒரு தெய்வம் எனக்கு வேண்டியிருக்கிறது. பகவானே! நீ இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. என்னை மட்டும் காப்பாற்றி விடு! உனக்குக் கோடி புண்ணியம் உண்டு." "இது என்ன உலகம்" என்ற கட்டுரைத் தொகுப்பில் உள்ள ஒரு பாத்திரத்தின் புலம்பல் இது. ஒரு வகையில் இதுதான் தி.ஜ.ர.வின் கடவுள் கொள்கையும் எனலாம்.

**மாயை**

பாரதியாரைப் போல, வ.ரா.வைப் போல தி.ஜ.ர.வும் 'மாயை' யை மறுக்கும் எண்ணம் கொண்டவரே.

'நிற்பதுவே! நடப்பதுவே! நிகழ்வதுவே! நீங்களெல்லாம் கற்பனை தானோ? வெறும் காட்சி மயக்கங்களோ என்று நம் கவித்திலகம் பாரதி கேட்கிறார். சோலையிலே மரங்களெல்லாம் தோன்றி மறையுமென்றால் சோலை பொய்யாமோ? அதைச் சொல்லோடு சேர்ப்பாரோ? என்று அவரே பதிலும் தருகிறார்.

'வாழ்க்கையிலே வெற்றிகாண வகை தெரியவில்லை. செயல் செய்து பலன்காணும் வித்தை தெரியவில்லை. சூழ்ந்து கொண்ட விலங்கை முறித்தெறியத் துணிவு பிறக்கவில்லை. இதனால் எல்லாம் கூனிக்குறுகி உட்காருவதற்கு மனிதன் கண்ட பழியா மாயை? சூன்யத்தின் குழந்தை அல்ல ஞானம். அது கர்மத்தின் பலன். தோல்விகளெல்லாம், துன்பங்களெல்லாம் ஈசுவர லீலை என்பது வெறும் பழி; நாஸ்திகமுமாகும்".

'இது என்ன உலகம்'.. என்ற தி.ஜ.ர. வின் கட்டுரைத் தொகுதியில் 'மாயப் பிரபஞ்சம்' என்ற கட்டுரையில் மாயையை மறுத்து எழுதிய பகுதிகள் மேலே கண்டவை. வழி வழி வந்த தமிழ் எழுத்தாளர் கூட்டத்தில் தனி ஒரு கொடியாக ஓடிய பாரதி, வ.ரா. பரம்பரையில் தி.ஜ.ர.வை வைத்துப் பார்க்க மேலே கண்ட பகுதிகள் உதவுகின்றன.

**மொழி**

"பாஷை என்பது என்ன? அதுவே ஒரு பெரிய சங்கேதத்திரள் தானே! பாஷையின் தூய்மையைக் காப்பாற்ற வேண்டியது தான். ஆனால் அதற்காக சின்ன அல்லது கோணல் புத்தி படைத்தவர்கள் போடும் சண்டைக்கெல்லாம் பொருள் கிடையாது. ஜன சமூகத்தில் வேரூன்றிய சங்கேத பலந்தான் பாஷையின் தூய்மை. ஓங்கி வளர்ந்த மரத்தின் தூய்மை அதன் பட்ட கிளைகளை வெட்டி எறிவதிலும் புதிய தளிர்களை ஓம்பி வளர்ப்பதிலும்தான் இருக்கிறது."

என்பது தி.ஜ.ர.வின் மொழிக் கொள்கைகளுள் ஒன்று. தனித் தமிழ் இயக்கத்திற்கு எதிரான பார்வையைக் கொண்டவராகத் தி.ஜ.ர. திகழ்ந்தார். எனினும், தாய்மொழிக் கல்வியை ஆதரிப்பவராக, வேறு மொழிகள் அவை இந்திய மொழிகளாக இருக்கட்டும், அந்நிய மொழிகளாக இருக்கட்டும் அவை தாய்மொழியின் இடத்தைப் பிடிப்பதை எதிர்ப்பவராகவே தி.ஜ.ர. திகழ்ந்தார். தாய்மொழியின் வழியாகவே சிந்தனை சிறப்பாக இயங்க முடியும் என்ற அடிப்படையில்,மொழி வழி ஆதிக்கம் மக்களைத் தேசப்பற்றிலிருந்து அந்நியப்படுத்திவிடும் என்ற எண்ணத்தில் தி.ஜ.ர. செயல்பட்டி ருக்கிறார். இவ்வகையிலும் வ.ரா.வின் சீடராகத் தன்னைக் கருதும் தி.ஜ.ர. அவரைப் பின்பற்றுபவராக, சில இடங்களில் அவரையும் விஞ்சியவராகத் தனித் தோற்றம் கொள்கிறார். தி.ஜ.ர.வின் மொழிக் கொள்கை தனிச்சிறப்பு வாய்ந்த கொள்கையாகும்.

**வாழ்க்கை**

தி.ஜ.ர.வின் வாழ்க்கை பெரும்பாலான எழுத்தாளர்களின் வாழ்க்கையைப் போலவே செல்வ வளம் அற்ற வாழ்க்கைதான். தி.ஜ.ர.வின் வாழ்க்கையை விளக்க எண்ணிய கி.வா.ஜ. பயன்படுத்திய தொடர் "திருவேறு தெள்ளியராதலும் வேறு" என்ற எழுத்தாளர்களின் வாழ்க்கையை விளக்கவே எழுந்ததோ என்று எண்ண வைக்கும் அந்தத் தொடர்தான்.

தி.ஜ.ர.வின் மனைவி சுந்தரவல்லி மாயவரத்தையடுத்த காழி என்ற ஊரைச் சேர்ந்தவர். தி.ஜ.ர.சுந்தரவல்லி இணையருக்கு மூன்று மகன்களும் மூன்று மகள்களும் இருந்தனர். சீனுவாச வரதன், பார்த்த சாரதி, சேஷாத்திரி ஆகிய மூன்று மகன்களுள் இப்போது பார்த்தசாரதி மட்டும் தம் குடும்ப உறுப்பினர்களோடு சென்னையை அடுத்த திருநின்றவூரில் வசித்து வருகிறார். பங்கஜம், பாப்பா, மஞ்சரி என்ற மூன்று மகள்களுள் சென்னையில் முதலிருவரும், மஞ்சரி பெங்களூரிலுமாக வாழ்ந்து வருகின்றனர். மூன்றாவது மகள் தி.ஜ.ர. மஞ்சரியில் பணியாற்றிய காலத்தே பிறந்ததால் அதன் நினைவாக மஞ்சரி எனப் பெயர் வைத்ததாகத் தெரிகிறது. மூன்றாவது மகனின் பொறுப்பில் நெய்வேலியில் மருத்துவமனையில் இருந்த சமயம் தான் தி.ஜ.ர. காலமானார். அவர் காலமான ஒரு சில மாதங்களிலேயே சர்க்கரை நோயால் பெரிதும் துன்பப்பட்டுக் கொண்டிருந்த மனைவியும் காலமானார். தி.ஜ.ர. வாழும் காலத்திலேயே, அரங்கண்ணல் வீட்டுவாரியத்தில் பொறுப்பிலிருந்த போது கிடைத்த அரசு வீட்டில் தான் பாப்பா இப்போது மகள்களோடு வசித்து வருகிறார்.

தி.ஜ.ர. எந்த அரசியல் இயக்கத்திலும் சேரவில்லை என்றாலும் காங்கிரஸ் கட்சியின் பேரிலும், காந்தியின் மீதும் மிகுந்த ஈடுபாடு வைத்திருந்தார். எந்த சமூக இயக்கத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளவில்லை. 'தன் கடன் பணி செய்து கிடப்பதே' என்பது போல எழுத்து, பத்திரிகை, வீடு என வாழ்க்கையைச் சக்கரமாக அமைத்துக் கொண்டு விட்டார்.

"தி.ஜ.ர. அடக்கமானவர். தம் திறமையை வெளிப்படுத்தத் தெரியாதவர். அவருடைய வாழ்க்கை அனுபவத்துக்கு எத்தனையோ நண்பர்களைப் பெற்றிருக்கலாம். எத்தனையோ புத்தகங்களை எழுதியிருக்கலாம். வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொண்டிருக்கலாம். முந்திக் கொண்டு சென்று நிற்கும் இயல்புக்கும் அவருக்கும் நெடுந்தூரம். அதனால் அவர் ஒரு எல்லைக் கோட்டுக்குள்ளேயே உலவி வந்தார். அவருக்கு மிக மிக நெருங்கிய நண்பர்கள் பலர் இல்லை. அப்படியே கடுமையான பகைவர்களும் இல்லை. ஒரு வகையில் அவருடைய மனப்பான்மையைத் துறவியின் மனப்பான்மை என்றே சொல்லலாம்." என்று கி.வா.ஜ. கலைமகளில் (நவம்பர், 1974) எழுதியது, தெளிவாக அவரது வாழ்க்கை முறையை விளக்கிவிடும்.

எழுத்தாளர்களோடும் நட்புறவு கொண்டு மிக நெருங்கிப் பழகியவர் தி.ஜ.ர. என்று சொல்ல முடியாது என்பதே கி.வா.ஜ.வின்

விவரிப்பிலிருந்து தெரிகிறது. எனினும் நண்பர்களாகச் சில பேரை அவர் எழுத்துகளிலிருந்து சொல்ல முடியும். வ.ரா., கு. அழகிரிசாமி, வி.வி. சடகோபன், மஞ்சேரி ஈசுவரன், ந.சிதம்பர சுப்ரமண்யம், சக பத்திரிகைத் தோழர்களாக கி.வா.ஜ., த.நா.சேனாபதி, த.நா. குமாரசாமி, ஆர்.வி. இப்படிச் சிலரைச் சொல்ல முடியும். தொடக்க கால நண்பர்களாகத் திரைப்படத் தயாரிப்பாளரான ஏ.வி. மெய்யப்ப செட்டியார், இவரது நூல்களை வெளியிட்ட பழனியப்பா பிரதர்ஸ் பழனியப்ப செட்டியார் ஆகியோரையும் குறிப்பிட முடிகிறது. பழனியப்ப செட்டியாரைப் பற்றிக் குறிப்பிடும் போது,

''இவர் தான் என்னுடைய பாங்கி, மற்ற பாங்கிகளிலெல்லாம் பணம் போட்டால் தான் எடுக்கலாம். இந்தப் பாங்கில் பணம் போடாமலே எடுக்கலாம்'' என்று சிரித்துக் கொண்டே கூறுவாராம். அதிலே ஆழ்ந்த நன்றி கலந்திருக்கும்'' என்று ஒரு சம்பவத்தை நினைவு கூர்கிறார் தி.ஜ.ர. வின் மற்றொரு நண்பரான அழ. வள்ளியப்பா (மஞ்சரி, நவம்பர் 1975).

தி.ஜ.ர.வுக்கு மணி விழா நடந்த சமயம், கலைமகள் அதிபர் நா.ராமரத்னம், ஏ.வி.மெய்யப்ப செட்டியார், பழனியப்ப செட்டியார் ஆகியோர் மிகுந்த பொருளுதவி செய்திருக்கின்றனர்.

குருவாக, வ.ரா.வை எண்ணிப் போற்றிய தி.ஜ.ர. தம் நெருங்கிய நண்பராக மஞ்சேரி ஈசுவரனைக் கருதுவதாகத் தெரிகிறது. மஞ்சேரி ஈசுவரனின் பல ஆங்கிலக் கதைகளைத் தி.ஜ.ர. தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். பின்னர் அவை 'கொலுசு', 'சிங்காரி' என்ற பெயர்களில் நூல்களாகவும் வந்ததாகத் தெரிகிறது. 'மஞ்சேரியும்' தி.ஜ.ர.வின் பல கதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததாகத் தெரிகிறது. திருவல்லிக்கேணியில் வாழ்ந்த காலத்தில் அடிக்கடி இருவரும் கடற்கரைக்கு உலவச் சென்றதைத் தி.ஜ.ர. ஒரு கட்டுரையில் பதிவு செய்திருக்கிறார்.

தி.ஜ.ர.வின் சமகால எழுத்தாளர்கள் தி.ஜ.ர.வை அடக்கத்திற்கு இலக்கணமாகவே பார்த்திருக்கிறார்கள். ஒரு தலைமுறையின் அடையாளமாகவும் அவரைப் பார்த்த எழுத்தாளர்கள் உண்டு.

எழுத்தாளர் கு.அழகிரிசாமி, தி.ஜ.ர.வைச் சாதாரணமாக மற்றவர்களிடம் காண முடியாத அளவுக்கு மிகுந்த எளிமையும் அடக்கமும் பணிவும் கொண்டவராக எடை போடுகிறார். சிறு பையன்களைக்கூட நீ, நான் என்று ஏக வசனத்தில் குறிப்பிட மாட்டாராம். குழந்தைகளோடு குழந்தையாகப் பேசுவார். தமக்குக் கீழே பணியாற்றுகிறவர்களைச் சம அந்தஸ்தில் வைத்து

நண்பர்களாகவே நடத்துவார். அதிகாரம், ஆடம்பரம், சுய விளம்பரம், படாடோபம் போன்றவற்றை அவரிடம் மருந்துக்குக் கூட காண முடியாது. அவரிடம் உதவி ஆசிரியர்களாகப் பணியாற்றியவர்களும் ஏகலைவனைப் போல் எங்கோ இருந்து கொண்டு அவருடைய எழுத்துகளை வாசித்துத் தமக்கு வழிகாட்டிகளாய்க் கொண்டவர்களும் தங்கள் குரு என்று உரிமையோடு சொல்லிப் பெருமைப்படுகிறார்கள். இதற்கு அவருடைய எழுத்துகளை மட்டுமின்றி, அவரிடம் பூரணமாக நிறைந்திருக்கும் உத்தமப் பண்புகளையும் காரணமாகச் சொல்ல வேண்டும்.

என்று கு. அழகிரிசாமி, இவரது பண்பு நலன்களைச் சிறப்பாக எடுத்துச் சொல்கிறார் (கு.அழகிரிசாமி கட்டுரைகள் - ப.425)

தி.ஜ.ர. 25 ஆண்டுகள் பணிபுரிந்த 'மஞ்சரி' இதழின் பதிப்பாளர், தி.ஜ.ர.வின் அடக்கமான சுபாவத்தையே விதந்து பேசுகிறார். 'மஞ்சரி' யில் பணிபுரிந்த காலத்தில் அவர் நடந்து கொண்ட விதத்தை கூறுவது, தி.ஜ.ர.வின் பக்குவப்பட்ட தன்மையை எடுத்து விளக்குவதாக இருக்கிறது. அது தி.ஜ.ர.வின் பெருமையை உயர்த்துவதாக அமைகிறது.

"தி.ஜ.ர. எல்லோருக்கும் தெரியும். எப்போதுமே அடக்கமான சுபாவம். மிதமாகத்தான் பேசுவார். பிறர் சொல்வதைக் கவனமாகக் கேட்பார். ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் சுருங்கச் சொல்வார். அது தெளிவாகவும் இருக்கும். எந்தச் சமயத்திலும் குறை கூறிக் கொண்டு என்னை அவர் தேடி வந்ததேயில்லை. எப்போதும் தம் வேலையில் கண்ணும் கருத்துமாக இருந்து தான் பார்த்திருக்கிறேன்".

"எப்போதும் புகழை அவர் நாடியதில்லை. அவரது சிறுகதைத் தொகுப்புக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு அவரைத் தேடி வந்தது. குழந்தை இலக்கியத்தை வளர்த்தவர் என்ற முறையிலும் தமிழக அரசின் பரிசு கிடைத்தது. நுண்ணிய கருத்துக்களைத் தெள்ளத் தெளிய வெளியிடும் ஆற்றல் தமிழ் மக்கள் அறிந்ததே!" (மஞ்சரி,டிசம்பர் 1972)

தி.ஜ.ர. 'மஞ்சரி' யிலிருந்து ஓய்வு பெற்ற போது, அதன் பதிப்பாளர் மஞ்சரியில் எழுதிய குறிப்புகளில் சிறு பகுதி மேலே கண்டது.

பதிப்பாளர் - ஆசிரியர் என்ற உறவில் இத்தகைய பாராட்டு கிடைக்கும்படி பணியாற்றுவது எவ்வளவு கடினம்? தி.ஜ.ர.வின் இயல்பான குணங்களே அவரது வெற்றிக்குக் காரணம். அதே போல மஞ்சரியின் நிறுவனத்திலிருந்து வெளிவரும் மற்றொரு பத்திரிகை

யான 'கலைமகளில்' பல காலம் ஆசிரியராகப் பணியாற்றியவரும், 'மஞ்சரி'யில் தி.ஜ.ர.வின் கீழ் பல்லாண்டு காலம் பணியாற்றிய வருமான எழுத்தாளர் கி.வா.ஜ., தி.ஜ.ர.வின் பண்புநலனைப் பற்றிப் பேசுவதும் அடக்கம் பற்றித்தான்.

''அவருடைய தோற்றத்தில் எந்தவிதமான பொலிவும் இல்லை. அவருடைய ஆடையிலும் பொலிவு இல்லை. அவருடைய பேச்சிலும் படாடோபம் இல்லை. நடக்கும் நடையில் கம்பீரம் இருந்ததில்லை'' (கலைமகள், நவம்பர் 1974)

இலங்கை எழுத்தாளரும், இலங்கை வானொலி, பி.பி.சி. வானொலி ஆகியவற்றில் பணியாற்றியவருமான சோ. சிவபாத சுந்தரம், தி.ஜ.ர.வின் மறைவையடுத்து எழுதிய இரங்கல் குறிப்பு இவ்வாறு சொல்கிறது.

''தி.ஜ.ர.வை நினைத்துப் பார்த்தால் கல்லாலிருந்த தஷிணா மூர்த்தியோ என்று கருதத் தோன்றுகிறது. சுயம்புவாக எழுந்த இலக்கிய மூர்த்தி, எழுத்தாளர்களுக்கு எழுத்தாளராயிருந்த ஒரு யோகி, கசங்கிய கதருக்குள் ஒடுங்கிய சிறிய உருவம். வழிபாட்டுக் குரிய எழுத்து வித்துவம்'' (நூலகம், நவம்பர் 1974).

கி.வா.ஜ. போலவே மஞ்சரியில் தி.ஜ.ர.வுடன் பணியாற்றிய வரும், தி.ஜ.ர.வின் ஓய்வுக்குப் பிறகு, மஞ்சரியின் ஆசிரியப் பொறுப்பேற்றவருமான மொழிபெயர்ப்பாளர் த.நா. சேனாபதி, தி.ஜ.ர.வின் பண்பு நலனைப் பற்றிச் சொல்வதும் குறிக்கத் தக்கது.

''அவருடைய (தி.ஜ.ர.வுடைய) பெருந்தன்மைக்கு ஓர் உதாரணம். தாமே எழுதிய கட்டுரையாக இருந்தாலும் என்னிடம் தந்து 'எதற்கும் நீங்கள் ஒரு தரம் பார்த்து விட்டுக் கொடுங்கள்' என்பார். வயதில் பல ஆண்டுகள் இளையவனான என்னை அவர் நீ என்று அழைத்தாலும் தவறில்லை. ஆனாலும் மறந்தும் அவர் அப்படி அழைத்ததில்லை! ஹிந்தி, வங்காளி இன்னும் சில மொழிச் சொற் களின் சரியான உருவத்தை அன்பர் கா.ஸ்ரீ.ஸ்ரீ. யிடமிருந்தோ, என்னிடமிருந்தோ கேட்டு அறிந்த பிறகே எழுதுவார். தமிழிலக்கியம் பற்றிய கட்டுரைகளை, கி.வா.ஜ. அவர்களிடம் காட்டி விட்டு அச்சுக்குக் கொடுங்கள் என்பார்.'' (மஞ்சரி, நவம்பர் 1974)

இத்தகைய அடக்கமும் உயர் பண்பும் அவரை எவரும் மதித்துப் போற்றியதற்கு முக்கிய காரணம்.

'ராஜ ரங்கன்' என்ற புனை பெயர் கொண்ட ரங்கராஜன், தி.ஜ.ர. வால் புனைபெயர் சூட்டப்பட்டு அவரால் உருவான எழுத்தாளர். பின்னர்க் கணிதப் பேராசிரியரான இவர், தி.ஜ.ர.வைக் குருவின்

இடத்தில் வைத்துப் போற்றுகிறார். தி.ஜ.ர.வின் நூற்றாண்டு விழாவின்போது (2001) தி.ஜ.ர.வின் உயர்ந்த குணங்களைப் பாராட்டி 'மறவாக்கணங்கள்' என்ற கட்டுரையை மஞ்சரியில் எழுதினார்; அதிலும் தி.ஜ.ர.வின் அடக்கமும், வானொலிப் பித்தும் சதுரங்கப் பிரியமும் இடம்பெற்றுவிட்டது.

***தி.ஜ.ர.வின் இறுதி நாள்கள்***

முதுமையிலும் உழைத்தாக வேண்டும் என்ற குடும்பச் சூழ்நிலையே தி.ஜ.ர.வின் இறுதி நாள்களில் அவரது உள்ளத்தையும் உடலையும் பாதித்துவிட்டது. சென்னையில் வைத்துக் கவனிக்க இயலாது போக, நெய்வேலியில் இருந்த மூன்றாவது மகன் சேஷாத்திரியின் பொறுப்பிலும், நெய்வேலி மருத்துவமனை ஒன்றில் வேலையாய் இருந்த இரண்டாவது மகன் பார்த்தசாரதியின் பொறுப்பிலும் நெய்வேலி மருத்துவமனை ஒன்றில் தி.ஜ.ர. சிகிச்சை பெற்றார். அந்த இறுதிக் காலத்தின் நிலையை எழுத்தாளர் த.நா. சேனாபதி இப்படி எழுதுகிறார்.

"1974 ஜூலை - ஆகஸ்ட் மாத வாக்கில் அவரது உடல் நிலை சீர் கெட்டு விட்டது; மறதிக்கு வேறு ஆளானார். இந்திய விடுதலை இயக்கத்தில் சிறை சென்றவர் என்ற முறையில் அவருக்கு மானியத் தொகை வழங்க ஏற்பாடு செய்யும் முயற்சியில் அன்பர் கி.வா.ஜ. அவர்கள் ஈடுபட்டார்கள். மத்திய அரசினர் குறிப்பிட்டபடி சிறை சென்றதற்குரிய சான்றிதழ்கள் குறித்தும் தெரிவிக்க கி.வா.ஜ. (அன்றைய தமிழ் நாட்டு) முதல் அமைச்சர் கலைஞர் மு.கருணாநிதி அவர்களை நேரில் கண்டார். பின்பு செய்யுள் வடிவில் அவருக்கு உருக்கமான முடங்கல் ஒன்றும் தீட்டி அனுப்பினார். முதலமைச்சர் அவர்களுக்கு அன்று உடல் நிலை சரியில்லை. அப்படியிருந்தும் முடங்கல் கண்டதுமே அவர் முதலமைச்சர்நிதியிலிருந்து ரூ.3000 வழங்கியதோடு விடுதலை இயக்கப் போராட்டத்தில் சிறை சென்ற தியாகிகளுக்கான மானியத் தொகை மாதந்தோறும் தி.ஜ.ர.வுக்கு அளித்திட மத்திய அரசுக்குப் பரிந்துரையும் வழங்கினார்".

என்று த.நா. சேனாபதி தி.ஜ.ர. வின் இறுதி நாள்களின் நிலையை நினைவுகூர்ந்து வருந்தினார்.

"இறுதி நாள்களில் அளவிறந்த பலவீனத்தால் அவரால் பேசக்கூட முடியவில்லை. சிந்திக்கவும் திராணியில்லை. சிறந்த சிந்தனையாளராகிய அவருடைய மூளை பழைய நினைவுகளை மறந்து போகும் அளவுக்கு மெலிந்திருந்தது" என்று கி.வா.ஜ. எழுதுகிறார் (கலைமகள், நவம்பர் 1974)

எந்த மனித முயற்சிக்கும் பயனின்றி, 1974 அக்டோபர் மாதம் 19 ஆம் நாள், தி.ஜ.ர. அமரரானார்.

தி.ஜ.ர. காலமான அதே காலப் பகுதியில் தமிழ்ப் பெருமக்களான ராய. சொ., பி.டி. இராஜன், திருவாசகமணி பாலசுப்பிரமணியம், டாக்டர் மு.வ. ஆகியோரும் காலமானார்கள். இவ்வனைவர் மறைவுக்கும் சேர்த்துப் பொது இரங்கல் குறிப்பைத் 'தமிழ் நாட்டின் இழப்புகள்' என்ற தலைப்பில் எழுதிய 'தீபம்' (நவம்பர்,1974) இலக்கிய இதழ்(தி.ஜ.ர. குறித்து) பின் வருமாறு எழுதியிருந்தது;

"தி.ஜ.ர. அவர்களின் மறைவோடு எழுத்துலகின் ஒரு பழைய சகாப்தம் மறைந்து விட்டது...இப் பெரியார்கள் அனைவரும் தமிழ் நாட்டை வளமாக்கியவர்கள், வாழ்வித்தவர்கள், நல்லவர்கள், இவர்கள் அடுத்தடுத்து மறைந்ததனால் மரண தேவன் மேல் நமக்குக் கோபமே கூட வருகிறது. இந்த உத்தமர்கள் போற்றிய நற்பண்புகளை எதிர்காலத் தமிழ் நாட்டில் வரும் தலைமுறையினர்க்குக் காத்து அளிப்பதன் மூலமே இவர்களைக் கெளரவிக்க முடியும்".

மற்றொரு இலக்கிய இதழான 'கணையாழி' (நவம்பர், 1974) தி.ஜ.ர. மறைவு குறித்து ஒரு உருக்கமான இரங்கலை அவரது எழுத்துச் சாதனையையும் மதிப்பிட்டு எழுதியிருந்தது.

"தி.ஜ.ர.வின் வாழ்க்கை சார்லஸ் டிக்கன்ஸின் பாத்திரச் சாயல் கொண்டதாக இருந்தது. பலவிதமான குறைகள் - அவதிகள் - கஷ்டங்கள் நடுவில் சுறுசுறுப்பு - உற்சாகம் - நம்பிக்கை - அறிவுத் தேடல். ஒரு விதத்தில் அவர் ஒரு தலைமுறைப் பிரதிநிதி. காலம் அத்தலைமுறையை அநேகமாக நினைவாகவே மாற்றிவிட்டது- அப்பிரதிநிதிகளை நம்மிடையிலிருந்து அகற்றி.

உரைநடைத் தமிழைப் பத்திரிகை வாயிலாகச் சக்தி வாய்ந்த வெகுஜனப் பரிமாற்றல் சாதனமாக அமைத்ததில் வெற்றி கண்ட சம காலத்தினர் தி.ஜ.ர., கல்கி போன்றோர். அவர்களுடைய சாதனை அவர்கள் பத்திரிகை ஆசிரியர்களாகப் பணியாற்றியதை மிகவும் சார்ந்திருந்தது. ஆற்றல் ஒரே மாதிரியாக இருந்தாலும் வாய்ப்புகள் வெவ்வேறு வகைப்பட்டதாகப்போயின. உச்சத்திற்குப் போக வேண்டுமானால் hitch your wagan to a star என்பார்கள். தி.ஜ.ர. அதைச் செய்யவில்லை."

தீவிர இலக்கியத்தோடு, அரசியல் நிலைப்பாடும் கொண்ட 'தாமரை' இதழும் (நவம்பர்1974) தி.ஜ.ர. பற்றி இரங்கல் குறிப்பை எழுதியிருந்தது. அதில் ஒரு பகுதி;

"கற்பனை வளமும் எழுத்து வன்மையும் புதுமைக் கருத்துகளும் கொண்டு திகழ்ந்த எழுத்தாளர் வரிசையில் அவருக்கு (தி.ஜ.ர.வுக்கு) முக்கிய இடம் உண்டு... தேசபக்த உணர்வுடன் எழுத்துப் பணிபுரிந்து நாட்டு மக்களுக்குச் சேவை செய்த அவர் எளிமையும் அடக்கமும் ஆற்றலும் கொண்ட எழுத்தாளராவார். நூல்களைப் படிப்பதில் பேரார்வம் கொண்ட அவருடன் உரையாடும் போதே அவரது இலக்கிய ரசனை முனைப்பாகத் தெரியவரும். எந்த நூலையும் படித்து கிரகித்து அதன் கருத்தை ரத்தினச் சுருக்கமாக எடுத்து எழுதுவதில் அவருக்கு நிகர் அவரே. அவர் எழுதியுள்ள சிறுகதைகள் மிகச் சிறந்த சமுதாயச் சித்திரங்களாகும்."

யதார்த்தச் சித்திர வார்ப்பையே தி.ஜ.ர. வின் சிறப்பியல்பாகத் 'தாமரைக்' குழுவினர் சொல்வதை அவரது இலக்கியத்தைப் படித்தால் நிச்சயம் நம்பலாம்.

தி.ஜ.ர.வோடு பல காலம் பழகி நட்புரிமை பூண்டிருந்த எழுத்தாளர் கி.வா.ஜ., தி.ஜ.ர.வின் மறைவையொட்டி கலைமகளில் எழுதிய இரங்கலுரை, அவரது பண்புருவைச் சித்திரிக்கும் சித்திரமாகும்.

"ஊதுவத்தி உருவத்தால் பெரியது அல்ல; ஆனால் அதன் மணம் எங்கும் பரவியிருக்கும். அது தன்னை அழித்துக் கொண்டாலும் அறை முழுவதும் அதன் மணம் கம்மென்று வீசும். தி.ஜ.ர. எளிமையின் வடிவம். இலைமறை காய் போல வாழ்ந்த அறிஞர். தெளிவான சிந்தனையும் தெளிவான எழுத்தும் உடைய படைப்புச் செல்வர். அவர் மறைந்துவிட்டார். ஆனாலும் அந்த ஊதுவத்தியின் மணம் தமிழ் இலக்கிய உலகில் மணந்து கொண்டே இருக்கும். தி.ஜ.ர.வை நினைக்கும்போது இந்த உவமைதான் சொல்லத் தோன்றுகிறது" (கலைமகள், நவம்பர் 1974).

இதேபோல, தி.ஜ.ர.வின் இனிய நண்பரான மஞ்சேரி ஈசுவரன், தி.ஜ.ர. பற்றிச் சொல்லும் கருத்து தி.ஜ.ர.வின் இலக்கியம், அவரது வாழ்க்கையின் முழு பிரதிபலிப்பு என்ற எண்ணத்தையே ஏற்படுத்துகிறது. அவர் சொல்கிறார்:

"அவர் (தி.ஜ.ர.) அடக்கம் நிறைந்தவர். தொட்டாற் சுருங்கி, தம் உணர்ச்சிகளை முற்றும் அடக்கியாள்பவர். துன்பத்திலும் சாவிலும் தீரத்துடன் அனுதாபம் காட்டுபவர். ஒரு கணம் மலைத்து நிற்பவர். மறுகணம் வெற்றி காண்பார். ஆண்டவன் உண்டோ என்று சந்தேகம் கொள்வார். அவனைத் தொழவும் தொழுவார். சாந்தம் நிறைந்தவர். கண்டிப்பும் காட்டுவார். சுருக்கமாய்ச் சொல்லுவார். அது விளக்கமாய்

இருக்கும். கேலி செய்வார். அதில் பொருள் பொதிந்திருக்கும். களைத்திருப்பார்; மனம் சலிக்க மாட்டார். சகிப்புத் தன்மை, கச்சிதம், எளிமை, சாமர்த்தியம் இவை பொதிந்திருக்கும் அவர் எழுத்திலே, யாரோடும் சேராமல் ஒதுங்கியிருப்பார், கூடி வாழ்வதில் வெறுப்பில்லாதவர்" (நொண்டிக்கிளி, முன்னுரை).

தி.ஜ.ர.வின் குணச் சித்திரங்களே, அவரது இலக்கியமாக மாறியிருக்கிறது; அதாவது தி.ஜ.ர.வின் வாழ்க்கையே இலக்கியமாகியிருக்கிறது.

# 2
# சிறுகதைகள்

"தமிழ்நாட்டு வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் தெளிந்த கதைகள்; சரளமான தமிழ் நடை; கதாபாத்திரங்களின் சிந்தனை, பேச்சு, நடப்பு இவையெல்லாம் கதைகள் உண்மையாக நடந்தவையோ என்ற நினைவையெழுப்பும் அமைப்பு; வாழ்க்கையின் ஏதாவது ஓர் அம்சத்திலே ஒளியை வீசும் சிறுகதைக் கோப்பு" (சந்தனக் காவடி, முன்னுரை).

இது தி.ஜ.ர.வின் சிறுகதைகள் குறித்து, தமிழ் இலக்கிய விமர்சகர், தமிழ் எழுத்தாளர், ஆங்கிலப் பேராசிரியர் அ.சீனிவாச ராகவன் 1938இல் மதிப்பிட்டுச் சொன்ன கருத்து. தமிழில் சிறுகதைக் குழந்தை, தன் தளிர் அடியை எடுத்து வைத்துக் கொஞ்சம் வேகமாக நடக்கத் தொடங்கிய காலத்தில் சொல்லப்பட்ட கருத்து இது. தி.ஜ.ர.வின் சிறுகதைகளைச் சரியான திசையில் மதிப்பிட்ட கருத்து இது.

சந்தனக்காவடி (1938) என்ற முதல் சிறுகதைத் தொகுதியைத் தொடர்ந்து நொண்டிக்கிளி (1949), காளி தரிசனம் (?), மஞ்சள் துணி (1955), விசை வாத்து (1960) என்று ஐந்து சிறுகதைத் தொகுதிகளைத் தி.ஜ.ர. வெளியிட்டார். இவற்றில் உள்ள சிறுகதைகளையும் சேர்த்து மொத்தம் சுமார் 100 சிறுகதைகளைத் தி.ஜ.ர. எழுதினார்.

தமிழில் சிறுகதைகள் தோன்றி வளர்ந்து வந்த சூழலில் சிறந்த சிறுகதைகள் எப்படியிருக்க வேண்டும் என்ற தம் விருப்பத்தைத் தி.ஜ.ர. எழுதியிருக்கிறார். அதை அவரது சிறுகதை இலட்சியமாக நாம் கருதலாம்.

"ராஜாக்களும், மந்திரிகளும், ஜமீன்தார்களும், சர்வாதிகாரி களும், காதலரும் கன்னிப் பெண்களுமாகவே பாத்திரங்களைத் தேடிக் கொண்டிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ராஜாக்களை விட, ஏழை எளிய ஜனங்கள் தான் மிக அதிகம். இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் மனிதன் காதலையே சிந்தித்துக் கொண்டிருக்கவு மில்லை. மனிதனுக்குக் காதலைத் தவிர வேறு உணர்ச்சிகளே கிடையாவா? கோபமும், ரோஷமும், தீரமும், அச்சமும், மகிழ்வும், சோகமும், வியப்பும் ஆனந்தமும் எத்தனை எத்தனையோ விஷயங்

களில் ஏற்படுகின்றனவே - அவற்றையெல்லாம் காட்டக் கூடிய கதைகளை எழுதக் கூடாதா என்ன? நவரஸபரிதமான பலவிதக் கதைகளையும் நாம் எழுத வேண்டும்; படிக்கவும் வேண்டும்'' (சந்தனக் காவடி - 'இந்தச் சிறுகதைகள்' என்ற தலைப்பிட்ட முன்னுரை). இது தி.ஜ.ர. விருப்பம். அவ்விருப்பத்தைத் தம் கதைகளில் தி.ஜ.ர. நிறைவேற்ற முயன்றிருக்கிறார். 'சந்தனக் காவடி' கதையில் வருபவன் ஒரு பூசாரி. 'கல்யாணப் பெண்' கதையில் வரும் குடும்பங்கள் ஏழை, நடுத்தர வர்க்கத்துக் குடும்பங்கள், தி.ஜ.ர.வின் பாத்திரங்கள் பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்து உயர்சாதிக்காரர்கள் தாம், மற்றவர்கள் ரிக்ஷாக்கார வேலன் 'அதிருஷ்டச் சீட்டு' தலையாரி போன்ற கீழ்த்தட்டு மக்களே.

கதாபாத்திர உருவாக்கத்தில் வர்க்கச் சிந்தனையை நினைவூட்டும் படியான விருப்பங்களைச் சொன்ன தி.ஜ.ர., கதையில் கையாள வேண்டிய 'உணர்ச்சிகளை'ப் பற்றிப் பேசும்போது கால காலத்துக்கும் மனிதனை விட்டு நீங்க முடியாத கோபம், ரோஷம், தீரம், சோகம் முதலிய உணர்ச்சிகளைக் கொண்ட கதைகளைப் படைக்க வேண்டும் என வற்புறுத்துவதைக் கவனிக்க வேண்டும். அதேபோல, கதையின் பின்னணி பற்றிய தி.ஜ.ர.வின் கருத்தும் மரபின் திசையிலிருந்து விலகியதேயாகும்.

''ஆற்றங்கரை, நீலக்கடல், மஞ்சள் வெய்யில், செவ்வானம், பசுஞ்சோலை, இளம் தென்றல் போன்ற இடம், போதுகளுக்கே திரும்பத் திரும்பத் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டிய தேவையுமில்லை. கொட்டும் மழை, கொளுத்தும் வெயில், போரடி, நடவு வயல், உலைக்களம் இவை போன்ற கால - தேசங்களை நாம் பயன்படுத்தலாகாதா? (சந்தனக் காவடி - 'இந்தச் சிறுகதைகள்' என்ற முன்னுரையில்)

என்று தமிழ்ச் சிறுகதைக்குப் புதிய பகைப்புலனைப் பரிந்துரைத்து அவ்வாறே தம் கதைகளில் அமைக்கிறார். 'அந்தி வேளை' என்ற சிறுகதையின் முக்கிய கட்டம் கொட்டும் மழையில் நடக்கிறது. கதை கிராமக் கூத்தாடிகளின் கதை, அவர்கள் கூத்துக்குக் கட்டும் வேஷங்கள் அவர்களது இயல்புகளுக்கு ஏற்றது மாதிரி தேர்வு செய்யப்படுவது, கதையில் அழகான சித்திரிப்புக்குள்ளாகின்றது.

பெரும்பாலும் அயல் நாட்டுக் கதைகளையே மொழி பெயர்த்தும், தழுவியும் இஷ்டத்துக்குக் கதை பெருக்கிய காலத்தில் தி.ஜ.ர. கீழ்க்கண்டவாறு அவரது சிறுகதை இலட்சியத்தைப் பதிவு செய்கிறார்.

''நமது கதைகளில் நமது பழக்க வழக்கங்கள் நிறைந்திருக்க வேண்டும்; நமது நடையுடை பாவனைகள் விரவியிருக்க வேண்டும்; தேசிய மணம் கமழ வேண்டும். இதைவிட்டு, அந்நிய நாட்டுப் பழக்க வழக்கங்களைப் புகுத்தி எழுதுவது அசம்பாவிதமாகும். அதனால் பயனுமில்லை. இப்படிச் செய்வதைவிட, அயல்நாட்டுச் சிறந்த கதைகளை மொழி பெயர்ப்பதே மேலாயிருக்கும்'' (சந்தனக்காவடி, 'இந்தச் சிறுகதைகள்' என்ற முன்னுரையில்)

என்று தழுவி எழுதும் கதைத் திருட்டை மறைமுகமாகச் சாடுகிறார்.

கதையில் பிரசாரம் என்ற அம்சத்தை, வ.ரா. வின் சீடரான தி.ஜ.ர. ஏற்றுக் கொண்டவரே என்றாலும் அதிலும் தி.ஜ.ர.விற்குத் திடமான அபிப்பிராயம் உண்டு.

''கதைகள் ஒவ்வொன்றிலும் தெள்ளத் தெளியப் பிரசாரம் இருக்க வேண்டுமென்று எண்ணுவதும் தவறு. தற்காலத்தில் பிரசாரத்துக்கும் தேவையிருக்கிறது என்பது வாஸ்தவந்தான். ஆனால் மங்காப் புகழுடன் என்றும் பொலியக் கூடிய, கலைச்சுவை நிரம்பிய, சௌந்தரியமான கதைகளும் வேண்டும். அவைதான் திரும்பத் திரும்ப எவ்வளவு முறை படித்தாலும் அலுக்காத தெள்ளமுதமாயிருக்கும்''. (சந்தனக்காவடி, 'இந்தச் சிறுகதைகள்' என்ற முன்னுரையில்)

என்பவை தி.ஜ.ர.வின் சிறுகதைகள் பற்றிய கருத்துகளாகும். இக்கருத்துகளை யொட்டியே அவரது சந்தனக்காவடியின் தொகுதியிலுள்ள கதைகள் அமைந்துள்ளன.

**சந்தனக் காவடி**

தி.ஜ.ர.வின் முதல் சிறுகதைத் தொகுதியான இது 1938இல் வெளி வந்தது. இதில் சந்தனக் காவடி, கல்யாணப் பெண், ஆசிரியர் மாற்றம், அதிருஷ்டச் சீட்டு, கன்னியின் பிரார்த்தனை, சங்கு மோதிரம், பைத்தியக்காரி, 20 ஒ, சமாதானம், ரிக்ஷாக்கார வேலன், ஜோடிக் காளை, திருடனின் லஞ்சம் ஆகிய 12 சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. ஆங்கிலப் பேராசிரியரும், அந்தக் காலத்தில் நவீன இலக்கியங்களில் பரிச்சயம் பெற்றிருந்தவருமான அ.சீனிவாச ராகவனின் முன்னுரை, நூலின் கதைகளைத் தமிழ் நாட்டின் வாழ்வைப் பிரதிபலிக்கும் கதைகள் என்று பரிந்துரைக்கிறது.

தி.ஜ.ர.வின் முதல் கதையாக அறியப் பெறும் சந்தனக் காவடி கதை இத்தொகுப்பில் முதல் கதையாக இடம் பெற்றுள்ளது. இது

முதலில் 'ஊழியன்' இதழில், 'சந்தனக் காவடி', 'ஒரு கற்பனை' என்ற பெயரில் வெளியாகியுள்ளது. சேறு நிறைந்த செம்பு, கடவுளுக்கு எடுக்கும் காவடி பக்தியினால் சந்தனம் நிறைந்ததாக மாறி விடுகிறது. அது சந்தனக்காவடி. இதுபோலக் கற்கண்டுக் காவடியும் எடுத்துப் பிரசித்தி பெற்றவன் சாமுண்டி - இச்செயலைக் கடவுள் அருள், பக்தியின் பலன் என்றெல்லாம் நம்புகிறார் வைத்திய நாதய்யர். இல்லை இது வெறும் தந்திரம் என்று சொல்கிறார் கதைநாயகன். அதை நிரூபித்தும் காட்டுகிறார். கடவுள் இல்லை என்ற நாத்திக வாதம் மேலெழும்பாமல் தந்திரம், ஏமாற்று, மோசடி, சூது இது என்பதைக் கதை சொல்லி விடுகிறது. சொல்கிற முறையில் தெளிவு, வேறு பொருள் தொனிக்காமை, நகைச்சுவை ததும்பும் தன்மை இவை இக்கதையின் சிறப்புகள்.

'கல்யாணப் பெண்' அடுத்து இடம் பெறும் நீண்ட சிறுகதை. இது 'சுதேசமித்திரன்' இதழில் 'பணம் இழந்த பலி' என்ற பெயரில் வெளியாகி, நூலில் 'கல்யாணப் பெண்' என்ற பெயரில் இடம்பெற்றுள்ளது.

திறமைமிக்க, புத்திசாலியான ஒரு பெண்ணை, பணத்துக்காக, ஒரு பார்வையில்லாதவனுக்குத் தந்தை மணமுடித்து வைக்க முயல்கிறார். தாயும் பெண்ணும் அதிலிருந்து தப்பித்து ஓடும்போது, ஆற்றில் விழுந்து இறந்து போகிறார்கள். சோகம் ததும்ப எழுதப்பட்டிருக்கிறது இக்கதை. அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள, எதிர் ஜாமின் இல்லாமலே வரன் வந்தது. திருமணச் செலவையும் பெண்ணின் மாமா ஏற்றுக் கொள்ளத் தயாராயிருந்தார். ஆனால் பார்வையில்லாத ஒருவனுக்கு மணம் முடிக்கப் பெண்ணின் தந்தை முடிவெடுத்தார். அந்தப் பார்வையில்லாதவனின் தந்தை, தன் மகனுக்கு நல்ல பெண்ணைத் திருமணம் செய்து வைத்து ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் கெடுக்க விரும்பவில்லை. ஆனால் அவர் மனத்தைக் கரைத்து விடுகிறது சமூகமும் குடும்பமும். மற்றவரின் நன்மை X தனி மனிதனின் நன்மை - போராட்டம் பற்றிய கருத்துச் சிதறல்கள் இவ்விவாதத்தில் எழுகின்றன.

அதேபோல, பணத்துக்காக, தன் பெண்ணை ஒரு பார்வையில்லாதவனுக்குக் கொடுக்க ஏழைத் தந்தையும் முதலில் விரும்பவில்லை. சமூகம் அவரைக் கரைத்து விடுகிறது. எது சரி எது தவறு என்ற விவாதம் கதை முழுவதும் ஊடாடி நிற்கிறது.

கதை சோகத்தில் முடிந்து மனத்தைப் பிழிந்து விடுகிறது. சோக வர்ணனைகள் அருமை. சான்றுக்கு ஒன்று.

''ஆற்றின் பழைய சப்தம், சோலையின் பழைய ஓசை, சுவர்க்கோழியின் பழைய ஒலி; ஆனால் மூளிச்சந்திரன் மட்டும் ஆகாயத்தில் அலைந்து அந்தத் தனித்த மேகத்துக்குள் ஒளிந்து கொண்டது.'' (சந்தனக் காவடி)

இலக்கிய வழக்கில் தமிழ் எழுதும் ஒரு தமிழ்ச் சுவாமியார் பத்திரிகை நடத்தினால் என்ன நேரும் என்பதை (என்ன நேரும்? பத்திரிகையை மூட நேரும்!) விளக்கமாகச் சொல்கிறார் 'ஆசிரியர் மாற்றம்' என்ற கதையில்.

ஏழைக்கு விழுந்த லாட்டிரிச் சீட்டுப் பணத்தைப் பணக்காரன் ஏமாற்றிப் பறிக்க முயன்ற கதை 'அதிருஷ்டச் சீட்டு' கதை. ஒரு ஏழைத் தலையாரிக்கு விழுந்த லாட்டிரிச் சீட்டுப் பணத்தை அவன் உண்மை யாய் உழைத்த மணியக்காரர் அவனுக்குத் (பரிசு விழுந்தது கூட அவனுக்குத் தெரியாது) தெரியாமல் பறிக்கப் பார்க்கிறார். கர்ணத் தையும் துணைக்கு அழைக்கிறார். நல்ல உள்ளம் படைத்த கர்ணம் அதற்கு உடன்படவில்லை. அவனிடம் அதை இரகசியமாகச் சொல்லி விடுகிறார். அவன் இறந்து விடுகிறான். 'முனி' அடித்ததாக ஊரில் பேசிக் கொள்கிறார்கள் மணியம்தான் கொன்றிருக்க வேண்டும் என்று நினைக்கிறார் கர்ணம். கர்ணத்தின் படித்த மகன், உண்மையைக் கண்டு பிடிக்கிறான். கர்ணத்தின் மூலம் இரகசியம் அறிந்ததும், லாட்டிரிச் சீட்டைக் கூரையில் மறைத்து வைக்க முயலும் போது கழி முறிந்து கீழே விழுந்து இறந்து போகிறான் அந்த ஏழைத் தலையாரி. பயமும், திகிலும் அவனுக்கு மரணத்தை விரைந்து தந்திருக்க வேண்டும். 'முனி' அடித்ததும், பயத்தால் இறந்து போனதும் ஊராரின் கண்டுபிடிப்பு.

இக்கதை, கால காலமாய் நடக்கும் ஏமாற்றை, எளிய கிராமத்து நடப்பைக் கொண்டு விவரித்த கதை, கலைநயத்துடன் போகும் கதை, சொல்லிய முறையில் வாசிப்பவரிடம் தொடர்கிறது. அனாதையான அந்த ஏழை சிங்காரத்தின் மகன் பிச்சையைப் பார்த்துக் கர்ணம் மகன் இவ்வாறு சொல்கிறார்:

''பிச்சைப் பயலை இரண்டு மூன்று முறை நோக்கி, வியப்புற்றவர் போல நின்ற அவர், 'என்ன அதிர்ஷ்டம்! பிச்சையின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் என்றார் அதற்கு மேல் ஒன்றும் சொல்ல அவருக்குத் தோன்றவில்லை.'' (சந்தனக் காவடி) இது கதையை வாசகரிடத்தில் வளர்த்துச் செல்கிறது.

எதேச்சையாய்க் காமிராவில் பதிவான ஒரு படம், புகைப்பட நிபுணத்துவத்தைக் காட்டுவதாகப் பரிசு பெற்றது. புனைவுகள் எப்படி உருவாகின்றன என்பதை இடையோட்டமாகச் சொல்லுகிறது.

'கன்னியின் பிரார்த்தனை' கதை. காமிரா என்ற நவீன கருவி, ஒரு பழைய சமூகத்தில் நுழைகிற போது எதிர் கொள்ளும் பிரச்சனையும் அதை வியாபாரிகள் பயன் கொள்வதையும், நடுத்தர சமூகம் அதைப் பயன்படுத்தும் வகையையும் இக்கதை சுவையாகச் சொல்கிறது.

வடிவ ஒழுங்கும், அமைதியும், கச்சிதமும் உள்ள கலைச் சிறப்பு மிக்க கதை 'சங்கு மோதிரம்'. சங்கு மோதிரம் ஒன்றின் மீது கொண்ட மாறா ஆசை பற்றிய சித்திரிப்பு - அதன் ஊடே ஒரு காதல் கதை. தன்னுடன் பல காலம் வாழ்ந்த ஒருத்தியை. யாரோ அடிபட்டதாக நினைத்துத் தருமஉபகாரமாய்க் காப்பாற்றப்போய் அடிபட்டு மரணமடைகிறான் ஒரு ஏழைக் காய்கறி வியாபாரி. அவன் அவள் மேல் வைத்த அன்பு கதையில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒரு தேர்ந்த எழுத்தாளனுக்குரிய அம்சங்கள் நிறைந்த கதை 'பைத்தியக்காரி' கதை. சம்பவங்களைக் காரணம் சொல்லாமல் சித்திரித்து, அதன் மூலம் வாசகனை ஒரு மனநிலையில் கொண்டு வந்து நிறுத்திக் கதாசிரியன், அவனைப் பார்த்துச் சிரிப்பது போலத் தோன்றுகிறது இக்கதையைப் படித்த பிறகு. பசுபதி, தன் மனைவி காமு புத்தி சுவாதீனம் இழந்த பிறகு, குழந்தையைப் பார்த்துக் கொள்ளச் சுந்தரியை இரண்டாம் மனைவியாக மணக்கிறார். தான் முன்னர் இழந்த குழந்தையெனவே நினைத்து இக்குழந்தையை அன்புடன் வளர்க்கிறாள் சுந்தரி. திடீரென ஒரு நாள் காமு, குழந்தை குஞ்சுவை அழைத்துக் கொண்டு பாழடைந்த கோவிலில் புகுந்து விடுகிறாள். புருஷன் போனான். குழந்தையையும் போக விடமாட்டேன் என்று காமு புத்தி சுவாதீனம் வந்தது போலப் பேசுகிறாள். ''சுந்தரி நகைகளைக் கழற்றி எறிந்துவிட்டு, எங்கேயோ போய் விட்டாள்? யார் கண்டது'' என்று கதை முடிகிறது.

சுந்தரி ஏன் போனாள்? எங்கே போனாள்? குஞ்சு என்னவானாள்? காமுவுக்குப் பைத்தியம் தெளிந்ததா? - இவையெல்லாம் கேள்விகள். பதிலைப் படிக்கும் வாசகரிடத்தில் தான் கேட்க வேண்டும். சுவாரசியமான கதை. தேர்ந்த எழுத்தாளரே இம்மாதிரி கதைகளைப் படைக்க முடியும்.

தி.ஜ.ர.வுக்குக் கிராம கர்ணம் வேலை பார்த்த அனுபவம் உண்டு என்பதை நிரூபிக்கும் கதை 20 ஓ என்ற கதை. இசைப் போட்டியில் தனக்காக விட்டுக் கொடுத்த வாலிபனின் இசைத் திறமையைப் பாராட்டப்போன பெண். அவனது இசைத் திறமையிலும் கம்பீரத்திலும் மயங்கி அவனையே மணந்து கொண்ட காதல் கதை 'சமாதானம்' என்ற கதை.

தி.ஜ.ர. தன் சொந்த அனுபவத்தோடு கொஞ்சம் கற்பனையையும் சேர்த்துச் செய்த கதை ''ரிக்ஷாக்கார வேலன்''. தானம், பிச்சை முதலியன பெறாமல் உழைத்து வாழ வேண்டும் என நினைத்த ஒரு ரிக்ஷா தொழிலாளியின் மானம் போற்றிய கதை.

மனிதன் இழுக்கும் ரிக்ஷாவில் ஏற விரும்பாத கதாநாயகன். ரிக்ஷாக்காரனின் பரிதாப நிலைக்கு இரங்கி, காசு தானம் செய்ய, அவன் மறுத்துவிடுகிறான். மறுப்பைக் கேவலமாக எதிர்கொண்ட கதாநாயகனின் காதைக் கடித்து விடுகிறான் ரிக்ஷாக்கார வேலன். அது குற்றமாகி ஒன்றரை ஆண்டு சிறைத் தண்டனையும் பெறுகிறான். சிறையிலிருந்த காலத்தில், வேலனின் குடும்பத்திற்குக் கதாநாயகன் வற்புறுத்தி உதவி செய்து வருகிறான். சிறை மீண்ட வேலன் கதாநாயகன் உதவிய பணத்தை, உழைத்துத் திருப்பிச் செலுத்தி விடுகிறான். கதாநாயகனைப் பார்ப்பதையும் முற்றாகத் தவிர்த்தான். உழைப்பின் வலிமையை, மான வீரனைக் காட்டும் கதை.

தி.ஜ.ர.தன் முதல் சிறுகதைத் தொகுப்பில் முழு வெற்றி பெற்றிருப்பதாகக் கருதலாம். தன் சொந்த அனுபவங்களைக் கதையாக்குவதில் அவர் வெற்றி பெற்றிருக்கிறார். அவரது சொந்த அனுபவங்கள் எனும்போது, ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் வாழ்ந்த ஒரு மனிதனின் அனுபவங்கள். அந்தக் காலப் பகுதியில் சமூகத்தில் நிகழ்ந்த, நிகழ்ந்து கொண்டிருந்த அத்தனை கலை, இலக்கிய, சமூக, அரசியல் மாற்றங்களையும் உள் வாங்கிய அனுபவங்கள். அந்த மனிதனின் சமூக, பொருளாதார நிலைக்கு ஏற்றவாறு செய்யப்பட்ட யதார்த்தச் சித்திரிப்பு என்ற நிலையில் சந்தனக்காவடி வெற்றி பெற்ற படைப்பு. கால மாறுதலான இன்றைய நிலையிலும் கதையைப் படிக்க முடிவது இன்னுமொரு சிறப்பு.

### நொண்டிக் கிளி

தி.ஜ.ர.வின் இரண்டாவது சிறுகதைத் தொகுதி 'நொண்டிக் கிளி' 1949 இல் வெளியானது. முதல் தொகுதி வந்து பல பதிப்புகள் கண்ட பிறகு, இரண்டாவது தொகுதி 11 ஆண்டுகள் கழித்து வெளியானது. அவர் காரியமாற்றிய, கலைமகள் காரியாலயத்திலிருந்து இது வெளி வந்தது. இத்தொகுதியில் நொண்டிக் கிளி முதலிய 15 கதைகள் இடம் பெற்றுள்ளன.

''கதைகள் பல மனநிலைகளில், சுமார் இருபது வருஷத்துக்கு மேற்பட்ட காலத்தில் எழுதப் பெற்றவை. ஒன்று போல ஒன்று இல்லை என்பதை நான் உணர்கிறேன். அதுவே இதன் குறை. அதுவே இதன்

பலம். ஒருவருக்கு ஒரு மனநிலையில் பிடிக்காத ஒரு கதை. அவருக்கே மற்றொரு மனநிலையில் பிடிக்கலாம். மற்றொருவருக்கு நிச்சயமாய்ப் பிடிக்கலாம்.'' (நொண்டிக் கிளி. ஆசிரியர் குறிப்பு)

என்று தி.ஜ.ர. ஆசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறார். தி.ஜ.ர.வின் நெருங்கிய நண்பர் மஞ்சேரி எஸ். ஈசுவரன் முன்னுரை எழுதியிருக்கிறார்.

''இந்தத் தொகுப்பில் உள்ள சகலமுமே சிறு கதைக்குச் சிறந்த உதாரணங்களாக விளங்குகின்றன. இதிலே பற்பல விதமான கதைகள் இருக்கின்றன... அந்தக் குஷியான போக்கிரி பீதாம்பர ஐயர், சூட்சுமமான கேலி நிறைந்த 'நவீன கதாசிரியன்'. அன்பும் உருக்கமும் ததும்பும் 'பொம்மை யானை', நம்பிக்கையும் கருணையோடு கூடிய சிலேடையும் பொதிந்த 'மரத்தடிக் கடவுள்' ஆகியவை எனக்கு விசேஷ இன்பம் கொடுத்தன'' என்று ஈசுவரன் அந்த முன்னுரையின் ஒரு பகுதியில் கூறுகிறார்.

ஊனமானவள் என்பதற்காகத் தன்னைத் திரஸ்கரித்துப் போன காதலனின் மேல் கோபம் கொண்டு திருமணத்தையே நிராகரித்த பெண்ணின் மன அவசங்களின் விவரிப்பு 'நொண்டிக்கிளி' என்ற கதை.

நொண்டிக்கிளி ஒன்று வந்தது - அதை
நோஞ்சல் பூனை ஒன்று கண்டது
அண்டிப் பிடிக்கத் துணிவின்றி - உயர்
அம்பரம் பார்த்தது நின்றது.

பச்சைக் கிளி ஒன்று வந்தது - அதைப்
பஞ்சைப் பூனை ஒன்று கண்டது.
இச்சை இறந்த தவசி போல் - மனம்
ஏங்கிடக் கண் மூடிக் கொண்டது.

கொண்டைக் கிளி ஒன்று வந்தது - அதைக்
கோயில் பூனை ஒன்று கண்டது.
மண்டிடும் ஆசையோ டம்புபோல் - பாய
மாயக் கிளி அங்கே செத்தது. (நொண்டிக் கிளி)

என்ற (தி.ஜ.ர.வே இயற்றிய) பாடலின் வரிகளைக் கொண்டு கதையைத் தி.ஜ.ர. நடத்திச் செல்லுகிறார். இந்தக் கதை நனவோடை உத்தி முறையில் எழுதப்பட்டுள்ளது. துக்கம் பொங்கும் கதாநாயகிப் பாத்திரம் 'அநேக அம்சங்களில் துர்கனேவ் என்ற ஆசிரியரின் 'ஆன் தி ஈவ்' என்ற கதையில் வரும் எலீனா என்ற பாத்திரத்தை நினைவுபடுத்துகிறது என்று முன்னுரையில் ஈசுவரன் கூறியுள்ளார்.

இந்தியாவை ஆண்ட ஆங்கிலேய அதிகாரிகளின் தடபுடலும் படாடோபமும், நம் மக்களின் அறியாமைக் கொடுமையும் விளங்கும்படி எழுதப்பட்டிருக்கிறது புலி வேட்டைக் கதை.

''சிட்டிபாபு வின் அறியாமையால் பிறந்த புலி, இப்படி வெறும் புரளியாக முடிந்து விட்டதென்றாலும் மகிழம்பூர் கிராமவாசிகளின் கிலி மாத்திரம் இன்னும் நீங்கவில்லை. எங்கள் ஊரிலே புலி இருக்கிறது என்று அவர்கள் ஒவ்வொருவரும் இன்னும் பெருமை யடித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்'' என்று முடியும் அக்கதை, புலி வேட்டையை நிமித்தமாகக் கொண்டு, அதிகார மமதையையும், அறியாமைப் பேதமையையும் கேலி செய்யும் கதையாகும்.

சைக்கிள் தூது - எனும் அடுத்த கதை, எல்லோரும் 'கொல்' என்று சிரித்தார்கள் என்று முடியும் சராசரி தமிழ்ச் சிறுகதை. காதலர்களின் கடிதங்களைக் கண்ட காதலியின் அண்ணன், வேறு இடத்தில் நிச்சயிக்கப்பட்ட தங்கையின் திருமணத்தை நிறுத்தி, காதலர்களின் திருமணத்தைச் சூழ்ச்சியாக நடத்தித் திகைக்க வைத்த கதை. இதிலும் நொண்டிக் கிளி கதையில் இடம் பெறுவது போலவே ஒரு காதல் கவிதை இடம் பெறுகிறது. அதை எழுதியது டி.ஸி. தீத்தாரப்பன் என்ற அடிக்குறிப்புடன்.

'காதில் ஊசல் ஆடும் அந்தக்
கர்ண குழை ஆகேனோ
கோதி விட்ட குழலும் ஆகிக் கன்னந்
தொட்டுக் களியேனோ

என்பது அந்தப் பாடல் (நொண்டிக்கிளி).

தி.ஜ.ர. மேற்குலகின் அறிவியல் கருத்துகள், கிழக்கு நாடுகளில் பரவத் தொடங்கிய காலத்தில் எழுதிய கதாசிரியர். அறிவியல் கருத்துகளும் மரபான கீழைக் கருத்துகளும் மோதிக் கொண்ட காலம் இவர் காலம். எதையும் அறிவியல் பார்வையோடு பார்த்த பார்வை தி.ஜ.ர.வின் பார்வை. அவ்வகையில் அமைந்த கதை பீதாம்பரையர் கதை. மாய, தந்திரக் காட்சிகளை, வெறும் தந்திரக் காட்சிகள் தாம் என்று நிருபிக்கும் ஒருவனின் விவரிப்புகள் கொண்டது இக்கதை. பல காட்சிகளையும் தந்திரம் என்று கண்டுபிடித்து விடும் அவன் வாயுஸ்தம்பன காட்சியின் தந்திரத்தை, வித்தையின் மர்மத்தைக் கண்டுபிடிக்க முடியாமல் திணறுகிறான்.

''அற்புதமான அந்த வாயுஸ்தம்பனக் காட்சி இன்னும் என் கண் எதிரே நிற்கிறது. ''வாழ்வோர் வாழ் வென்றுரைக்கும் இந்த வர்ணத் திரையைத் தூக்காதே'' என்று பாடினார் ஓர் ஆங்கிலப் புலவர். அந்த வர்ணத்திரையைத் தூக்க முயன்றால் உண்மையை நாம் கண்டு

விடலாம்; கண்டு விடுகிறோம். ஆனால் கண்டு அடையும் பயன் என்ன? வெறும் ஏமாற்றந்தான். சில சமயம் பயங்கரமாகவும் இருக்கும். சத்தியம் ஏமாற்றத்திலும் பயங்கரத்திலுந்தானா இருக்கிறது? அழகிலும் இன்பத்திலும் இல்லையா?''

என்று உண்மையின் தரிசனத்தை விளக்கி முடிகிறது அக்கதை.

பாரம்பர்யப் பெருமை, பணத்திமிர் ஆகியவை தடுப்புச் சுவராகி மற்றவரோடு இணங்கி வாழத் தெரியாமல், வாழ்க்கையை இருட்குகைக்குள் தள்ளிக் கொண்ட பெரிய பெரிய குடும்பங்கள் வாழ்ந்த காலம் தி.ஜ.ர.வின் காலம். இதைப் போன்ற குடும்பமொன்றின் கதை தான் 'பணக்காரி' கதை. பணக்காரத் தந்தையின் பணத்திமிரால் ஏழைக் கணவனுடன் வாழ முடியாமல் தவிக்கும் இளம்பெண்ணின் மனக்கவலையை விவரிக்கும் கதை இது.

'எனக்குப் பணம் இருக்கிறது; காசு இருக்கிறது அப்புறம் வாழ்வு எதற்கு?' என்று சொல்லி 'வாழ்வே வேண்டியதில்லை' என்று வாழ்க்கைக்கு ஏங்கிப் பேசும் பெண்ணின் கதைதான் இது.

தன் அழகின் மீது அதீத நம்பிக்கை கொண்ட ஒரு பெண், தன்னிடம் வம்பு செய்வதாகக் கருதும் அப்பாவி ஆண்களைத் தன் மாய வலையில் சிக்கிய ஒருவனைக் கொண்டு பழி(?) வாங்குகிறாள் - இது 'மாரியின் குற்றம்' கதை. மாய வலையில் சிக்கித் துன்புறும் மாரியின் செயலை முன்னிறுத்திக் கதை செயல்பட்டு முடிகிறது. மாரியின் செயலால் அவனுக்குத் தண்டனை கிடைக்கிறது. ''மாரி ஏன் மாய வலையில் சிக்க வேண்டும்? - இப்படிப்பட்ட மாரிகளின் கதி என்ன? எனக்கு ஒன்றுமே புரியவில்லை! மாரியின் விஷயம் என்ன என்று யார் சொல்ல முடியும்?'' - என்று கதை முடிகிறது. மாயவலை - சிக்கும் பூச்சிகள் - இருக்கும் வரை இதே அனுதாபத்துடன் அல்லது வேறுவகை அனுதாபத்துடன் இம்மாதிரிக் கதைகள் மறு உற்பத்தி ஆகிக் கொண்டேயிருக்கும். மன அவசங்களைக் கிளறும் நல்ல கதை இது.

வடிவச் சிறப்புக்காகச் சிறுகதை வரலாற்றாசிரியர்களால் போற்றப்படும் 'நவீன கதாசிரியன்' கதை, உள்ளடக்கச் சிறப்புக்காகவும் மதிக்கப்பட வேண்டிய கதையாகும். நவீன கதாசிரியன் (அதாவது தி.ஜ.ர. கால நவீன கதாசிரியன்) எப்படிச் சொல் ஒன்றும் செயல் வேறொன்றுமாய் இருக்கிறான் என்பதைச் சொல்லும் சிறுகதை. கதை எழுதும் நேரத்தில் வீட்டில் தனக்கு ஏற்படும் சிரமங்களை அவன் எதிர் கொள்ளுவதை நகைச்சுவையாகக் காட்டிக் கொண்டே கதையை நகர்த்திச் செல்லுகிறார் ஆசிரியர். எழுதும் கதையில் நேர்மையை

வலியுறுத்துகிறார். நிகழும் வாழ்க்கையில் பிச்சைக்காரருக்கு அளித்த பிச்சையைத் திருப்பிப் பிடுங்கி விடும் கேவல வாழ்க்கையை வாழ்கிறார். இதைச் சொல்கிறது கதை

சில சிறுகதைகளில் தி.ஜ.ர.வின் சிந்தனைகள் கதைகளின் பக்கங்களைத் தாண்டியும் நீளுகிறது. அத்தகைய கதைகளுள் ஒன்று ''பவுன்செடி''. குழந்தை ராதாவின் கழுத்திலிருந்த 'தங்கப்பவுன்' (இப்படித்தான் தி.ஜ.ர. எழுதுகிறார்)காணாமல் போகிறது. தாய், வேலைக்காரியைச் சந்தேகப்பட்டு வேலையை விட்டு நிறுத்துகிறாள். தந்தையின் சந்தேகம் பக்கத்து வீட்டுச் சொர்ணம் மீது விழுகிறது. சில நாள் கழித்து, சொர்ணம் வீட்டுத் தோட்டத்தில் குழந்தைகள் செடி வளர்க்க விதையாகப் பவுனைப் புதைத்து விளையாடியது தெரிந்து கிடைத்து விடுகிறது. சொர்ணத்தை வீட்டுக்கு வர வேண்டாம் என்று தந்தை கூறி விடுகிறார். அவரது கோபத்துக்குக் காரணம் என்ன? என்பதை வாசகரை யோசிக்க வைப்பதாய்க் கதை முடிகிறது.

சந்தேகத்துக்கும், உறுதிக்கும் இடையில் ஊசலாடும் மனம் அதனால் அதிர்கிறது. அந்த அதிர்வில் அந்தக் கதாநாயகன் அலறுகிறான். அதன் மூலம் வாசகரை அதிர வைக்கிறான். யோசிக்க வைக்கிறான். கலை பிறக்கிறது. யோசிக்க வைப்பதன் மூலம் கலைப் பிறப்பு தொடர்கிறது.

தன்னுடன் முதலமைச்சர் பதவிக்குப் போட்டி போடுபவர், போட்டியிலிருந்து விலகுவதற்குப் பரிசாக, தன்னுடைய படத்தில் நடிக்கும் நடிகையைப் பேரம் பேசி விடுகிறார் ஒரு சினிமா அரசியல் வாதி. நடிகை அதை மறுத்து, தன்னுடன் படத்தில் நடிக்கும் ஒருவரையே மணந்து கொள்கிறார். அரசியல்வாதி இருவருக் கிடையில் இந்தப் பரிவர்த்தனை பேரம் பேசுபவர், தில்லானா மோகனாம்பாள் என்ற தமிழ்ப்படத்தில் வரும் நாகேஷையும், அரசியல் உலகில் ஒரு பிரபலஸ்தரையும் நினைவு படுத்துகிறார். அந்த நடிகை மணந்தது இந்தப் பரிவர்த்தனை பேசியவரின் தம்பியை. அரசியல் - சினிமா - மேல்தட்டு உலகம் - இவற்றின் அந்தரங்கங் களைக் கிழித்துக் காயப்போடுவது ''பரிவர்த்தனை'' என்ற இக்கதை.

ஒரு பார்ப்பன விதவை, தான் சிகை நீக்கப்படுவதைத் தடுத்து நிறுத்த முயன்று தோல்வியுற்று, தற்கொலை செய்து கொண்டு இறக்கிறாள். தோழி சுந்தரம் வற்புறுத்தியும் மறுமணம் செய்து கொள்ள மறுத்தவள் அவள். இதுதான் 'ராஜத்தின் கூந்தல்' என்ற கதை. இதுதான் தி.ஜ.ர. வின் நிலை, பழமைக்கு எதிர்ப்பு ஆனால் புதுமையையும் அங்கீகரிக்காத நிலை. இரண்டுக்கும் இடையில் கலை பிரஸ்தாபம்.

இது தான் தி.ஜ.ர.வின் இலக்கியப் பரப்பு. இங்குதான் தி.ஜ.ர. வின் கதாபாத்திரங்கள் வாழ்கிறார்கள். தி.ஜ.ர.வின் சீர்திருத்தப் போக்கைப் புரிந்து கொள்ள இக்கதை உதவும். இக்கதையின் விதவைக் கதாநாயகி, மறுமணம் செய்து கொள்ள மறுத்து, தன் விருப்பமாகக் கூறுவது இது.

"மறுமணமா? சுந்தரம்! இல்லை இல்லற சுகம் எனக்கில்லை - இந்த ஜன்மத்தில் இல்லை. எனக்கு வேண்டாம் என்று அழுத்தமாகச் சொன்னாள்... என்னை அலங்கோலம் செய்யாமல் விட்டால்போதும். என் புத்தகம், என் வீணை, என் சிறு தொழில்கள் இவைகளுடன் என் வாழ்நாள் முழுவதும் கன்னி கழியாமலே இருந்து நிம்மதியாய்க் காலம் கழிப்பேன்."

'அரசகுமாரியின் ஆவி' என்ற கதை, புதுமைப்பித்தனின் 'காஞ்சனை'யை நினைவு படுத்துவது. ஒரு கால் பந்தாட்டக்காரனின் கனவில் வந்து மயக்குகிறது (ஒரு அரசகுமாரியின் ஆவி) ஒரு மோகினி. அதன் பரவசத்தால், கவியுள்ளம் கொண்டிருந்த அவன் பெரிய கவிஞனாகவே ஆகிவிடுகிறான். உலகம் மன நோயாளியாக அவனைப் பார்க்கிறது. அவனது கவிதையால் பலனடையும் சினிமா உலகம் அவனை மனநல மருத்துவமனைக்குச் செல்ல விடாமல் தடுத்து விடுகிறது என்று கதையை முடிக்கிறார்.

மோகினியின் கவர்ச்சியால் மன அவசத்துக்குள்ளாகும் கவிஞன் இப்கியின் மன உணர்வுகளை விவரிப்பது நன்றாக இருக்கிறது. மோகினி பற்றிய விவரிப்பு யதார்த்தத்தையும் பயத்தையும் கலந்து செய்தது. தி.ஜ.ர.வின் கலை விவரிப்புக்குக் கட்டியம் கூறும் கதையாக இதைச் சொல்லலாம்.

அடுத்து இடம் பெறும் 'மரத்தடிக் கடவுள்' என்ற கதை 'கலைமகளில்' வெளியாகி, அதன் வெள்ளிவிழாச் சிறப்பு மலரிலும் இடம் பெற்ற கதை. ஒரு குழந்தையால் விளையாட்டுக்கு உருவாக்கப் பட்ட சாமி (கல் சாமி தான்)யை ஒரு பூசாரி பயன்படுத்திப் பணம் சம்பாதிப்பதை, சாமியே வந்து சொல்லுவது போலக் கதை. 'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' கதையை நினைவுபடுத்தும் கதை. கதையில் நையாண்டியும் கோபமும் நிறைந்திருக்கின்றன. அங்கே கடவுளே கேலியாவார். இங்கே கடவுள் பரிசுத்தர், பூசாரியே கேலிக் குள்ளாவார். பூசாரியைச் சாக்கிட்டு இடைமனிதர் அனைவரையும் திட்டித் தீர்க்கிறார் தி.ஜ.ர.

'மகனே உங்கள் உலகத்தில் எதற்கெடுத்தாலும் பூசாரி வந்து தோன்றி விடுகிறானே இது ஏன்? வியாபாரம் என்றால் தரகன் உருவம்

எடுக்கிறான் அந்தப் பூசாரி. அரசியல் என்றால் அவன் பெரிய தலைவனுக்குப் பக்கத்தில் சிஷ்ய கோடி உருவமெடுக்கிறான். இலக்கியத்துக்கு விமர்சகன் பூசாரி. சட்டத்துக்கு வக்கீல் பூசாரி என்று அந்த வரிசை நீண்டு கொண்டே போகிறது.

'பொம்மையானை' என்ற கதை குடும்ப உறவுகளின் வலிமையைச் சொல்லும் கதை.

'நொண்டிக்கிளி' தொகுப்பில் இறுதிக் கதையாக இடம் பெறும் 'நாகரத்தினம்' என்ற கதை முக்கியமானது. இந்தக் கதையின் முடிவால் அதிருப்தியுற்ற தி.ஜ.ர.வின் நண்பர் மஞ்சேரி ஈசுவரன் இக்கதைக்குத் தொடர்ச்சியாக இன்னொரு கதை "நாகரத்தினத்தின் பிராயசித்தம்" என்ற பெயரில் எழுதி அதை நாகரத்தினம் கதைக்கு அடுத்து இடம் பெறச் செய்தார்.

உளுந்தாயியின் காதலன் கிராமத்து மாணிக்கம். முறை மாமனும் கூட. உளுந்தாயிக்கு, அவள் வீட்டெதிரே இருந்த புதரில் வசிக்கும் நாகப்பாம்பின் நாகரத்தினத்தைப்பெற ஆசை. அதைப்பெறும் முயற்சியில் மாணிக்கம் இறந்து போகிறான் - இது தி.ஜ.ர.வின் கதை.

அந்தப் பாம்பே நாகரத்தினத்தை அளித்து மாணிக்கத்தை உயிர் பெறச் செய்வது ஈசுவரனின் கதை.

"மாணிக்கத்தை கதாசிரியர் கொன்றிருக்கக் கூடாது. அவன் அன்பு செய்யப்பிறந்தவன்; கிராமவாசிகளின் ஆண்மைக்கும் பால் போன்ற உள்ளத்துக்கும் உதாரண மகன். இதை நான் நாகத்திடம் சொன்னேன். ஆம் என்று அது ஒப்புக் கொண்டது; பிராயசித்தமும் செய்துவிட்டது. எனவே இந்தக் கதை" என்று நாகரத்தினத்தின் பிராயச்சித்தம் கதையை எழுதிய ஈசுவரன், நொண்டிக்கிளி முன்னுரையில் தெரிவிக்கிறார். அவரே தொடர்ந்து சொல்கிறார்.

'அசல் கதை அதைத் தொடர்ந்த என் கதை இரண்டையும் பற்றி, சிறப்பு வாய்ந்த பிரிட்டிஷ் ஆசிரியரும், இலக்கிய விமர்சகருமாகிய என் நண்பர் ஜான் ஹாம்சன் என் கதைத் தொகுப்பு ஒன்றுக்கு எழுதிய முன்னுரையில் கூறியிருப்பது இது-'

'கவிதா நயத்துடனும் கற்பனையுடனும் சொல்லியுள்ள சோகக் கதை இது. நண்பர் ஈசுவரன் அதன் கீத இனிமையில் மனம் திளைத்தவராய், அனுதாபத்தால் எழுந்த துணிவுடன். கதாநாயகிக்கு மங்கள மான முடிவு கொடுக்கும் ஒரு கதையைத் தொடர்ச்சியாக எழுதியிருக்கிறார். நாட்டுப்புறக் கதைகளை இது ஞாபகப்படுத்துகிறது."

தி.ஜ.ர.வின் இரண்டாவது சிறுகதைத் தொகுதியான 'நொண்டிக்கிளி' நூலுக்கு முன்னுரை எழுதிய இந்திய ஆங்கில

எழுத்தாளர் மஞ்சேரி ஈசுவரன் தி.ஜ.ர.வின் எழுத்தைப் பற்றி எழுதுவது நொண்டிக்கிளியின் அனைத்துக் கதைகளையும் மதிப்பிடுவதன் ஊடாகத் தி.ஜ.ர.வை மதிப்பிடுவது போல இருக்கிறது.

"தி.ஜ.ர.வின் எழுத்து, சொந்த விருப்பு, வெறுப்பு என்ற களங்கம் சிறிதும் இல்லாதது. இன்று தமிழில் மிகச் சிறந்த அசல் சிறுகதைகளை எழுதும் ஆசிரியர்களுள் ஒருவர் அவர். சர்வ சாதாரணமான தந்திரங்களை அவர் கையாள்வதில்லை. விஷத்தைப் போல் அவைகளை அவர் ஒதுக்கி விடுகிறார். இலக்கிய ஜால வேடிக்கை என்ற படுகுழியில் விழாமல் ஒதுங்கிச் செல்பவர். 'தமக்கு நிதமும் ஏற்படும் அனுபவங்களை மழுப்பிச் சொல்லுவதோ அவைகளை ஒதுக்கித் தள்ளுவதோ அவரிடம் கிடையாது. கதை என்பது, அவர் தம்முடைய அனுபவம் என்ற ஆரத்தைக் கொண்டு எட்டி வரையும் வட்டமாகும். ஆழ்ந்த தத்துவங்களைச் சொல்வதாக, அவர் ஒருபோதும் பாசாங்கு செய்வதில்லை. உணர்ச்சிமோஸ்தர் ஒன்றை அவர் அமைத்துக் கொடுப்பார். மனித இருதயத்திலும் மனத்திலும் உண்டாகும் குழப்பங்களையெல்லாம் கூட அதிலே பொருந்தக் கூடிய விதமாக அது நலமும் ஒழுங்கும் பெற்று விளங்கும். சமூக வாழ்க்கை பற்றிய கூர்மையான பிரக்ஞையோடு, சமூகக் காட்சிகளைப் பகுத்துக் கூறிட்டு, அந்தக் கூறுகளை ஒரு புதிய ஒழுங்குடன் இசைப்பவர் அவர்! சதுரங்கக் கட்டத்தில் காய்களை நகர்த்துவது போல, தம் கதாபாத்திரங்களை இயக்குகிறார். அவர் கலை நுணுக்கம் மிகுந்தவர். இதுவே சில சமயம் அவர் கதைகளைப் பலவீனப்படுத்துகிறது. அவைகளுக்குத் தனிச்சிறப்பும் தருகிறது. இதற்கும் காரணம் உண்டு; வாழ்க்கையின் அடிப்படை உணர்ச்சிகளெல்லாம் கரடு முரடாகத்தான் இருக்கும். அவரோ கதையின் அமைப்பு ஒத்தாற்போல் இருக்க வேண்டும் என்பதற்காக, அவைகளை யெல்லாம் இழைத்து நகாசு செய்து விடுகிறார்."

**காளிதரிசனம்**

தி.ஜ.ர.வின் மூன்றாவது சிறுகதைத் தொகுதியாக காளிதரிசனம் கலைமகள் காரியாலயத்தால் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. அது படிக்கக் கிடைக்கவில்லை.

**மஞ்சள் துணி**

தி.ஜ.ர.வின் நான்காவது சிறுகதைத் தொகுப்பு 'மஞ்சள் துணி'. மற்றவற்றில் இடம் பெற்ற கதைகள் வெவ்வேறு காலத்தில்,

எழுதியவை, மஞ்சள் துணியில் இடம் பெற்றுள்ள கதைகள் அத்தனையும் ஒரே சமயத்தில் எழுதிய கதைகள். 'மஞ்சள் துணி' தொகுப்பு, 'பழனியப்பா பிரதர்ஸ்' - நிறுவனத்தால் வெளியிடப்பெற்றுள்ளது. 1955ஆம் ஆண்டு வெளி வந்த இந்நூலின் கதைகள் அதற்கு முந்தைய ஆண்டுகளில் காளிதரிசனத்துக்குப்பின் எழுதப்பட்டிருக்கலாம் என்று ஊகிக்கலாம். இத்தொகுப்பில் ஒன்பது கதைகள் இடம் பெற்றுள்ளன. ஒரு கதை தவிர மற்றவை 'கலைமகள்' இதழில் வெளியானவை.

தீவிரமான இலக்கியக் கதையின் திசையிலிருந்து கொஞ்சம் திரும்பி, குழந்தைகள் பக்கம் இவரது கவனம் திரும்புகிறது. இத்தொகுப்பில் 'முனிம்மா பந்தயம்' இப்படிச் சொல்ல வைக்கும் குழந்தைகளுக்கான கதையாகும்.

கதைத் தொகுப்பிற்குத் தலைப்பைக் கொடுத்திருக்கும் 'மஞ்சள் துணி', தி.ஜ.ர.வின் மனப்போராட்டத்தைப் பிரதிபலிக்கும் கதை. சின்னதுரை பகுத்தறிவுவாதி. மனைவி பழம்பசலி. ஏழாவதாய் ஒரு ஆண் குழந்தை. மிகுந்த சிரமத்துக்கிடையில் கடவுள் அருளால் (இது மனைவி கருத்து) பிறக்கிறது. ஒன்றரை வயதில், ஒரு நோய் வந்து அது சிரமப்பட்டது. அந்தச் சமயத்தில் சின்னதுரையின் மனத்திலே போராட்டம் எழுந்தது. மனைவி, கடவுளை வேண்டிக்கொண்டு, மஞ்சள் துணியிலே அரை ரூபாய் பணத்தை எடுத்து முடிந்து வைத்தாள். சின்னதுரையின் மனத்திலே போராட்டம்.

'தெய்வமாவது, மண்ணாவது' அப்படியே தெய்வம் இருந்தாலும் இந்த மாதிரி வேண்டுதலை எல்லாம்... ஆமாம்; ஏன் கூடாது? ஏன் செய்யக் கூடாது? மனிதனுடைய நெஞ்சு வேதனைக்கு மாற்றே இல்லையா?"

இந்த மனப்போராட்டம் முடிவில் தெய்வத்தின் பக்கம் சாய்கிறது. ஆனால் கொஞ்ச நாளில் அந்தக் குழந்தை இறந்து விடுகிறது. பல நாள் வரைக்கும், எரியும் மெழுகுவர்த்தி மாதிரி சின்னதுரைக்குத் தெய்வ நம்பிக்கை தொடர்ந்து இருந்து வந்தது. அப்புறம் ஒரு நாள் சிறிது சில்லறை தேவைப்பட்டது சின்னதுரைக்கு. அவ்வளவுதான் கடவுள் நம்பிக்கை என்ற மெழுகுவர்த்தியின் கடைசி ஜுவாலை மங்கிச் சுடர் விட்டு மினுமினுத்து அவிந்து விட்டது. அப்போது மஞ்சள் துணி முடிச்சு சின்னதுரையின் கண்ணிலே பட்டது. அதை அவிழ்த்து அரை ரூபாயைக் கையிலே எடுத்துக் கொண்டான்.

இந்தக் கதையைத் தி.ஜ.ர. எழுதிப் போகும் விதம் அருமையானது. அவனைக் கடவுள் நம்பிக்கை வந்தவனாகவே

முடித்திருக்கலாம்; ஆனால் அப்படிச் செய்யாமல் அவனை மீண்டும் பழைய பகுத்தறிவுவாதியாகவே திருப்பி கொண்டு வந்து சேர்த்துவிடுகிறார். இது விஷயத்தில் மஞ்சேரி ஈசுவரன் சொல்வதுபோல 'ஆண்டவன் உண்டோ என்று சந்தேகம் கொள்வார்; அவனைத் தொழவும் செய்வார்' என்ற வகை. அந்தக் கதையை முடித்த விதத்தை, கதையின் முடிவிலேயே தி.ஜ.ர. இப்படி விளக்குகிறார்.

'கடவுள் படைத்த படைப்பை, மனிதன் மாற்ற முடியுமா? சின்னதுரையைப் பிறவியிலேயே ஒரு குணத்தோடு படைத்திருக்கிறார் கடவுள். அதை மாற்றிக் கொள்ள அவனே முயன்றாலும் கடவுள் விடமாட்டார் போல் இருக்கிறது. இதுதான் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய ரகஸ்யமா? அல்லது வேறு ஏதாவது தெய்வீக ரகஸ்யம் இருக்குமோ இதில்?' இதுதான் தி.ஜ.ர.வின் மனக்குறளி.

"தங்கச் சாமியார்" என்ற கதை, போலிச் சாமியார்கள் நிலவும் உலகில் தன் வேதனையை மறைக்க, அடையாளமில்லாமல் வாழும் ஒரு துறவி மனம் கொண்ட நல்ல சாமியாரை ஊர் மதிக்கும் கதை. வாழ்க்கையில் நேர்ந்த பெருந்துயரத்தால் துறவியான சாமியார், தன் செல்வத்தைக் கோயில் கட்டியும், மருத்துவமனை அமைத்தும் மக்களுக்கு வழங்கிய கதை.

இரண்டு நண்பர்கள் மிகச் சாதாரண விஷயத்திற்காகப் பிரிய நேர்ந்து, பின் ஒரு அந்தி வேளையில் நிகழ்ந்த இயற்கை உற்பாத நிகழ்வால் மீண்டும் இணையும் கதை "அந்திவேளை". இரவும் பகலும் இணையும் அந்தியில் இருவரும் இணைந்ததால் கதைக்கு இப்பெயரைத் தி.ஜ.ர. வைத்திருக்கலாம். கிராமத்து நட்பு, கிராமத்து உறவு, கிராமத்தில் நிகழும் கூத்துக் கலை இப்படிப் பல விஷயங்களின் பின்னணியில் கதை சொல்லப்பட்டிருக்கிறது. தி.ஜ.ர.விடம் "கதை சொல்லி" களின் இயல்பிருப்பதை இக்கதை உறுதி செய்கிறது.

'உடைந்த சிம்னி' என்ற கதையில், பிரிந்த கணவன்-மனைவியை இணைத்து வைக்கிறாள் ஒரு தோழி. சிம்னியை உடைத்ததற்காகக் கணவன் வீட்டில் தன்னைத் துரத்திவிட்டதாகக் கூறுவதை, தோழி நம்பாமல் அவளைத் துருவி எடுத்து, அவளது நடத்தையில் சந்தேகப்பட்டு அனுப்பியிருக்கிறார்கள் என்று உணர்ந்து கொள்கிறாள். அவள் நடத்தையில் கணவன் வீட்டாருக்கு ஏற்பட்ட ஆதாரமற்ற சந்தேகத்தை நீக்கி, தெளிவடையச் செய்து இருவரையும் இணைத்து வைக்கிறாள் தோழி. எந்த அறிவுரையையும் குறிப்பாகக்

கூடச் சொல்லாமல் இக்கதை எழுதப்பட்டிருப்பது இக்கதையின் கலை நேர்த்தி.

நாத்திக மனம் படைத்த ஒருவர் பின்னாளில் மனம் கலங்கி, பின் தெளிந்து ஆத்திகராய் மாறும் கதை. இதில் ஆத்திகப் புத்தகம் சாக்காக மைத்துனன் மேல் கோபம் கொள்கிறார் கதாநாயகன். இதுதான் 'அந்தப் புஸ்தகம்' என்ற கதையின் கதை. ''தெய்வம் உண்டு; நிச்சயமாய் உண்டு. வேறு எதிலே இருந்தாலும் இல்லாவிட்டாலும், வாக்கிலே, சொல்லிலே சொல்லின் ஒலி நுணுக்கத்திலே உண்டு'' என்று ஜபித்தபடி உறங்கி விட்டார் கதாநாயகன். மறுநாள் காலையில் எழுந்தபோது உலகமே ஒரு புதிய ஒளி பெற்றுத் துலங்கியதை அவர் கண்டார் - என்று கதை முடியும்.

மஞ்சள் துணி 'சின்னதுரை'யைப் பகுத்தறிவுவாதியாகவே தொடர வைத்த தி.ஜ.ர., இயல்பை மாற்ற முடியுமா? என்று அதற்கு விளக்கமும் அளித்த தி.ஜ.ர. இந்தக் கதாநாயகனை ஆத்திகராக்கி விட்டது ஏன்? இதுதான் தி.ஜ.ர.வின் மனநிலை. எந்த தர்க்கத்துக்குள்ளும் அடங்காத தர்க்கம் இயற்கையின் தர்க்கம். அதுதான் தி.ஜ.ர.வின் தர்க்கம்.

'மாயா ஜாலம்' கதையை, கிழக்கு மேற்கு சித்தாந்தங்களின் முரணின் விளைவு அல்லது கிழக்கின் மேலான சந்தேகத்தின் தொடர்ச்சி எனலாம். எல்லாம் தெரியும் என்று நினைக்கும் பத்திரிகை ஆசிரியரைக் கிண்டல் செய்யும் கதை இது. அடுத்த அறையில் உள்ளதைக் கண்ணாடி வழி பார்த்து இந்த அறையில் இருந்தே சொல்லி மாயாஜாலம் காட்டிப் பத்திரிகை ஆசிரியரை ஊழியர்கள் விளையாட்டாய் ஏமாற்றுகின்றனர். பின்னர் அவருக்குத் தெளிவுபடுத்திவிட்டனர் எனினும்,

''ஆசிரியருக்கு இப்போது கூட பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. எழுந்து வந்து நாற்காலியில் உட்கார்ந்து பார்த்தார்; கண்ணாடியைப் பார்த்தார். திருப்தி யுற்றவராய், ஆமாம் சார் ஆமாம். இது நல்ல மாயா ஜாலம் என்று சொல்லி திரும்பவும் எழுந்து தம் நாற்காலிக்குப் போனார். அவர் அறியாத புதிய விஷயமும் ஒன்று உலகத்தில் இருந்திருக்கிறது என்று இப்போது தெரிந்து கொண்டார். ஆனால் இன்னும் கூட இந்த மாதிரி சில்லறை விஷயங்கள் அவர் அறியாதவையாக இந்த உலகத்திலே இருக்கலாம். இவை போக பல பெரிய விஷயங்கள் உண்டு பாருங்கள். காதல் முதல் கடவுள் வரையில் அவை அத்தனையும் அவருக்குத் தெரியும்.''

என்று கதை செல்லும். இதழ்கள் மெல்ல விரியும் நகைச்சுவை உணர்ச்சியை ஒவ்வொரு வரிக்குள்ளும் இழைத்து இழைத்துக் கதை செய்திருக்கிறார் தி.ஜ.ர.

இளைஞன் ஒருவன் தன் மேல் நம்பிக்கை வைத்த நண்பனின் மனைவியைப் பெண்டாண்டு விட்டான். அதற்காக அவன் மனம் தவித்த கதையே ''பெட்டிவண்டி''. தி.ஜ.ர.வின் நாசூக்கான கதை சொல்லும் திறமையை வெளிப்படுத்துவது இக்கதை.

நேர்மையான கணக்குப் பிள்ளை ஒருவருக்குக் கிராமத்தில் கிடைக்கும் தொந்தரவைச் சொல்லும் கதை ''பொரி விளங்காய்'' கதை. ''முனிம்மா பந்தயம்'' என்ற கதை குழந்தைகளுக்கான கதை.

இளமையில் கிளர்ந்தெழும் இலட்சிய வேகத்தின் விளைபயன் 'சந்தனக் காவடி' என்றால், வாழ்க்கை யதார்த்தங்களின் சித்திரிப்பு நொண்டிக்கிளி. இலட்சியம் உள்ளோடிக் கொண்டிருக்கும் யதார்த்தக் கலவை நொண்டிக்கிளி. அதன் தொடர்ச்சி மஞ்சள் துணி. கதை சொல்லுவதன் தேர்ச்சியும் தெரிகிறது. சிறுகதையின் வடிவப் பரிசோதனையிலோ வேறு எந்தப் பரிசோதனையிலோ இறங்காமல், வெளியே புறப்படத் தயாராகி விட்ட தொனியை ''முனிம்மா பந்தயத்'' திலிருந்து நாம் பெறலாம். குழந்தைகளுக்கான கதை சொல்லும் தொனியது.

### விசை வாத்து

தி.ஜ.ர.வின் ஐந்தாவதும் இறுதிஆனதுமான சிறுகதைத் தொகுப்பு 'விசைவாத்து'. இது. 1960இல் ஜெமினி பிரசுரத்தால் வெளியிடப் பெற்றது. இத்தொகுப்பில் எட்டுக் கதைகள் அடங்கியுள்ளன. அவை விசைவாத்து, தனிமை, வேலைக்காரன், ஒற்றைக் கல் மூக்குத்தி, ஏற்றிய விளக்கு, ஜானகி, வழக்கு முடிவு, ஜயக் கொடி ஆகியவை.

தி.ஜ.ர.வின் குணச்சித்திரத்தை வரையும் எவரும் அவரது இயந்திரத்துடனான உறவு பற்றி எழுதாமல் விட்டதில்லை. இயந்திரங்களுடன் அவருக்கு அப்படி ஒரு கவர்ச்சிமிக்க ஈடுபாடு இருந்திருக்கிறது. அந்த ஈடுபாடு வெளிப்படும் கதைகளுள் ஒன்று 'விசை வாத்து'. விசை வாத்து, சாவி கொடுத்துத் தரையில் வைத்தால் உயிருள்ள வாத்துபோல அசைந்து அசைந்து ஆடி ஆடிக் கால்களை மாற்றி மாற்றித் தூக்கி வைத்து நடக்கும்; இந்த வாத்து ஜப்பான் சென்று வந்த நண்பர் ஒருவர் கதாநாயகனுக்குக் கொடுத்தது. இதை வைத்து, இந்த மாதிரி வாத்து தயாரிக்கும் தொழிற்சாலை நிறுவ விரும்பிய

அவன் எண்ணத்தில் மண் விழுந்தது. ஆம் அவனுடைய மனைவி ஒரு பேருந்து விபத்தில் சிக்கி, கையில் இந்த வாத்து இருந்ததால் கை ஒடியாமல் தப்பித்தாள், ஆனால் இந்த வாத்து நொறுங்கிவிட்டது. இதைக் கேட்டு அவன் வருத்தத்தோடு சப்பு கொட்டினான் என்று கதை எழுதுகிறார் தி.ஜ.ர.

''பொன் வாத்தை இழந்த பேராசைக்காரனின் முகம் இப்படித்தான் இருந்திருக்கும். மதனியின் கை போயிருந்து வாத்து பத்திரமாக இருந்திருந்தால் அத்தானுக்கு இவ்வளவு துயரம் ஏற்பட்டிராது என்றே தோன்றுகிறது'' என்று ஒரு பாத்திரம் பேசுவது அவனது மனநிலையைக் காட்டுவதாகும்.

குழந்தையைப் பறிகொடுத்த ஒரு பெண், தன் குழந்தையை நினைவூட்டிக் கொண்டிருந்த சந்தான கிருஷ்ணனின் பொம்மை ஒன்றை உறவினர் வீட்டு நவராத்திரிக் கொலுவிலிருந்து திருடிச் சென்று, கணவனுக்குத் தெரியாமல் அதைத் தொட்டிலிட்டுச் சீராட்டு வதன் மூலம் தன் தனிமையின் துயரைப் போக்கிக் கொள்கிறாள். தாய்மை கண்ட இந்த மனச் சாந்தியை - அமைதியை - மனத் தத்துவ பின்னணியில் 'தனிமை' கதை விளக்குவதாக இத்தொகுதிக்கு முன்னுரை எழுதிய எழுத்தாளர் எம்.ஏ. அப்பாஸ் சொல்வது உண்மை.

கைக்குழந்தையைப் பார்த்துக் கொள்ள முடியாமல் அல்லது பிடிக்காமல் வேலையை விட்டு அடிக்கடி, ஓடிப்போகும் வேலைக்காரன் பற்றிய சித்திரம், 'வேலைக்காரன்' கதை. அவனுக்குக் குழந்தை பிறக்கும் போதும் அவன் வீட்டை விட்டு முதலாளி வீட்டு வேலைக்கு வந்து விடுகிறான் என்று கதை சொல்கிறது. 'பணத்துக்காக இந்தக் காலத்தில் தரித்திர அழுமூஞ்சி மூதேவிகளுக்கெல்லாம் பாட்டும் கூத்தும் கற்றுக் கொடுத்து விடுகிறார்களே' என்று கதையில் ஓரிடத்தில் வருகிறது. ஒரு சமூகப் பிரச்சனை பற்றிய கருத்தைப் போகிற போக்கில் ஆசிரியர் சாதாரணமாக, யோசிக்காமல் பேசி விட்டுச் செல்கிறார் என்று இதைப் படிக்கும்போது தோன்றுகிறது.

'ஒற்றைக்கல் மூக்குத்தி' கதை, கணவன் - மனைவி இருவருள் மனைவியே சாமர்த்தியம் மிக்கவள் என்று பட்டிமன்ற பாணியில் சொல்லும் கதை.

'ஜானகி' என்ற கதை அடுத்த கதை. ஜானகியும் சௌரியும் தாத்தா வீட்டில் வளரும் முறை உறவுக்காரர்கள். தாத்தா மனக் கணக்குப் போடும் போது தவறாய்ச் சொல்லுபவரைச் சரியாய்ச் சொல்பவர் குட்ட வேண்டும். எப்போதும் சரியாய்ச் சொல்லும் ஜானகி சௌரியைக் குட்டிக் கொண்டே இருப்பாள்.. கால ஓட்டத்தில்

சௌரியே அவளை மணக்க நேர்கிறது. அவன், அதை மனத்தில் வைத்துத் தன்னைத் துன்புறுத்துவானோ என்று ஏங்கிப் போகிறாள் ஜானகி. இதையே கதையாக இழுக்கிறார் தி.ஜ.ர. அவன் அவளையே அறிவில் வழிகாட்டியாக மானசீகமாய் வைத்து இருக்கிறான் என்பதைப் பின்னால் அறிந்து வியக்கிறாள். இத்தகைய சாதாரண கதைகளையும் தி.ஜ.ர. எழுதியுள்ளார்.

பெண் உரிமை, கற்பு, மறுமணம் - இவை பற்றிய தி.ஜ.ர. வின் கருத்துகளை அறியப்பயன்படும் கதையாக அமைவது 'வழக்கு முடிவு' என்ற கதை. கந்தப்ப புத்தேறியிடம் மயங்கி, பழைய கணவனை விட்டு வந்தாள் அமிர்தம். இவனும் இவளை விட்டு வேறொருத்தியிடம் மனம் கொடுக்கிறான். அமிர்தம் இவனை விட்டுப் போகிறாள். புதிதாய் வந்தவள் வந்த மாதிரியே போன பிறகு அமிர்தம் இடமே திரும்பவும் வந்து சேர்கிறான் கந்தப்ப புத்தேறி. இவளோ, 'முடியாது போ! என் முன் நில்லாதே. நம் ஜாதியில் அறுத்துக் கட்டும் வழக்கம் உண்டு. ஆனால் நீ கட்டிய தாலியை அறுத்தெறிய எனக்கு விருப்பமில்லை. அப்படி அல்ல! வேண்டும் என்றால் அதற்கும் தயார். இதோ தருகிறேன். என்ன சொல்'' என்றாள். துர்க்கையம்மனைக் கண்டு அஞ்சிய நரனைப் போல வாய் பேசாமல் பின் வாங்கி விட்டான் கந்தப்பன்.

கற்பு, தாலி இவற்றின் உன்னதம் போற்றும் மனப்பான்மையை உள்ளடக்கிப் பேசும் கதை இது.

ஜயக்கொடி, இரண்டு எழுத்தாளர்கள் அடித்துக் கொண்டு நீதி மன்றம் போய்ப் பின் சமரசம் செய்து கொண்டு திரும்பிய கதை. இரண்டு பேரும் ஜயக் கொடி நாட்டியதாக பிரலாபம். 'ஏற்றிய விளக்கு' சாதாரண காதல் கதை.

விசை வாத்து கதைகளின் தரம் சென்று தேய்ந்து இறுதல் என்ற நிலைதான். தி.ஜ.ர.வின் கவனம் குழந்தைகளின் பக்கமும், மொழி பெயர்ப்பிலும், புத்தகச் சுருக்கத்திலும், மஞ்சரியின் ஆசிரிய நிருவாகத்திலும் திரும்பிவிட்டதன் அறிகுறி அது. புது எழுத்தாளர் களின், பதிப்பு முயற்சியை ஊக்குவிக்கும் நோக்கத்துடன், இக்கதை களை அவர் ஜெமினி பிரசுரத்துக்கு அளித்திருக்கலாம்.

## முடிவுரை

வ.வே.சு. ஐயரின் 'குளத்தங்கரை அரச மரம்' தொடங்கி, புதுமைப் பித்தனின் 'சாபவிமோசனம்' உள்ளிட்டு, எஸ். இராம கிருஷ்ணனின், இன்றைய 'தாவரங்களுடன் உரையாடல்' வரை தமிழ்ச்

சிறுகதை 90 வருடங்களில் பல போக்குகளைக் கண்டு விட்டது. பல விதமான உள்ளடக்கங்கள். பலவிதமான உத்திகள் என அதன் அழகு பல விதங்களில் பரிமளித்துவிட்டது. தொடர்ந்து அது மாறிக் கொண்டும் இருக்கிறது. காலந்தோறும் அதன் பெரும் போக்குகள் மாறிக் கொண்டே இருந்தாலும், ஒவ்வொரு காலத்திலும் பல சிறு போக்குகள் நிலவிக் கொண்டும்தான் இருந்தன. அந்த வகையில் தி.ஜ.ர.வின் காலத்துச் சிறுகதைப் போக்கை நெகிழ்ச்சியாக வகை பிரித்துப் பார்த்தால், புதுமைப்பித்தன், மௌனி, கு.ப.ரா. உள்ளிட்ட வரின் மணிக்கொடிக் கதைகள். கி.ரா., தேவன், எஸ்.வி.வி உள்ளிட்ட வரின் ஆனந்த விகடன் கதைகள், த.நா.கு., தி.ஜ.ர. உள்ளிட்டவரின் கலைமகள் கதைகள், இவை தவிர மற்றவை என ஒருவாறு வகைப் படுத்தலாம். கதைகளின் உள்ளடக்கத்தையும் தொனியையும், அது காட்டும் இலட்சியத் திசையையும் வைத்து இப்பிரிவைப் புரிந்து கொள்ளலாம். இந்த வகையில் தி.ஜ.ர.வின் கதைகள் கலைமகள் பாணிக் கதைகளாக அமைகின்றன. புதுமைப்பித்தனின் மிகச்சிறந்த கதைகள் கலைமகளில் வெளியானவை என்பதை இந்த இடத்தில் நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது.

தி.ஜ.ர. காலத்து நிலவிய சிறுகதைகளை வைத்து அவரே ஒரு வகைபிரித்து, அதில் தாம் எந்த வகை என்பதையும் சொல்லி, ஒரு சுய பரிசீலனையைச் செய்துள்ளார். சிறுகதைகளை எப்படி எழுதினேன்? என்று தி.ஜ.ர. விளக்க நேர்ந்த போது, அவை உருவான வரலாற்றையும், பொதுவாகத் தமிழ்ச் சிறுகதைகளின் நிலைமை களையும் தெளிவுபடுத்தினார்.

ஆங்கிலச் சிறுகதைகளைத் திருடி எழுதும், திருட்டுக் கதைகளைப் புறக்கணிக்கும் தி.ஜ.ர. தமிழ்ச் சிறுகதைகளைப் பொதுவாக இரண்டாகப் பிரிக்கிறார். "ஒன்று பிரத்தியட்ச வாழ்க்கைச் சித்திரம் மற்றது அமானுஷ்யக் கற்பனை. மேதைகள் தான் ரஸஹீனம் இல்லாத அமானுஷ்யக் கற்பனைகளைச் சிருஷ்டிக்க முடியும். என்னைப் போன்றவர்களுக்குப் பத்திரமான வழி, பிரத்தியட்ச வாழ்க்கைச் சித்திரங்களே" என்பது அவர் பகுப்பும், மதிப்பீடும் (ப.2., எப்படி எழுதினேன்)

இந்த வகையில், தம் கதைகள் அத்தனையும் அல்லது பெரும் பகுதி பிரத்தியட்ச நிகழ்ச்சிகளாகும் என்றார் தி.ஜ.ர.

'ஒரு கிராமத்தில் ஒரு பூசாரி சேற்றை எடுத்து காவடி கட்டி அதைச் சந்தனமாய் மாற்றுவதாகப் பல வருஷங்கள் ஏமாற்றி வந்தான். ஒரு வருஷம் அதன் சூதை நானும் என் நண்பர்கள் சிலரும்

கண்டு கொண்டோம். உண்மையிலே நடந்த இந்த ஸம்பவந்தான் சந்தனக் காவடி என்ற என் கதையாயிற்று' (ப.3., எப்படி எழுதினேன்) என்று கூறி இதுபோல ரிக்ஷாக்காரவேலன். சங்கு மோதிரம் முதலிய கதைகள் உருவான வரலாற்றையும் எடுத்துச் சொன்னார் தி.ஜ.ர.

''என் கதைகளுக்குப் பெரும்பாலும் மூலாதாரம் புற நிகழ்ச்சிகள்தான். சில சமயம் புற நிகழ்ச்சிகளால் தூண்டப்பட்ட அக நிகழ்ச்சிகள் என் கதைகளை வியாபித்து நிற்கின்றன. எல்லாம் மானுஷ்யமான கதைகள்'' (ப.7., எப்படி எழுதினேன்)

என்று அவர் சொல்லுவதை ஏற்கலாம். அதேபோல, கதையை இப்படித்தான் எழுத வேண்டும் என்று மேலே நின்று உத்தரவு போடும் ஆசிரியர் மனப்பான்மையையும் அவர் ஆதரிக்கவில்லை. எனினும் கதைகள் இப்படி இருக்கலாம் என்று அவர், சிறுகதைகள் பிறந்து சற்று வளர்ந்த சூழலில் 1930, 1940களில் தெரிவித்த கருத்துகள் முக்கிய மானவை. உருவாகிக் கொண்டிருந்த இளம் எழுத்தாளர் களுக்கு அவை பயன்பட்டதாக, சிறுகதை வரலாற்று ஆசிரியர்களும் தெரிவித் துள்ளனர். அவ்வாறு அவர் தெரிவித்த கருத்துகளுள் இதுவும் ஒன்று.

''பொதுவாக எந்த லட்சணங்களையும் தளைகளாய்க் கொண்டு வலை வீசும் வேடனைப்போல, நாம் கதையைச் சிறைப்படுத்த முடியாது. அப்படி எழுதுங்கள் இப்படி எழுதுங்கள் என்று யார் சொல்லுவதையும் எழுதுவதையும் கொண்டு நாம் கதை எழுதிவிட முடியாது. அருமையான கதைகளை, இன்பமாய்ப் படித்து பொழுது போக்குங்கள். வாழ்க்கைக் காட்சிகளை ஊடுருவி உணர்ச்சியோடு கவனியுங்கள். பிரபஞ்ச உண்மையைக் காணும் தத்துவ தர்சனத்துக்கு முயலுங்கள். கற்பனா சக்தி ஓங்கி உயர நிமிருங்கள். கதை எழுதுங்கள் - சுவாரஸ்யமான கதை. இன்பமான கதை. உணர்ச்சியை இளக்கும் கதை. மனித இதயத்தைப் பண்படுத்தும் கதை. உன்னதமான கதை.''

தி.ஜ.ர.வின் நடைதான் அவரது வெற்றிக்கெல்லாம் அடிப்படை. சொற்செட்டு அவரது அடையாளம். எளிமையான வாக்கியம் அவரது இயல்பு. தமிழ்ச் சொற்களோடு. சம்ஸ்கிருத பதங்களும் பயிலும் நடை அவருடையது. அலங்காரத்தைத் திரஸ்கரிப்பது அவர் நடை உணர்ச்சியைச் சொல்லி விட மட்டுமே வார்த்தைகளை அவர் பயன்படுத்துவார். மற்றவரை மிரட்டுவதற்கு அல்ல. மஞ்சேரி ஈசுவரன் தி.ஜ.ர.வின் நடையைப் பற்றிச் சொல்வது இது:

''பொருத்தமான பதப்பிரயோகம். கவிதையின் ஜீவ ஒளி. அசல் வார்த்தைகளின் மீது மின்னலைப்போல ஒளி வீசி அவைகளைத் தெளிவுற்ற ரத்தினங்களாகச் செய்யும் அடைமொழிகளை

உபயோகிக்கும் லாவகம். இவையெல்லாம் அவரிடம் விசேஷமாக அமைந்திருக்கின்றன" (நொண்டிக்கிளி முன்னுரை).

சிறுகதையை அகல் விளக்கின் தூய ஒளியோடு ஒப்பிட்டு அது சமூகத்துக்குத் தரும் ஞான ஒளியை விளக்கும் மஞ்சேரி ஈசுவரனின் பின்வரும் விளக்கத்தோடு இப்பகுதியை முடிக்கலாம்.

"ஒரு சிறுகதையின் ஆசிரியர் அகல் விளக்கு ஒன்றை ஏற்றுகிறார். தமக்குக் கிடைத்த சிறிது நேரத்துக்குள் அதை ஜாக்கிரதையாகப் பாதுகாத்துத் தூண்டி விடுகிறார். ஆனால் அந்த சொற்ப நேரத்துக்குள்ளே அதன் மீது அவருடைய மூச்சுப்பட்டால் அது அணைந்து போகும். அதற்குள்ளே சட்டென்று அதை அவர் வாசகனிடம் வழங்கிவிடுகிறார். அந்த அகல் விளக்கின் எண்ணெய் தூயதாக இருக்குமானால் அது வாசகரின் மனத்திலே இருளையெல்லாம் ஓட்டும். உன்னதமான பெரும் சோதியாக எழுந்து, அற்பமும், காம்பீர்யமும், இரக்கமும், இன்பமும், வாழ்க்கையின் பயங்கரமும் துலங்கும்படி ஒளி செய்யும். தி.ஜ.ர. தமக்கு இயன்றவரையில் பணிவோடு, அந்த அகல் விளக்கை ஏற்றி, வாசகரிடம் அளித்துவிட்டார். அது தூய சுடர். வாழ்க்கையின் ஜீவசக்தி ஏறியது. ஒளியைப் பரப்பிக்கிரகிப்பது கிரகித்துப் பரப்புவது" (நொண்டிக்கிளி முன்னுரை).

---

# 3

# கட்டுரைச் சாதனைகள்

கட்டுரை (Essay) என்ற இலக்கிய வகைமை 20ஆம் நூற்றாண்டில் தமிழுக்கு வந்தது. கட்டுரை என்ற தமிழ்ச்சொல் பழமையாயினும் Essay என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான பொருளுடன் புழக்கத்தில் வந்தது பின்னால்தான். வியாசம் என்ற சொல்லே essay க்கு இணையான சொல்லாக முதலில் பயன்படுத்தப்பட்டது. பின்னர் கட்டுரை அந்த இடத்தைப் பிடித்தது.

இலக்கிய விளக்கங்கள், செய்யுளுக்கு இலக்கிய நயம் பாராட்டும் பொழிப்புரைகள் ஆகியவையே முதலில் கட்டுரைகளாகத் தமிழில் தோன்றின. பின்னர் ஆங்கிலக் கல்வியின் பரவலால் நவீனத் தமிழ் இலக்கியம் ஓங்கி வளர்ந்த சூழலில், வாழ்வியலின் எந்தப் பொருள் பற்றியும் கட்டுரை வரையலாம் என்ற கருத்து பரவிச் செயலுக்கு வந்தது. 1920கள் தொடங்கி 40கள் வரையிலான காலத்தில் வெளிவந்த பத்திரிகைகளின் பங்கு இதில் அதிகம். எழுத்தாளர்களுள், மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் என அறியப்பெற்றவர்களின் பங்கு மிக அதிகம். இவர்களுள் வ.ரா., தி.ஜ.ர. ஆகியோரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது.

தமிழ் இலக்கிய விமர்சகரான க.நா. சுப்ரமணியம், தி.ஜ.ர.வின் கட்டுரை இலக்கியச் சிறப்பைச் சொல்லும்போது, அவரைக் கட்டுரைத்துறையின் தமிழ்ப் பிரிவில் தனிச் சிறப்புப் பெற்றவர் என்று பொருள்படும்படி கருத்துரைக்கிறார்.

"மாண்டேன் என்கிற பிரெஞ்சு ஆசிரியர் தொடங்கி, லாம்ப் என்கிற ஆங்கில ஆசிரியர் சிறப்பாகச் செய்து நமக்களித்திருக்கும் கட்டுரைக் கலையின் இன்றைய கொழுந்து தி.ஜ.ர. என்றால் அது மிகையாகாது. தமிழில் அறிவியல் கட்டுரை, விஞ்ஞானக் கட்டுரை (?), வேதாந்தக் கட்டுரை என்றெல்லாம் அடிபடும் கட்டுரை சிறப்பாகப் பெயர் பெறுவது தி.ஜ.ர. அவர்கள் கையில்தான் என்று சொல்ல எனக்குத் தோன்றுகிறது. கனமான விஷயங்களையும் லேசாக, ஒரு தனி நோக்குடன் சொல்லியிருக்கிறார் தி.ஜ. ரங்கநாதன். இந்த

ரகத்தில் தி.ஜ.ர.வைப் பின்பற்றுபவர்கள் ஒருவர் இருவர் இருக்கலாம். அவரை விஞ்சிவிட்டவர்கள் என்று சொல்ல முன்னும் ஒருவரும் இருந்ததில்லை; இன்றும் இல்லை''. (ப.110., படித்திருக்கிறீர்களா?)

தி.ஜ.ர. தமிழ்க்கட்டுரை இலக்கியத்தின் முன்னோடிகளுள் ஒருவராக மதிக்கப்படுகிறார். அவரது இடைவிடாத 50 ஆண்டுகாலப் பத்திரிகைப் பணி கட்டுரை எழுதுகிற நல் வாய்ப்பை அவருக்கு அளித்திருக்கிறது என்று சொல்லலாம். தி.ஜ.ர.வின் கட்டுரைத் திறனை அறிந்து புரிந்து கொள்ளும் முயற்சிகளுள் ஒன்றாக அமைவது, அவரது கட்டுரைகளின் உள்ளடக்கத்தை வைத்து மூன்றாய் வகை பிரித்துப் பார்க்கும் முயற்சியாகும். பொழுது போக்குக் கட்டுரைகள், சமகாலச்சிந்தனைக் கட்டுரைகள், வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள் என அவை மூன்றாய் அமையும்.

### பொழுது போக்குக் கட்டுரைகள்

'பொழுது போக்கு' என்ற பெயரிலேயே தி.ஜ.ர. ஒரு கட்டுரைத் தொகுப்பை 1942இல் வெளியிட்டார். அத்தொகுப்புக்கு அவருடன் பணிபுரிந்த அவரினும் இளைய கி.வா. ஜகந்நாதன் முன்னுரை எழுதியிருக்கிறார். ''தலைப்பும் கட்டுரைக் கருத்துகளும்தான் பொழுதுபோக்கே தவிர, முயன்றால் அதிலும் சிந்திக்க நிறைய உண்டு. நகைச்சுவை ததும்பத் ததும்ப ஒவ்வொரு கட்டுரையையும் அவர் எழுதியிருக்கிறார்''. 'பொழுது போக்கு' நூலுக்கு விமர்சனம் எழுதிய இலக்கியவாதியும், மொழி பெயர்ப்பாளருமான வீ.ஆர்.எம். செட்டியார், இந்நூலை இப்படி வர்ணிக்கிறார்.

''காலம் தலைச் சுமையாக இருக்கும்போது பொழுது போக்கு வேண்டியதுதான். இதையே ஆசிரியர் தி.ஜ.ர., தம்முடைய 49 கட்டுரைகளில் தருகிறார். அடிசன், ஸ்டில் முதலானவர்கள் ஹாஸ்ய நடையைக் கையாண்டு அரசியல், பொருளாதாரம், மதம், இலக்கியம், குடும்பம், சமூகம், கல்வி, இசையரங்கு, நாடகக் கலை முதலிய துறைகளில் உள்ள குறைகளை நீக்க முயன்றதுபோல நம் ஆசிரியரும் ஹாஸ்யச் சுவையைப் பயன்படுத்தியிருக்கிறார்.''

இதைச் சொல்லிவிட்டு, 'புத்தக இரவல்', 'கடிகார மகாத்மியம்', 'வாத்தியார் ரகங்கள்', 'இச்சக வித்தை', 'ரஸிகன் உரிமை', 'ரஸமான சம்பாஷணை' முதலிய இந்நூலில் அமைந்துள்ள அபூர்வமான கட்டுரைகளில் சிந்தனை நிறைந்திருப்பதாகக் கூறுகிறார். மிக மிக ருசியான கட்டுரையாகப் புத்தக இரவலைக் குறிப்பிடுகிறார். புத்தகக்

காதலர்களும், புத்தக மோஹிகளும், புத்தகம் காக்கும் பூதங்களும் வருவதும் போவதும் மிக மிக ருசியாக இருக்கிறது என்று அவர் குறிப்பிடுகிறார். (சக்தி, 1942)

'படித்திருக்கிறீர்களா' என்ற தலைப்பிட்ட வரிசையில் நவீனத் தமிழின் மிக முக்கியமான நூல்களைத் தமிழருக்கு அறிமுகப்படுத்தும் அல்லது விமர்சித்துப் பரிந்துரை செய்யும் நோக்கில் க.நா.சு. பல நூல்களைப் பற்றி எழுதினார். டி.எஸ்.எஸ். ராஜனின் நினைவலைகள், புதுமைப் பித்தனின் காஞ்சனை, வ.ரா.வின் நடைச்சித்திரம் முதலியன அவற்றுள் சில. அதில் ஒன்றாகக் கட்டுரைகள் வரிசையில் தி.ஜ.ர.வின் பொழுது போக்கு நூலைப் பாராட்டி எழுதியுள்ளார் க.நா.சு.

''நம்மவர்களில் பெரும்பாலானவர்களுக்குப் பொழுது தானாகவே போய்விடுகிறது. அவர்களாகப் பொழுது போக்குவதில்லை. பொழுதைச் சரியானபடி போக்கத் தெரிந்தவனைக் கலைஞன் என்று நாம் கொண்டாடுவதில் தவறேயில்லை. பொழுதைச் சரியானபடி போக்கத் தெரிந்தவர் தி.ஜ.ர. அவர் எழுதி நமக்களித்துள்ள பொழுது போக்கு என்னும் கட்டுரைத் தொகுதி ஓரளவு நமக்கும் அந்தக் கலையைக் கற்றுத்தர முயல்கிறது'' என்று ஆரம்பமாகும் விமர்சனம், நூலில் உள்ள ஆறேழு கட்டுரைகளைப் பாராட்டுகிறது.

சிந்திக்கத் தூண்டிப் பலவித நோக்குகளை நமக்கு, நமது தினசரி சாதாரணக் காரியங்களிலும் உண்டாக்கித் தருகிற பொழுது போக்கு இது என்று கூறுவதோடு தீவிர இலக்கிய பிரக்ஞையோடு இக்கட்டுரைகளை எழுதியிருக்கிறார் என்றும் பாராட்டுகிறார் க.நா.சு.. தீவிர இலக்கியத்தை மறந்து விட்டு எழுதுவாரானால் அவரை எப்படி நல்ல கட்டுரையாசிரியர் என்று சொல்ல முடியும்? என்று கேள்வி கேட்டு, 'விஷயத்தை வேறு பல நோக்குகளுடனும் பார்க்கலாம் என்பதைத் தொக்கி நிற்கிற மாதிரி காட்டுவதுதான் திறமை. அந்தத் திறமை தி.ஜ.ர.வுக்கு இருப்பது நன்கு தெரிகிறது' என்று முடிக்கிறார் க.நா.சு.(ப.113, படித்திருக்கிறீர்களா? )

பொழுது போக்குக் கட்டுரைகள், தமிழுக்குப் புதியதாய் இருந்தாலும், அதன் நடைச் சிறப்பாலும், அதுவரை யாரும் எடுத்துக் கொள்ளாத தலைப்புகளை எடுத்துக் கொண்டு பேசியதாலும், எல்லோருக்கும் தெரிந்ததை ஆனால் சொல்ல முடியாமல் திணறித் தவித்ததை எளிமையான நகைச்சுவையுடன் சொன்னதாலும் இந்நூல் வெற்றி பெற்றது.

குடையைப் பற்றிய தி.ஜ.ர.வின் கட்டுரையில் ஒரு பகுதி இது:

''சூரியனின் ஒளிக்கதிர் அம்புகளைத் தடுத்து நிற்கும் கேடயம் அல்லவா குடை? வருணனுடைய விமானக் குண்டுகளிடமிருந்து தப்புவிக்கும் குகைக்கும் அதை ஒப்பிடலாம். காலுக்குச் செருப்பு இல்லாமல் எத்தனையோ மாதங்களை நான் கழித்திருக்கிறேன். ஆனால், தலைக்குக் குடை இல்லாமல் ஒரு நாளைக் கூடப் போக்க எனக்கு மனம் வருவதில்லை. நானும் குடையும் இணைப்பிரியாக் காதலர்கள். குடையை மாத்திரம் என் கையில் சுருட்டிப் பிடித்துக் கொண்டிருந்தாலும் போதும்; வாழ்க்கைப் பிரயாணத்தையே வெகு அலஷியமாய்ச் செய்துவிடலாம். குடையைப் பிரித்து ரோட்டிலே நடந்தேனானால், கவலையற்ற சிந்தனை வெள்ளம் என் உள்ளத்திலே பெருக்கெடுத்து ஓடுகிறது. ஆபீஸ் வாசலில் குடையை மடக்கினேனோ இல்லையோ, அத்தனை அருங்கருத்துகளும், கல்லைக் கண்ட காக்கைகளைப் போலப் பறந்தோடி விடுகின்றன. குடையை வைத்துக் கொண்டிருப்பவன் பெரிய மனிதன் என்பதை இதினின்றும் நீங்கள் அறிந்து கொள்ளலாம்...''

''பத்துக்கம்பி, ஒரு கம்பு, ஒரு துணித்துண்டு இந்தக் கூட்டான ஒரு சாமானிய வஸ்துவை இவ்வளவு அபாரமாகப் புகழ்கிறானே இவன்! என்று நீங்கள் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. குடை எவ்வளவு உன்னதவஸ்து என்பதற்கு எத்தனையோ சாட்சிகள் இருக்கின்றன. பூச்சக்கரக் குடையைக் கோயில்களிலே உபயோகிக்கிறார்களே, ஏன்? மன்னர்களின் சிங்காசனத்திலே குடையைப்பதிக்கிறார்களே காரணமென்ன? உலகம் யாவையும் ஒரு குடைக் கீழ் ஆள்வோன் என்று வர்ணிப்பதும் நம் புலவர்களின் மரபன்றோ? பாதுகாத்து ரக்ஷிக்கும் சின்னமாகக் குடை மதிக்கப்படுவதே இவற்றின் காரணமாகும்'' (பொழுது போக்கு).

இதே போல 'உதவிக் கண்' என்று அழைத்து எழுதிய மூக்குக் கண்ணாடி பற்றிய சித்திரமும் சுவையானது. ''முதலாவதாக, இந்த மூக்குக் கண்ணாடி என்ற பெயரே எனக்குப் பிடிக்க வில்லை. இதற்கு யாரோ ஒரு விகடகவிதான் இந்த விஷமமான நாமத்தைச் சூட்டியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. மூக்குக் கண்ணாடி யாவது! மூக்கா பார்க்கிறது? மூக்கின் உபயோகத்துக்காகவா இந்தக் கண்ணாடி வந்தது? 'கண்ணாடி'யிலேயே 'கண்' சம்பந்தம் இருப்பதால், 'மூக்கை' யாரோ இதில் நுழைத்திருக்கிறார்கள் என்று சொல்லலாம். எப்படியிருந்தாலும் சரிதான்'' இது என்னவோ பாஷையிலே ஏற்பட்ட ஓர் அராஜகமேயாகும் என்பதை மட்டில்

யாரும் மறுக்க முடியாது. இயந்திரங்கள் தர்க்க சாஸ்திரத்துக்குக் கட்டுப்படும்; ஜீவன்கள் கட்டுப்பட மாட்டா. பாஷைக்கு ஜீவன் உண்டு. இது தான் நமது சமாதானம்".(பொழுது போக்கு)

இன்னொரு கட்டுரையான 'தூக்கமருந்து' என்ற கட்டுரையில் தூக்கம் பற்றியும்,அதன் தொடர்பான அம்சங்கள் பற்றியும் மிகச் சுவையாக எழுதியிருப்பதிலிருந்து சிறு பகுதிகள்:

"தூக்கம், இயற்கையின் வைத்தியன்; மனக்கவலை தீர்க்கும் மருந்து; ஏழைகளின் பூலோக சொர்க்கம். தூக்கம், நமக்கு ஒரு புது உலகத்தை - அதிசயக் கனவு ராஜ்யத்தைப் படைத்துத் தருகிறது. சாத்தியமில்லாத நம்முடைய மனோரதங்களையும் ஆசைகளையும் பூர்த்தி செய்து தரும் சாதனம் தூக்கந்தான்".

.....எத்தனையோ நாள் நான் நல்ல தூக்கமின்றி அவதிப் பட்டிருக்கிறேன். எத்தனையோ மருந்துகளும், என்னென்னவோ பரிகாரங்களும் பலிக்காமல் போய் விட்டன. சமீபத்தில்தான் நான் உண்மையான தூக்க மருந்தைக் கண்டு பிடித்தேன்.

என் மருந்துப் பிரயோக முறை பின்வருமாறு; முதலில் விளக்கைச் சற்று உயர்த்தி, தலைமாட்டில் வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு நன்றாய்க் காலை நீட்டிப் படுக்க வேண்டும். 'தூக்க மருந்தை'க் கையில் எடுத்துப் பிரிக்க வேண்டும். அது வேறொன்றும் அல்ல. போன வாரம் வெளியான ஒரு கடுமையான இலக்கியப் பத்திரிகைதான். சில பக்கங்களைப் புரட்டி, அதன் கரடு முரடான விஷயங்களைப் படித்தால், காலேநிமிஷத்தில் தூக்கம் வந்து விடும். இலக்கியங்களில் எனக்கு இப்போது பெரிய மோகம் ஏற்பட்டிருப்பதற்கு வேறு காரணமும் வேண்டுமா? இலக்கியம் நீடூழி வாழ்க! (பொழுது போக்கு) இம்மாதிரியான சுவையான பொழுது போக்குக் கட்டுரை வகை பின்னால் யாராலும் சிறப்பாகத் தொடரப்படாது போய்விட்டதுதான் வருத்தமளிக்கும் செய்தி.

## 2. சமகாலச் சிந்தனைக் கட்டுரைகள்

பிரித்தானியர்களின் வரவால் ஏற்பட்ட அறிவுப்பரவலின் தொடர்ச்சியாகச் சிந்தனையிலும் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டது. இந்தக் கிளர்ச்சிகளைச் சரியாகத் தம் கட்டுரைகளில் தி.ஜ.ர. பதிவு செய்திருக்கிறார். அதே போலத் தொழில் நாகரிக வரவின் விளை பயனாய்க் கிராமங்கள் சிறுத்து, நகரங்கள் பெருத்தன. போக்குவரத்தில் புதியன புகுதல், குடியிருப்பின் நெருக்கடிகள், வாழ்வியலில் மாற்றங்கள். புதிய கலை வடிவமான திரைப்படங்களின் நுழைவு

இப்படித் தமிழ் வாழ்க்கையில் நேர்ந்த நகர நாகரிகத்தின் புது அம்சங்கள் அனைத்தையும் பற்றித் தி.ஜ.ர. பேசியிருக்கிறார். மாற்றங்களை வரவேற்றிருக்கிறார். பழையது மட்டுமே நல்லது. நிகழ்வது மோசமானது. வரப் போவது அதனினும் மோசமானது என்ற வேதாந்தமான நிலை எடுக்காமல் அனைத்தையும் புரிந்து கொண்டு, தனக்கேற்ற விதத்தில் அவற்றைப் பற்றிய கருத்துகளைத் தெரிவித்திருக்கிறார்.

இந்திய தேசியத்தின் முகிழ்ப்பின் விளைவாய் எழுந்த இந்தியா முழுமைக்குமான பொது மொழிப் பிரச்சனை, தமிழகத்தில் திராவிட இயக்கத்தின் விளைவாய் எழுந்த தாய்மொழி மறுமலர்ச்சி முதலியன பற்றித் தி.ஜ.ர.சூழலின் அழுத்தங்களைப் பற்றிக் கவலைப்படாமல் தம் எண்ணத்தைப் பதிவு செய்துள்ளார். எழுத்தாளர்களின் கூட்டுறவு, வளர்ச்சி ஆகியவற்றை நோக்கங்களாகக் கொண்டு புதிய செயல் திட்டத்தை, அவரது நீண்ட அனுபவத்தைக் கொண்டு முன் வைத்துள்ளார். இவ்வாறு சமகாலச் சூழலை முன்வைத்து அவர் எழுதியுள்ள கட்டுரைகளில் அடங்கிய கருத்துகளை இப்பகுதியில் நாம் பார்க்கலாம். இத்தகைய சமகாலச் சிந்தனைகள் அடங்கிய தி.ஜ.ர. வின் நூல்களாக 'எப்படி எழுதினேன்?', எழுத்தும் எழுத்தாளரும், ஆகா ஊஹூ, இது என்ன உலகம். வளர்ச்சியும் வாழ்வும், மொழி வளர்ச்சி, வீடும் வண்டியும், யோசிக்கும் வேளையில் ஆகிய நூல்களைக் குறிப்பிடலாம்.

### எப்படி எழுதினேன்?

''வளர்ச்சியும் வாழ்வும் விரும்பும் தமிழர் அனைவரும் தீவிரமாய்ச் சிந்திக்க வேண்டிய பிரச்னைகள் இந்த நூலில் நிறைந்திருக்கின்றன'' என்று பதிப்புரையில் குறிப்பிடப் பெறும் இந்நூலில், மொழியும், கலையும் வாழ்விலே வேரூன்றியவை. வாழ்வோடு வளர்பவை என்ற கருத்தைப் பல விதங்களில் தி.ஜ.ர. வலியுறுத்துகின்றார். 1943 இல் சக்தி காரியாலயத்தால் வெளியிடப் பட்டது இந்நூல். அப்போது தி.ஜ.ர. சக்தியில் கூட்டாசிரியராகப் பணிபுரிந்து வந்தார். இந்நூலில் உள்ள கட்டுரைகள், பெரும் பாலானவை, 'ஹனுமான்' இதழிலும் மற்றவை 'கலைமகள்' , ஊழியன்', 'சுதந்திரச்சங்கு' ஆகிய இதழ்களிலும் முதலில் வெளியானவை. 18 கட்டுரைகள் அடங்கியது இந்நூல்.

தமிழகத்தில் திரைப்படம் தலைகாட்டிப் பேசத்தொடங்கியிருந்த 1940 களில் செல்வாக்கோடு இருந்த வெகுஜன கலை வடிவம்

நாடகங்களே. அந்த நாடகங்களில் சமகால வாழ்வு சித்திரிக்கப் படாமல் புராண கால, வரலாற்றுக் கால வாழ்க்கைகளே சித்திரிக்கப் பட்டமை, காலத்தோடு ஒட்டிவரவில்லை என்று தி.ஜ.ர.வுக்குத் தோன்றியிருக்க வேண்டும். அதைக் குறித்துத் 'தமிழ் நாடகம்' என்ற கட்டுரையில் தி.ஜ.ர. இவ்வாறு கூறுகிறார்.

''சில புராணக் கதைகள் மிக அழகாகத்தான் இருக்கின்றன. ஆனால் நாடக மேடைகளையெல்லாம் அவையே ஆக்கிரமணம் செய்து கொள்ளுவது நன்மையல்ல. இயந்திர யுகம் இது. நவீன சந்தர்ப்பங்களில் நாம் வாழ்கிறோம். நமது இன்றைய வாழ்வின் புகைப்படங்களான நாடகங்கள் நமக்கு வேண்டும். நம் இன்றைய பிரச்சனைகளை அவை நமக்குக் கண்ணாடி போல் காட்ட வேண்டும். அப்பொழுதுதான் தமிழ் நாடகக்கலை உயிருடன் இருப்பதாகச் சொல்லலாம். தெய்வங்களின் ஐயங்களும், அறங்களும், சங்கடங்களும் நம்முடையவை அல்ல. அரசர்களும், பிரபுக்களும் ஆட்பட்டுக்கிடக்கும் சந்தர்ப்பங்கள் எளிய மக்களுடையவை அல்ல. எளிய ஜனங்களின் வாழ்வும் அனுபவமும்தான் அவர்களுக்குப் பயனளிக்கும். அவர்களுக்குப் பயனளிக்கும் நாடகங்கள் எங்கே! சாதாரண மக்களின் நித்திய வாழ்வு நிகழ்ச்சிகளைக் கொண்ட இந்தியப் பிரச்சனைகளை விளக்கும் நாடகங்களை நாடகாசிரியர்கள் இயற்றுதல் வேண்டும். அப்பொழுதுதான் தமிழ் நாடகக் கலை வளர்ச்சி பெறும்.'

பிரத்தியட்ச வாழ்வின் யதார்த்த சித்திரங்களாகக் கலை இருக்க வேண்டும் என்பது தி.ஜ.ர. வின் கலைக் கொள்கையாகத் தோன்றுகிறது.

இலக்கியக்கலை செழுமையுற உதவும் விமர்சனக்கலையைப் பற்றியும், படைப்பாளர் தளத்தில் நின்று கருத்து தெரிவிக்கிறார். தாக்குதலும், தற்காப்பும் மிக்க படைப்பாளரின் குரலையே இதில் கேட்க முடிகிறது. ஆக்கப்பூர்வமான விமர்சனத்தில் ஈடுபட்டு, ''இத்தனையித்தனை பேரின் கவிதையையும், கலையையும் நான் கண்டு பிடித்து அவற்றின் நுட்பத்தைச் சரியான முறையில் ஜனங்கள் ரசிக்க வழி காட்டினேன் என்பதுதான் உமக்குப் பெருமை. பெரும்பாலும் சிருஷ்டிகளின் பக்தனாய்த்தான் நீர் நடந்து கொள்ள வேண்டும்'' என்று விமர்சகருக்கு அறிவுரை கூறுவதாகவே தி.ஜ.ர.வின் கருத்து அமைந்திருக்கிறது.

குணங்களைக் கூறுவது அவசியம், குறைகளை நயமான முறையில் குறிப்பிடவும் வேண்டும். கலைகள் வளர நீர் உபகாரியாய்

இருக்க வேண்டுமானால் இதுவே உமது கடமையாகும் என்று அறிவுரை கூறும் தி.ஜ.ர. ''நியமனம் செய்யாத நீதிபதியாய் நீர் அமர்ந்து விடுகிறீர்'' என்று பைபிள் வசனத்தையும் விமர்சகரை நோக்கி வீசுவது ரசிக்கத் தக்கது.

'புதுப்பதங்கள் உற்பத்தி'' என்ற கட்டுரையில் மொழி மக்களால் உருவாகியது. அதன் வளர்ச்சி தானாய் நடக்க வேண்டியது. அதற்குரிய சூழலை உருவாக்குவதுதான் நம்வேலை. இதில் அறிவாராய்ச்சிக்கு இடமில்லை என்ற கருத்தைத் தெரிவிக்கிறார். இக்கருத்து, தமிழில் அறிவியல் சொற்களை உருவாக்குதல் என்ற சமகால நடவடிக்கை ஒன்றை அடிப்படையாய் வைத்து வெளியானதாகும்.

''தமிழில் எழுத முடியும் - ஆனால் ஸயின்ஸைத் தமிழில் படித்துப் புரிந்து கொள்ள முடியுமா?'' - என்ற கேள்வி எழுப்புகிறார். தமிழில் புதுச் சொற்களை அறிஞர்கள் உருவாக்கக் கூடாது. அவையே உருவாக வேண்டும் என்பது தி.ஜ.ர.வின் கருத்து. ''ஒரு பாஷையில் ஸ்வபாவமாகத் திசைச் சொற்கள் வந்து குவிவதும், தேவையான புதிய சொற்கள் ஜனிப்பதும் நடக்க வேண்டும்'' என்பது அவரது வேட்கை. இக்கருத்துகளை நாம் ஒப்புக் கொள்கிறோமோ இல்லையோ இவை தி.ஜ.ர.வைப் புரிந்து கொள்ளப் பயன்படுவனவாகும்.

''எத்தனைச் சொல்லாக்கல் மாநாடுகளாலும் முடியக் கூடாத காரியத்தை ஓர் அரசியல் இயக்கம் வெகு தூரம் சாதித்துவிட்டது என்பதை நாம் உணர வேண்டும். தமிழனின் வாழ்வு பல துறைகளிலும் செயல் நிறைந்ததாக வேண்டும். அவனது ஞானம் பெருக வேண்டும். அப்போதுதான் தமிழ் வளரும்'' என்று இக்கட்டுரையில் கூறுகிறார்.

மொழிக்கும் அது வழங்கும் சமூகத்திற்கும் உள்ள உறவை மிக அழகாகப் புரிந்து வெளியிட்டுள்ளார் தி.ஜ.ர., இந்தக் கருத்தை அடிநாதமாகக் கொண்டதே தி.ஜ.ர.வின் மொழிக் கொள்கை. இந்தக் கருத்தையொட்டியே இதே தொகுப்பில் இடம் பெற்றுள்ள 'வாழ்வும் மொழியும்' கட்டுரையும் அமைந்துள்ளது.

மொழியின் வளர்ச்சிக்கு, அதைப் பேசும் மக்கள் வாழ்வின் எழுச்சி இன்றியமையாததாகும் என்று சொல்லி அதற்கு ஒரு கதையும் சொன்னார். ஔவையைக் குறித்து ஒரு கதை சொல்லுவதுண்டு. அரச சபையிலே ஒரு கொண்டாட்டம் நடந்தது. புலவர் பலரும் அங்கே வந்திருந்தனர். அவர் யாவரும் அரசனை வாழ்த்தி ஒவ்வொரு கவி

பாடினார்கள். ஒளவையின் முறை வந்தது. அவள் நீண்ட கவியொன்றும் பாடவில்லை. ''வரப்புயர'' என்று இரண்டே வார்த்தைகளைக் கூறி உட்கார்ந்தாள். பொருள் எவருக்கும் விளங்க வில்லை. ஒளவையே தன் கருத்தை விளக்க வேண்டியதாயிற்று. 'வரப்புயர நீருயரும்; நீருயர நெல்லுயரும்; நெல்லுயரக் குடி உயரும், குடி உயரக் கோலுயரும்; கோலுயரக் கோனுயரும்'' என்றாள் ஒளவை. இதேபோலத்தான் மொழி உயர நாம் வாழ்த்துக் கூற வேண்டுமாயின், வாழ்வுயரவே பிரார்த்திக்க வேண்டும் - என்று தி.ஜ.ர. அதில் குறிப்பிட்டிருக்கிறார்.

''மொழிக்கு வாழ்வு ஜீவநாடி யென்றால், வாழ்வுக்கு மொழியால் பயனில்லையா? பயனில்லை என்றால் மொழியைப் பற்றி நாம் இவ்வளவு தொல்லைப் படத் தேவையில்லையே. மொழிக்கு வாழ்வு ஜீவ நாடியாகும். வாழ்வுக்கோ மொழி மிகச் சிறந்ததோர் இன்றியமையாச் சாதனமாகும்'' என்று மொழிக்கும் சமூக வாழ்விற்கும் உள்ள உறவை விரிவுபடுத்தி விளக்குகிறார் தி.ஜ.ர.

இதேபோலத் தமிழை மக்கள் மயப்படுத்தும் முயற்சி நிதானமாக நடைபெற வேண்டும் என்றும், சங்கீத ரசனை முன்பரிச்சயத்தால் விளக்கமுறும் என்றும், எழுத்து நடை இயல்பாக வருதல் வேண்டும் என்றும், சொல்வலிமை பெறுவது சொல்லால் அல்ல சொல்லுக்குப் பின்னுள்ள அனுபவத்திரளால் என்றும் கூறுபவர், புத்தகங்கள் எப்படிப் படிக்கப்பட வேண்டும் என்பது பற்றியும், எண்ணத்தின் உயர்வு பற்றியும், கலையில் பிரச்சாரத்தின் இடம் பற்றியும், ரசிகர்கள் பற்றியும், பொது ஜனம் என்பது எப்படித் தன்னையும் உள்ளடக்கியது என்பதை எல்லோரும் மறந்துவிட்டுப் பேசுகிறார்கள் என்பது பற்றியும் கூறியுள்ளார்; என்ன எழுதுவது என்று குழம்பித் தவிப்பவர்களுக்குச் சமுதாயத்தைப் பற்றி எழுதலாம் என்றும் இத்தொகுப்பில் பல கருத்துகளைத் தெரிவித்துள்ளார்.

மொழி, கலை ஆகியவற்றுக்கும் சமூகத்திற்குமான உறவின் தன்மையை வெவ்வேறு தளங்களில் பேசிய கட்டுரைகள் இவை என்று ஒருவாறு தொகுத்துக் கூறலாம். இதில் தி.ஜ.ர.வின் நிலைப்பாடுகள் சிந்தனைகளையும், அனுபவ அறிவையும் கொண்டு எழுந்தவையாக, மக்கள் சார்பான இடதுசாரித்தன்மை கொண்டனவாகத் தோன்றுகின்றன.

**எழுத்தும் எழுத்தாளரும்**

"நாகரிகத்தில் தலைசிறந்த எந்தச் சமூகத்திலும் எழுத்தாளனுக்கு எந்தக் காலத்திலும் மேலான மதிப்பும் பதவியும் இருப்பது இயல்பு; பொருத்தம். தமிழ்நாட்டில் தமிழ் எழுத்தாளனுக்கு இன்று இந்த மதிப்பும் பதவியும் இல்லை என்பதை ஒளித்துப் பயனில்லை. அதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கலாம். ஆனால் தொழில் கட்டுப்பாடு ஒன்றையே நோக்கமாகக் கொண்டு எழுத்தாளர்கள் ஒன்று கூடி முயன்றால் இந்த நிலையை மாற்றலாம்". இந்த நிலைப்பாடு எடுத்து தி.ஜ.ர. 'ஹனுமான்' தமிழ் வார இதழில் எழுதிய சில கட்டுரைகளும், எழுத்துத் தொடர்பான வேறு சில கட்டுரைகளும் இணைந்த தொகுதிதான் 'எழுத்தும் எழுத்தாளரும்' என்ற நூல். இளம் எழுத்தாளர்களுக்கும், எழுத்தாளர் பிரச்சனைகளுக்கும் என்றும் இந்நூல் சிந்தனை விருந்தளிக்கிறது என்று அதன் பதிப்புரை கூறுகிறது.

இந்நூலை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒரு பகுதி எழுத்தாளர் முன்னேற்றத்தைப் பற்றிப் பேசுகிறது. இன்னொரு பகுதி எழுத்துக் கலை பற்றிப் பேசுகிறது. இவ்விரண்டுக்கும் தொடர்பில்லாத 'தன் மோசடி' என்ற ஒரு கட்டுரையும் இதில் இறுதியாக இடம் பெற்றுள்ளது.

ஒரு நோக்கமும், திட்டமும் இல்லாமல் கூடும் எழுத்தாளர் கூட்டங்களாலும், சந்திப்புகளாலும் திட்டமான பயன் எதுவும் இல்லை என்று கடுமையான முகாந்திரத்தோடு நூல் தொடங்குகிறது. எழுத்தாளர் பிரச்சனைகளாக மூன்று அம்சங்களைத் தி.ஜ.ர. யோசித்து முன் வைக்கிறார். அவையாவன:

1. எழுத்தாளர்கள் எழுதும் கதை, கட்டுரை, நாவல்களில் அளவும் கனமும் உயர வழி என்ன?

2. தற்காலத்துக்கு ஏற்றபடி, புதுப்புது நிலைமைகளையும் கருத்துகளையும் சமாளிக்கத் தக்கவாறு தமிழ்மொழி வளம்பட வழி என்ன?

3. எழுத்தாளர்களின் சமூக அந்தஸ்தும், பொருள் நிலைமையும் உயர வழி என்ன?

இந்தத் தார்மீகமான, பொருளாதாரச் சிக்கல்களுக்கு வழிவகை காணுவதுதான் முக்கியம் எனச் சொல்லும் தி.ஜ.ர. இந்த மூன்று பிரச்சனைகளையும் தீர்க்கப் பரிந்துரைக்கும் வழிகளைப் பார்க்கலாம்.

முதல் பிரச்சனையை இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் கொள்கிறார்; முதல் பகுதி கதை, கட்டுரை, நாவலின் அளவு விரிய

வேண்டும் என்பது. அது குறிப்பிட்ட இலக்கிய வகையின் அளவு குறித்தது அன்று; எண்ணிக்கை அதிகமாக வேண்டும் என்பதையே அவர் குறிக்கிறார். இதற்கு வழி, பொது ஜனத் தேவையைப் பொறுத்த விஷயம் என்று உணர்வது என்கிறார். பிரச்சனையின் அடுத்த பகுதி குண உயர்வு, நிர்ணயம் என்பது. நல்ல விமர்சனங்களே, இலக்கியத்தின் கனம் உயர வழி வகுக்கும். எனினும் இறுதித் தீர்ப்புக் கூறக் கூடியது காலப் போக்கே என்றும் தி.ஜ.ர. கருதுகிறார். விமர்சனவேலையை எழுத்தாளர் கூட்டங்கள் நிகழ்த்தக்கூடாது என்பது தி.ஜ.ர.வின் கருத்து. எந்த வகை எழுத்துக்கும் இலக்கியச் சிறப்பு உண்டு என்பது தி.ஜ.ர.வின் எண்ணம்.

இரண்டாவது பிரச்சனை மொழி வளர்ச்சி பற்றியது. இதைத் தீர்க்க மொழி வல்லுநர்கள் வேண்டும் என்று கூறும் தி.ஜ.ர., இந்த மொழி வல்லுநர்கள் எப்படி இருக்க வேண்டும் என்று தன் விருப்பத்தையும் வெளியிடுகிறார்.

"அவர்கள், வாழ்வும், வளர்ச்சியும் அறிந்த புதுமை உள்ளம் படைத்தவர்களாக இருக்க வேண்டும். பழம் பெருமையே பேசிக் கொண்டிருப்பவர்களால் அந்தக் காரியம் ஆகாது" - என்பது மொழி வல்லுநர் பற்றிய தி.ஜ.ர.வின் கருத்து.

தி.ஜ.ர. மிகுதியும் முக்கியமாகக் கருதுவது மூன்றாவது பிரச்சனையைத்தான். "இன்றுள்ள நிலைமையில் மகாநாடுகளும் கவனிக்க வேண்டிய ஒரே பிரச்சனை மூன்றாவது பிரச்சனைதான். 'அதாவது எழுத்தாளர் கில்டு என்ற மாதிரி, அவர்கள் தொழிற் கூட்டுறவு கொள்ளுவதையே எழுத்தாளர் பெருங்கூட்டங்கள் தங்கள் நோக்கமாய்க் கொள்ள வேண்டும். அங்கே அரசியல் கூடாது. இலக்கிய விமர்சனங்கள் கூடாது. பெருஞ்செலவுக்கான பிரசுரத் திட்டங்களும் ஆராய்ச்சிக் கமிட்டிகளும் கூடாது. எழுத்தாளர்களின் சமூக அந்தஸ்தும், பொருள் நிலையும் உயர வழியே தேட வேண்டும்."

எழுத்தாளர் பிரச்சனைகளாகத் தான் கண்ட மூன்று பிரச்சனை களையும், அவற்றைத் தீர்க்கத் தான் கண்ட வழிகளையும் விவரித்த தி.ஜ.ர., மூன்றாவது பிரச்சனைத் தீர்வாகத் தான் முன் வைத்த 'எழுத்தாளர் கில்டு' என்ற கருத்தோட்டத்தை மேலும் விவரிக்கிறார்.

'எழுத்தாளர் கில்டு வேண்டும் என்றதால் கட்டுரைகளின் வளர்ச்சியிலோ பாஷை வளர்ச்சியிலோ எழுத்தாளர் ஒரு நாளும் கவனம் செலுத்தக் கூடாது என்பது என் கருத்தல்ல'. எழுத்தாளர் களுக்குள் ஒரு தொழிற் கூட்டுறவை ஏற்படுத்த ஒரு சங்கம் அமைய

வேண்டும். அந்தச் சங்கம், எழுத்தாளர்களுக்குள்ளே பரஸ்பர நட்பை வளர்த்துக் கொள்ள விருந்து விளையாட்டுகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். சங்கத்தின் ஆதரவில் இவற்றுக்கு ஏற்பாடு செய்து தனிச் சந்தா வசூலித்துக் கொள்வது நலமாகும். இரண்டாவதாக, எழுத்தாளர் களின் தொழில் நிலைமைகள் ஆங்காங்கே எப்படி இருக்கின்றன என்பதை ஆராய்ந்து அவற்றைச் சீர்படுத்த முயற்சிக்கலாம். தனிப்பட்ட எழுத்தாளர்களுக்கும் தொழில் முறையில் இயன்ற உதவியும் யோசனையும் அளிக்கலாம். மூன்றாவதாக, எழுத்தாளர் களின் வேலையில்லாக் கஷ்ட நிவாரண இன்ஷியூரன்ஸ் திட்டம் முதலியவற்றை வகுத்து, அவற்றை நிறைவேற்ற சில இன்ஷியூரன்ஸ் கம்பெனிகள், வங்கிகளின் உதவியை நாடலாம். நான்காவதாக, எழுத்தாளர்களுக்குள்ளே பரஸ்பர அறிமுகமும் தோழமையும் உண்டாக்கும் கருவியான ஏதேனும் ஒரு மாதப் பத்திரிகை அல்லது பிரசுரத்தை நடத்தலாம். இன்னும் இவைபோலத் தொழிற் கட்டுப் பாட்டையும், கூட்டுறவையும் வளர்க்கக்கூடிய ரீதியில் நண்பர் களுக்குத் தோன்றக் கூடிய வேறு பல யோசனைகளையும் திட்டங் களையும் சேர்த்துக் கொள்ளலாம். இப்படி ஒரு சங்கம் ஏற்பட்டால், அந்தச் சங்கத்தின் நிருவாகக் காரியங்களையும் பத்திரிகைகளையும் நடத்தி வரச் சம்பளம் பெற்ற நிரந்தரக் காரியதரிசியாக ஓர் எழுத்தாளரையே நியமித்துக் கொள்வது அவசியமாகும். இப்படித் தொழில் முறையில் அமையும் ஓர் எழுத்தாளர் சங்கத்தில் சேரும் எல்லா எழுத்தாளர்களுக்கும் சம உரிமையும் தங்கள் சொந்தம் என்ற உணர்ச்சியும் இருக்கும் என்று தி.ஜ.ர. அந்தத் தொழிற் கூட்டுறவுச் சங்கம் பற்றிய தம் திட்டத்தை விவரித்தார். இத்திட்டம் எந்த அளவுக்கு எழுத்தாளர்களால் வரவேற்கப்பட்டது? அதன்பின் விளைவு என்ன? என்பது பற்றித் தெரியவில்லை.

பெரிய நிலையில் எழுத்தாளர் உறவை உருவாக்க முயலும் தொழிற் கூட்டுறவு தவிர, சிறிய அளவில் இலக்கிய நட்பை வளர்க்கவும் தி.ஜ.ர. அரிய யோசனைகளைத் தந்துள்ளார். குறைந்த எண்ணிக்கையிலும், ஒத்த வயதும், ஒத்த மனதும், ஒத்த திறமையும் கொண்டவர்கள் கொண்ட 'இலக்கிய வட்டம்' சிறப்பாகச் செயல்பட வாய்ப்புள்ளது என்று தி.ஜ.ர. கருதுகிறார். லண்டனில் இயங்கிய இலக்கிய வட்டம் ஒன்றைப் பற்றியும், சான்றாக அவர் விவரித்தார். இந்த மாதிரியான இலக்கிய வட்டத்தில் குறைந்த எண்ணிக்கையில் (அதிக எண்ணிக்கை ஒன்பது பேர்) உறுப்பினர்கள் இருப்பதை வலியுறுத்தும் தி.ஜ.ர. அது நல்ல விவாதச் சூழலை உருவாக்கும், மனம் விட்டுப் பேசவும் வாய்ப்பாகும் என்கிறார்.

அடுத்து, மொழி குறித்து சிந்தனைகளைத் தி.ஜ.ர. தருகிறார். தமிழனுடைய வாழ்க்கையில் எத்தனைக்கெத்தனைத் துறைகளில் இயக்கங்கள் பெருகுகின்றனவோ, அத்தனைக்கத்தனை தமிழ் தானாகவே வளர்ந்து வளம் பெறும் என்பது நிச்சயம் என்று கூறும் தி.ஜ.ர., மொழி வளரத் தேவைப்படும் 'என்ஸைக்குளோ பீடியா ட்ராவிடானிக்கா(?)' தயாரிக்கும் வேலையில் எழுத்தாளர்கள் ஈடுபட வேண்டியது இல்லை. மொழி வல்லுநர்கள் தயாரிக்கும் அதை, வாங்க வேண்டியது தான் எழுத்தாளர் வேலை என்று கூறுகிறார். எழுத்தாளர் யார்? அவர் பணி என்ன? என்பதில் தெளிவாக இருக்கிறார் தி.ஜ.ர. என்று இதிலிருந்து தெரிகிறது.

அடுத்துச் சிறுகதைகள் எப்படி அமைதல் வேண்டும்; கதையை எப்படித் திறமையாகச் சொல்ல வேண்டும்; தமிழின் கலாசாரம் தமிழர் வாழ்வில் ஊடுருவி இருக்கும்போது தமிழில் கதை எழுதத் தமிழ்க் கலாசாரம் தெரிந்தால் போதும், தமிழை முறையாகப் படித்திருக்க வேண்டும் என்ற தேவையில்லை என்று கூறும் தமது சில கட்டுரைகளை இந்நூலில் சேர்த்துள்ளார். தவிர, எழுத்தாளனுக்கு வரும் விசித்திரமான கடிதங்கள், பிரசுரிக்கத் தகுதியற்ற கட்டுரைகள், எழுத்தாளனுக்கு மற்றவர்களைப் போலப் பாராட்டு, கண் எதிரில் கிடைக்காத நிலைமை என்பன போன்ற எழுத்தாளர்க்குத் தொடர்புடைய, எழுத்து இலக்கியம் தொடர்பான அம்சங்களைப் பற்றிப் பேசியிருக்கிறார்.

''எழுத்தாளருக்கு வரும் கடிதங்கள் பெரும்பாலும் பித்தர்களிடமிருந்தே வருகின்றன. ரசனையேயில்லாத பிழை மலிந்த தமிழ் எழுதுகிறவர்களிடமிருந்தே கடிதங்கள் வருகின்றன'' என்று தி.ஜ.ர. ஓர் இடத்தில் குறிப்பிடுவது, பொது மக்கள் தொடர்பு ஊடகங்களில் பணியாற்றுபவர்கள் நாளும் அனுபவிக்கும் ஒரு தொடர் அனுபவம்.

அச்சு இயந்திர வரவால் உருவான நவீனத் தமிழ்ச் சமூகத்தில் எழுத்து உற்பத்தியும் எழுத்தாளர் உற்பத்தியும் எதிர்கொண்ட பிரச்சனைகள் குறித்த விவரப்பதிவாகச் சமூகவியல் கண்ணோட்டத்தில் இந்நூல் கட்டுரைகளைப் பார்க்கலாம். தொழிற் கூட்டுறவு போன்ற அம்சங்களை முன் வைப்பது, எழுத்து வேலையை ஒரு தொழிலாக தி.ஜ.ர. அவதானித்ததைச் சுட்டுகிறது. இது நவீனமான கருத்து. தி.ஜ.ர. முன் வைத்த இக்கருத்து செயலாக மாறாமல் போனது தமிழ்ச் சமூகத்தின் அவலக் குறிகளுள் ஒன்று.

**ஆஹா ஊஹூ**

ஆறு கட்டுரைகள் அடங்கிய 'ஆஹா ஊஹூ' என்ற தலைப்பிலான நூல், தி.ஜ.ர.வின் நண்பர் முல்லை முத்தையாவின் முல்லைப் பதிப்பகத்தாரால் 1946இல் வெளியிடப்பட்டது. இக்கட்டுரைகளும் எழுத்தாளரைப் பற்றியே பேசுகின்றன. இலக்கிய உலகில் தோன்றிய புதிய புதிய போக்குகளைப் பற்றியும், எழுத்தாளனின் வறுமைக் கோலம் பற்றியும், வெளிநாடுகளில் சுயேச்சை எழுத்தாளனுக்கு இருக்கும் செல்வாக்குப்பற்றியும். இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் எழுதப்பட்டு, வானொலியில் ஒலிபரப்பான பேச்சில் யுத்த காலத்தில் பத்திரிகை ஆசிரியன் நடந்து கொள்ள வேண்டிய முறை பற்றியும், எழுத்தில் 'நான்' என்ற தன்முனைப்பு அம்சம் பற்றியும், தமிழ்ச் சினிமா பற்றியும் இக்கட்டுரைகள் பேசுகின்றன.

கலை இலக்கியம் பற்றிய தி.ஜ.ர.வின் தீவிரமான கருத்துகள் இந்நூலின் முதல் கட்டுரையான 'ஆஹா ஊஹூ'வில் அடங்கியுள்ளன. செயலில் துளியும் ஆர்வம் காட்டாத கூச்சல்பேர் வழிகளைக் கடிந்து கொள்கிறார். அரசியலில், இலக்கியத்தில், சமூகத்தில் இத்தகைய மனிதர்களின் 'ஆஹா ஊஹூ' பேச்சுகளை அழித்து ஒழிக்க வேண்டும் என்று வீராவேசமாகத் தி.ஜ.ர. பேசுகிறார்.

இவ்வாறு ஒவ்வொரு துறையிலும் இருக்கும் 'பேச்சு வீரர்களை' அடையாளம் காட்டினார் தி.ஜ.ர.

''அரசியலில் கார்ல் மார்க்ஸ் என்பார்கள். பிரெஞ்சு புரட்சி என்பார்கள். அமெரிக்கச் சுதந்திரப் போர் என்பார்கள். காந்தியமா? அது சுத்த அபத்தம். காந்தியைச் சாமியாராய் வைத்துக் கும்பிட்டு, மூலையிலே உட்கார்த்தி வைத்துவிட வேண்டுமே யொழிய வேறு காரியத்துக்குப் பயன்படுத்தலாகாது என்று கர்ஜிப்பார்கள். ஆனால் காலடியிலே வந்து கடித்த எறும்பைத் திருப்பி நசுக்கக் கூட ஏலாமல் அவர்கள் நாட்டியமாடுவதை, நம் கண்ணாரக் காணலாம். அதிக வீரம் பேசுபவன் பெரிய கோழை. உண்மை வீரன் கூச்சல் போடமாட்டான். இலக்கியத்திலே, காப்பி அடிப்பவர்கள், தர்ஜமாக்காரர்கள் இவர்களே அந்த ஆஹா ஊஹூ பேர்வழிகள். கலையும் இலக்கியமும் வெறும் காலித்தனத்தைத் தவிர வேறொன்றுமில்லை என்பது போல, இன்னொரு கோஷ்டியும் இப்போது கிளம்பியிருக்கிறது. கலை கலைக்காகவே அதிலே பிரசாரம் கூடாது. ஒழுக்கம் கிடையாது. சம்பூர்ண ஆபாசமே கலை என்று அந்தக் கோஷ்டி நினைக்கிறது. கலை கலைக்காகவேயானாலும் சரி? கொலைக்காகவேயானாலும் சரி.

இந்தக் கோஷ்டியார் ஒருவருக்கொருவர் முட்டுக் கொடுத்துக் கொண்டு உங்கள் முன்னிலையிலே வந்து சர்க்கஸ் செய்யும்போது நீங்கள் ஏமாறக் கூடாது.''

இத்தகைய 'பேச்சு வீரர்களை' எப்படிச் சமாளிப்பது? என்று யோசிக்கும் தி.ஜ.ர. நல்லது வளர்ந்தால் தீயது தானாய் அழிந்து போவது இயற்கைதானே என்று எழும் வாதத்தை ஒப்புக் கொள்ளாமல் தீயதை அழித்து ஒழிக்க வேண்டும் என்று தீவிர முடிவை எடுக்கிறார்.

பயிரை வளரச் செய்யக் களைகளைப் பிடுங்கித்தான் ஆக வேண்டும். பயிருக்குச் சக்தியிருந்தால் களைகளை அமுக்கி விட்டுத் தானாய் வளர்ந்து கொள்ளட்டும் என்று சொல்லி எந்தக் குடியானவனாவது சும்மா இருப்பானா? என்று தன் கருத்தை வலியுறுத்துகிறார் தி.ஜ.ர.

பத்திரிகை அதிபர்களோ, அந்த அதிகாரம் படைத்தவர்களோதான் மனித தெய்வங்களாகப் பத்திரிகையாளர் தி.ஜ.ர.வுக்குத் தோன்றுகிறார்கள். அவர் வேலை தேடிய தன் தேடல் அனுபவத்தைச் சுவாரஸ்யமாக விவரித்து விட்டு, முடிவில் அந்தச் சோகத்தில் பிறந்த இலட்சியப் பிடிப்பைப் பகிர்ந்து கொள்கிறார். 'மனித தெய்வங்கள்' என்று கட்டுரையில்,

''மனிதன் பாவ புருஷனுக்கு அடிமைப்பட்டால் செல்வம் வரும். சக்தி கிடைக்கும். சுகம் பெறலாம். தர்ம தேவதைக்கு அடி பணிந்தால் துன்பமும் அசக்தியும் வறுமையுமே அவனைச் சூழ்ந்து வாட்டும் - தர்ம மார்க்கங்களெல்லாம் இப்படியே உபதேசிக்கின்றன. உன்னத இலக்கியங்களெல்லாம் இதையே வலியுறுத்தும் சோகக் கதைகளாயிருக்கின்றன. பிரத்யட்சத்திலும் பல சம்பவங்கள் இவ்விதமே நடக்கின்றன. வாஸ்தவத்திலே உலகத்தின் உண்மை - சமூக வாழ்க்கையின் தத்துவம் - இது தானா? தர்மம், தியாகம், சத்தியம், ஞானம், தீரம் என்பவையெல்லாம் வெறும் உருவெளி மயக்கங்கள் தானா? உத்தமர்களும் மகான்களும் அப்படி நினைக்கவில்லை. வேதனையே சிருஷ்டி குதூகலத்தின் மூலம். சாவிலிருந்து வாழ்வு பிறக்கிறது. உருக்க உருக்க உயரும் பொன்னின் மாற்று. அந்த வழியைக் காட்டும் மேதைகளுக்கு - அவர்களுக்கே - நாம் அடி பணிவோம்; வெறும் மண் பொம்மைகளுக்கல்ல'' எப்போதும் நிதானமான தி.ஜ.ர. இப்படிச் சில சமயங்களில் பொங்கி வழிந்து விடுவதுண்டு.

சுயேச்சை எழுத்தாளர் என்ற நிலை தமிழ் நாட்டில் இல்லையே என்ற வருத்தத்தை வெளிப்படுத்தும் தி.ஜ.ர. வெளிநாட்டில்

அத்தகையோர்க்கு இருக்கும் செல்வாக்கை விவரிக்கிறார். யுத்த காலத்தில் பத்திரிகை ஆசிரியன், மக்களுக்குப் பீதி ஏற்படாத வகையில் அதே சமயம், போரில் பங்கேற்கும் போர் வீரர்களுக்கு மனோபலம் அளிக்கும் வகையிலும் நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றிப் பேசுகிறார். புத்தகத்தில் 'நான்' என்ற உணர்ச்சி வரும்படி எழுதும் எழுத்துப் பற்றியும் எழுத்தாளர் தி.ஜ.ர. தம் கருத்தைத் தெரிவிக்கிறார். எழுத்தில் 'தான்' என்ற உணர்ச்சி தவிர்க்க முடியாதது என்பது தி.ஜ.ர.வின் வாதம்.

''எழுதுகிறவனின் 'நான்' என்ற உணர்ச்சியைச் சகிக்க முடியாமல் சில சமயம் தவிக்கிறீர்களே, அது ஏன் தெரியுமா? உங்களுடைய 'நான்' என்ற உணர்ச்சி படம் விரித்து ஆடத் தொடங்குவதால்தான் - அப்படியிருக்க, எழுதுகிறவனிடம் மட்டில் அது சாக வேண்டும் என்று ஏன் விரும்புகிறீர்கள்? நம் ஒவ்வொருவரிடமும் நான் என்ற உணர்ச்சி இருக்கும் வரையில்தான் தன்தன் தனித் தன்மையை நாம் காப்பாற்றிக் கொள்ள முடியும். அதற்காக, பிறருடைய நான் என்ற உணர்ச்சியை அமுக்கிவிடும்படி முடி தாழ்ந்து விடாதீர்கள்'' என்பது தி.ஜ.ர.வின் வாதம்.

ஒரு ஹிந்திப் படத்தையும், ஒரு தமிழ்ப்படத்தையும் பார்த்து ஒப்பிட்டு, தமிழ்ப்படம் மோசமாக இருப்பதைக் குறிப்பிட்டு எழுதுகிறார் தி.ஜ.ர. ''காட்சிக்கும் கேள்விக்கும் அறிவுக்கும் உணர்ச்சிக்கும் இனிய நல்ல தமிழ்ப் படங்கள் என்றாவது வருமா?'' என்று ஆதங்கத்தோடு அக்கட்டுரையை முடிக்கிறார்.

இத்தொகுப்பைப் பொறுத்த வரையில் கோபம் பொங்கும் தி.ஜ.ர.வை நாம் அறிமுகம் செய்து கொள்ள முடிகிறது. சினிமா உள்ளிட்ட கலை, இலக்கிய, சமூக அரசியல் துறைகளில் அன்றைய நிலையில் நிலவிய, தாம் மெய்யாய்க் கண்ட போலிகளைச் சாடிய கட்டுரைகள் இவை எனலாம்.

### இது என்ன உலகம்?

''சீர்திருத்தக்காரனுக்கு வைதிகனின் பார்வை தெரியாது. வைதிகனுக்குச் சீர்திருத்தக்காரனின் நோக்கம் தெரியவில்லை. முதலாளியும், தொழிலாளியும் எதிரும் புதிருமாய் நிற்கிறார்கள். அடிமை நாட்டவரும், சாம்ராஜ்ய வாதிகளும் குறுக்கே பாய்கிறார்கள். ஒருவருடைய பார்வையும் போக்கும் கஷ்ட நஷ்டங்களும் சுக துக்கங்களும் மற்றவருக்குப் புரியவில்லை. தங்கள் தங்கள் பக்கத்திலேதான் முழு நீதியும் தர்மமும் இருப்பதாக, ஒவ்வொருவரும்

மனோபாவம் செய்து கொண்டு உறுதியாக நம்புகிறார்கள். தம் கட்சியில் கடுகளவும் அறியாமையின் கலப்பு இல்லையென்றுதான் ஒவ்வொருவரும் நிச்சயமாயிருக்கிறார்கள். வர்ணம் பூசிய கண்ணாடியின் மூலமாகத்தான் நாம் ஒவ்வொருவருமே உலகத்தைப் பார்க்கிறோம். இது என்ன உலகம்? அது நமக்குப் பரிபூர்ணமாய்த் தெரியவில்லை. இந்த நிலையில் உள்ள பரிகாரம் என்ன? அன்பு, பணிவு, அனுதாபம், தியாகம் இவைகளைக் கொண்டுதான் பற்பல பிரச்சனைகளையும் சமாளிக்க முடியும்.''

என்று உலகத்தையே குழப்பமான நிலையில் பார்க்கிறார் தி.ஜ.ர. இச்சூழலில் அன்பு போன்ற விஷயங்களையே சமாளிக்க உதவும் கருவிகளாகக் கொள்ளத் தூண்டுகிறார். இவ்வகைக் கட்டுரைகள் அடங்கிய தொகுப்பு 'இது என்ன உலகம்?' கட்டுரைத் தொகுப்பு. இது மட்டுமன்று, உலகத்தின் சகல வாழ்வியல் பொருள்களைப் பற்றியும் இக்கட்டுரை நூல் பேசுகிறது.

''(இதில் உள்ள) தி.ஜ.ர. வின் கட்டுரைகள் விஞ்ஞான ஆராய்ச்சி அல்ல: புலமையைப் புலப்படுத்தும் வாதம் அல்ல; ஒரே தண்டவாளத்தில் அசையாமல் ஓடும் யந்திர வண்டி அல்ல. மனித வாழ்க்கையிலே ஆயிரமாயிரம் விந்தைகள், வேடிக்கைச் சம்பவங்கள், ரகசியமான தத்துவங்கள், நம் மனத்தைத் தூண்டி, நம்மை அறியாத பரவசத்திலே ஆழ்த்தி விடுவதில்லையா? இம்மாதிரியான விஷயங்களை அன்பும், ஹாஸ்யமும், தத்துவ தரிசனமும் நிரம்பிய உள்ளத்தோடு தம்மை மறந்து எழுத்துருவிலே வடித்து, தி.ஜ.ர. கட்டுரைகளாகத் தரும் போது, நாம் இந்த இலக்கியத்திலுள்ள பசுமையையும் செழுமையையும் இன்சுவையையும் கண்டு கண்டு, உணர்ந்து உணர்ந்து ஆனந்தக் கடலிலே மூழ்கிவிடுகிறோம்.''

என்று இந்நூலின் முன்னுரையில் எழுத்தாளர் கா. ஸ்ரீ.ஸ்ரீ.கூறுவதை இந்நூலில் உள்ள கட்டுரைகளின் மொத்த விமர்சனமாகக் கருதலாம்.

மொத்தம் 29 கட்டுரைகள் அடங்கிய 'இது என்ன உலகம்?' கட்டுரைகள், வாழ்வியலின் பல அம்சங்களைப் பற்றியச் சிந்தனையைச் சுவாரஸ்யமாகச் சொல்லும் கட்டுரைகள்.

நம் அனுபவத்தைக் கொண்டு காரியத்தை அளப்பதால் நேரும் முழுமையின்மை; தர்மம், தியாகம், சத்தியம், ஞானம் இவற்றைக் கொண்டு வாழும் மனித வாழ்க்கை துன்பசாகரத்தில் மிதப்பினும் அதுவே நல்ல வாழ்க்கை; அளவுக்கு மீறித் தன்னைப் பற்றிய கணிப்பு கூடாது எனல்; தூரத்து விஷயங்கள் எப்போதும் கவர்ச்சியாக

இருப்பதன் கால இரகசியம்; செப்பிடு வித்தைக்காரர்களின் செல்வாக்கு; உறுதிமிக்க உள்ளமே சுதந்திரத்தின் அடிப்படை; சம்பிரதாய சுத்தனை விட, சம்பிரதாய விநாசகனே அநேக சந்தர்ப்பங்களில் பெரிய மனிதன் ஆகிறான் எனல் ; ஆணுக்கும் பெண்ணுக்கும் சமஉரிமை வேண்டும் ஆனால் சரி சமானமான வாழ்வு சாத்தியமில்லை எனல்; கதை இலக்கியம் சிறப்பாக வளர்கிறது எனல்; இப்படிப் பல விஷயங்கள் பற்றியும் 'இது என்ன உலகம்'? பேசுகிறது.

புதுமைப் பெண்-என்ற கட்டுரையில் பெண்கள் பற்றிப் பேசுவது தி.ஜ.ர.. வின் பெண்கள் பற்றிய கருத்தைப் புரிந்து கொள்ளப் பயன்படும்.

''வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஆணும் பெண்ணும் சரி சமானமாக வாழ்வது சாத்தியமல்ல என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆனால் வாழ்க்கையின் சுகங்களிலெல்லாம் ஆணுக்கும் பெண்ணுக்கும் சம உரிமை இருந்தேயாக வேண்டும்; அவைகளிலே ஆணுக்கு ஒரு நியாயமும் பெண்ணுக்கு ஒரு நியாயமும் இருக்கவே கூடாது; சட்டங்கள் இயற்றும் தொழிலும், நிருவாகத் தொழிலும் முற்றும் ஆண்கள் கையிலே இருக்குமானால் ஒன்றும் தீங்கு நேர்ந்து விடாது. அந்த மாதிரியே கல்வி போதனைத் தொழில் பெண்களின் ஏகபோகமாக இருக்குமானால் அதிக நன்மை பயக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆண் பெண் கடமைகளை எல்லாம் உரிமைகளாக மயங்கி, அவைகளை நாம் வகுக்க முயல்வது மதியீனமாகும்''.

என்று சொல்லும் தி.ஜ.ர. புதுமைப் பெண்கள் எப்படியிருக்க வேண்டும் என்று எனக்குத் தெளிவாகச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் எப்படி இருக்கக் கூடாதென்று மட்டும் எனக்கோர் ஆசை உண்டு என்றார். அதை விளக்க அமெரிக்க விகடத் துணுக்கு ஒன்றையும் சொன்னார்.

''ஒருவர் மற்றொருவரைக் கேட்டார்; ''அதோ அது யார்? கிராப்புத்தலை, சுருட்டுப்புகை, அரையிலே சல்லடம்-இந்த வாலிப உருவம் என்ன ஆணா, பெண்ணா? புரியவில்லையே!

மற்றவர் சொன்னார்:- பெண் தான்! என் மகள்.

முதல் மனிதர்:- அப்படியா ஐயா! என்னை மன்னியுங்கள். யாரோ என்று தெரியாமல் சொல்லி விட்டேன். நீங்கள் அவளுடைய தகப்பனார் என்று அறியாமல் போனேன்.

மற்றவர்:- நான் அவளுடைய தகப்பன் அல்ல; தாய்''

இந்தக் கதி மேல் நாட்டில் இப்போது நிகழ்ந்து வருகிறது. பெண் மெல்லமெல்ல அங்கே ஆணாகி விட முயன்று வருகிறாள். நம் நாட்டுப்புதுமைப் பெண் வேறே எப்படி வேண்டுமானாலும் வரட்டும்! இப்படி மாத்திரம் வரவேண்டாம்''.

இதுதான் அந்த விகடத்துணுக்கு. புதுமைப் பெண் பற்றிய தி.ஜ.ர. வின் பிரார்த்தனை.

**வளர்ச்சியும் வாழ்வும்**

தி.ஜ.ர. வின் இன்னொரு கட்டுரைத் தொகுதியின் பெயர் 'வளர்ச்சியும் வாழ்வும்'. 1956 இல் இன்ப நிலையத்தாரால் இது வெளியிடப்பட்டிருக்கிறது. முல்லை முத்தையாவின் தூண்டுதலின் பேரில் பல பத்திரிகைகளில் (வானொலி, குமுதம், சுதேசமித்திரன், சக்தி, ஸோஷலிஸ்ட், அஜந்தா ஆகியவற்றில்) எழுதியவற்றிலிருந்து சேகரித்து இது நூலாக்கப்பட்டிருக்கிறது. தி.ஜ.ர. சிறந்த சிறுகதை ஆசிரியர் என்று மஞ்சேரி ஈசுவரன், சுதந்திரா பத்திரிகையில் எழுதியதை ஒருவர் மறுத்து, தி.ஜ.ர. சிறுகதை ஆசிரியர்அல்ல; கட்டுரை எழுதுவதில் தான் வல்லவர்' என்று அதன் ஆசிரியருக்கு எழுதியிருக்கிறார். இந்தச் சம்பவத்தைத் தி.ஜ.ர. இந்நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுக் கீழ்வருமாறு தன் கருத்தைத் தெரிவித்தார்.

''இவர் இப்படிச் சொன்னாரா; வேறு சிலர் இதற்கு நேர்மாறாய்ச் சொல்வது வழக்கம். தி.ஜ.ர. வந்து கட்டுரை எழுதவாவது! ஏதோ, என்னவோ எழுதுகிறார். கதை எழுதினாரானால் எவ்வளவு ஜோராயிருக்கும்! என்று அவர்கள் சொல்கிறார்கள். கதை எழுதினால், கட்டுரையில் வல்லவன்! கட்டுரை எழுதினால் கதையில் வல்லவன். இப்படி எனக்கு இரண்டு விதங்களிலும் நல்ல பெயர் உண்டு அல்லது கெட்ட பெயரோ?''

இரண்டு விதங்களிலும் நல்ல பெயர் உண்டு என்பதோடு மட்டும் முடித்திருந்தால் அது எவரும் எழுதுவதாய் விடும் 'அல்லது கெட்ட பெயரோ?' என்று எழுதியதுதான் தி.ஜ.ர.வின் முத்திரை.

12 கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன இந்நூலில். இலக்கியம் சார்ந்த கட்டுரைகளாகவே அவை அமைந்துள்ளன. ஏற்கெனவே நூல்களில் வெளியான கட்டுரைகள் சிலவும் மீண்டும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

***மொழி வளர்ச்சி***

இன்ப நிலையம் வெளியிட்ட தி.ஜ.ர வின் இரண்டாவது நூலான 'மொழி வளர்ச்சி', முதல் நூல் (வளர்ச்சியும் வாழ்வும்) வெளியான ஓராண்டிற்குள் அதாவது 1957 இல் வெளியானது. 18 கட்டுரைகள் அடங்கியது இந்நூல். மற்ற தி.ஜ.ர. தொகுப்புகளின்றும் இந்நூல் வேறுபடுவது அதன், உள்ளடக்க ஒருமையால். இந்நூல் கட்டுரைகள் அனைத்தும் ஒரு பொருளைப் பற்றியனவே. மொழி வளர்ச்சி மட்டுமே இந் நூலின் பொருள். கல்வி அலங்கோலம், இது மொழிப் பகைமையா? ஹிந்தி வெறி, அபாய நிலைமை, மூன்று பிரச்சனைகள், மொழிக் கல்வி, பொது மொழி எப்போது?, பாஷையின் இயல்பு, கல்வியில் புதுமுறை, ஆங்கிலத்தின் நிலை, சொல்லாக்கல் முயற்சி, தமிழிலே புது நூல்கள், தமிழின் தனி நிலை, பொது லிபி-1, பொது லிபி-2. பொது லிபி-3, ஹிந்தியும் ராஜாஜியும், சுருங்கச் சொன்னால் என 18 தலைப்புகளுமே தி.ஜ.ர. வின் மொழிக் கொள்கையைப் புரிந்து கொள்ளப் பயன்படுவனவாகும்.

"என் அன்புக்கும் வணக்கத்துக்கும் உரிய காலஞ் சென்ற வ.ரா. அவர்களின் தமிழ்க் காதல் எத்தனையோ பேரை ஆட் கொண்டது போல என்னையும் ஆட் கொண்டது. அதுவே இந்தக் கட்டுரைகளை நான் எழுதத் தூண்டிய மூல காரணம். தாய்மொழி என்பது எவனுக்கும் மூச்சுக் காற்று. அதுவே வாழ்வு தருவது; வளந்தருவது; வலிமை தருவது. தமிழ் மேலும் மேலும் சீரும் சிறப்பும் பெற்று என்றென்றும் வாழ்வதாக! இது நம்மை நாமே வாழ்த்திக் கொள்வதாகும். ஆம் நாம் வாழத்தான் வேண்டும் வாழ்வோம். எந்த இடுக்கணையும் கடந்து வாழ்வோம்".

என்று மொழி வளர்ச்சி நூலின் முன்னுரையில் தி.ஜ.ர. குறிப்பிட்டிருப்பதைக் கூர்ந்து நோக்கினால் ஓர் உண்மை தெரியவரும். தமிழ் மொழிக்கு (50 களில்) இடுக்கண் நேர்ந்ததை மனம் கொண்டு அதைக் கடந்து வாழ முடியும் என்ற நம்பிக்கையை ஊட்டும் நோக்கத்தில் இக் கட்டுரைகள் எழுதப்பட்டிருப்பதை அவதானிக்கலாம்.

மொழிப் பிரச்சனையால், இந்திய ஒற்றுமை குலையக் கூடாது என்பது தி.ஜ.ர. வின் திடமான அபிப்பிராயம் (ப.151, மொழி வளர்ச்சி). தாய் மொழியானது அறிவு, நாகரிகம், சமூக ஒற்றுமை ஆகியவற்றை உருவாக்குவதில் ஆற்றும் பெரும்பங்கைக் கருத்தில் கொண்டவராக விளங்கும் தி.ஜ.ர. ஒரு பிரதேசத்தின் தாய் மொழியை, மற்றொரு பிரதேசத்தின் மீது அலுவல் மொழியாகத் திணிப்பதை ஏற்க

மறுக்கிறார் (ப.151, மொழி வளர்ச்சி). புவியியல் அடிப்படையில் ஒன்றான தேசத்தில் பொது மொழியாக விளங்க வேண்டிய மொழி, அந்த தேசத்தின் பல மொழிகளும் சேர்ந்து கடைந்து திரட்டி எடுத்த மொழியாக இருக்க வேண்டும். அது எல்லாப் பிரதேச மக்களுக்கும் சம வசதி, சம உரிமை உள்ளதாக இருக்க வேண்டும் (ப. 152, மொழி வளர்ச்சி) என்கிறார்.

தி.ஜ.ர., சொல்லும் பொதுமொழிஇலக்கணங்களுக்கு ஈடுகொடுக்கும் ஒரு மொழி இல்லாத நிலையில், பொது லிபி ஒன்றை முன்னுரைக்கிறார். பொதுலிபியின் தேவை, சாத்தியம் அதை நடைமுறைக்குக் கொண்டு வரும் முறை ஆகியவற்றை விளக்குகிறார்.

நவீன அறிவியல் கலைகள் இந்தியாவின் தேசிய மொழிகள் அனைத்திலும் வரவேண்டும். அதற்குப் பல கலைச் சொற்கள் புதியதாகத் தேவையாயிருக்கின்றன என்று கூறும் தி.ஜ.ர., அதற்குரிய சொல்லாக்கல் முயற்சிகளை வரவேற்கிறார். சொல்லாக்கல் முயற்சி வாழ்க்கையோடும் இலக்கியத்தோடும் ஒட்டும்படியும் அவற்றுக்கு உதவும் முறையிலும் நடக்க வேண்டும். குறுக்கே விழுந்து அவற்றை வழி மறிக்கும் முறையில் அல்ல (ப.155, மொழி வளர்ச்சி) என்று விளக்கினார்.

தமிழை ஆங்கிலத்தின் துணைக் கொண்டு வளர்ப்போம் என்பது தி.ஜ.ர. வின் யோசனை. முளைக்கு உணவளித்துப் பயிரை வளர்த்து இற்று விழும் விதை போல ஆங்கிலம் இயற்கையாக நம்மை விட்டுப் போக வேண்டும் என்பதே தி.ஜ.ர. வின் கருத்து.

### வீடும் வண்டியும்

சம கால நிகழ்வுகளை அல்லது யதார்த்தத்தை இலக்கியமாக்கிய தி.ஜ.ர. வின் சாதனைகளுள் குறிப்பிடத்தக்க சாதனை இந்நூலாகும். கிராம நாகரிகம் அழிந்து, நகர நாகரிகம் தோன்றி வளர்ந்த காலக் கட்டத்தின் வாழ்க்கையைப் படம் பிடித்திருக்கிறார் தி.ஜ.ர. இந்நூலில். குடியிருப்புப் பிரச்சனைகளும், போக்குவரத்துப் பிரச்சனைகளும் வீடும் வண்டியுமாய் அடையாளப்படுத்தப்பட்டுத் தலைப்பாயின. இச்சமகாலப் பிரச்சனையின் முக்கியத்துவத்தை, மற்றவர்கள் புறந்தள்ளியபோது தி.ஜ.ர. அதைக்கையிலெடுத்து இலக்கியமாக்கி விட்டார். இன்று இப்பிரச்சனைகளுக்கு நேர்ப் பொருத்தம் இல்லாதிருக்கலாம். ஆனால் இப்பிரச்சனைகள் வேறு வடிவத்தில் இருக்கத்தான் இருக்கின்றன. அப்படியே இல்லை என்று சொன்னாலும் ஒரு காலக் கட்ட மக்களின் வாழ்க்கையின் துன்பம், இதில்

பதிவாகியுள்ளதை மறுத்து விடமுடியாது. தீவிர இலக்கியவாதியான தி.ஜ.ர. வீட்டையும் வண்டியையும் மட்டும் பேசி முடித்துக் கொண்டு விட வில்லை. அவற்றை நிமித்தமாகக் கொண்டு வேறு பலவற்றையும் பேசினார். இதை அவரே நூலின் முன்னுரையில் இவ்வாறு குறிப்பிடுகிறார்:

''இந்த வீட்டுப் பிரச்சனை பற்றியும் வண்டிப் பிரச்சனை பற்றியும் எல்லோரும் சிந்தித்தாக வேண்டும். அதற்காகத்தான் இந்தத் தொகுதிக்கு 'வீடும் வண்டியும்' என்று பெயர் வைத்தேன். இது மனைக் கலையோ, வண்டிக் கலையோ அல்ல. வீட்டையும் வண்டியையும் நிமித்தமாகக் கொண்டு, வேறு பொருள் பற்றியெல்லாம் பேசியிருக்கிறேன்.''

நகர, நடுத்தர வர்க்கத்துப் பிரச்சனைகளுள் ஒன்று வாடகைக்கு வீடு தேடுவதும். மாறுவதும். இது பற்றிய பல கட்டுரைகளில் தி.ஜ.ர. ஒரு வித நகைச்சுவையுடன் பிரச்சனையை விளக்கிக் கொண்டே போவார். அதில் ஒரு சித்திரம் இது:

''ஒரு சமயம் நானும் இன்னொரு நண்பரும் ரோட்டிலே பேசிக் கொண்டு போனோம்.

நண்பர் சொன்னார்; ஆமாம். அவன் சொன்ன ஜாகையா? ஒரே ஒரு கூடம்; ஒரே ஓர் அறை. அதுவும் காற்றுப் புகாத வீட்டின் கடைசிப் பின் கட்டு.

அப்படியா? ரொம்ப அழகுதான். அது நமக்குக் கட்டாது என்றேன் நான்.

பின்னாலிருந்து யாரோ ஒரு நண்பர் ஓடோடியும் வந்து எங்களை வழி மறித்துக் கொண்டு. ''ஸார், உங்களுக்குக் கட்ட வேண்டாம் ஸார். எனக்குக் கட்டும். எங்காவது கூரைக்குக் கீழே ஒரு சாண் இடம் என்று இருந்தால் போதும் ஸார். அந்த ஜாகை இருக்கிற இடத்தைச் சொல்லுங்களேன் என்றார். அழாக்குறை. மகா பரிதாபமாய் இருந்தது அவரைப் பார்க்க''.

'புது இடம்' என்ற கட்டுரையில் இவ்வாறு வீடு தேடும் பிரச்சனையை விளக்குகிறார். சென்னையிலிருப்பவர் புறநகரான தாம்பரத்திற்குப் போவதும், தாம்பரத்திலிருப்பவர் சென்னைக்கு வருவதுமாக மாறிமாறி வாழ்ந்து பார்த்தாலும் பிரச்சனை தீரவே இல்லை. ''இந்த மாதிரி ஜாகை மாற்றும் அனுபவங்கள், சென்னையில் சகஜமாயிருக்கின்றன. வீடு கிடைப்பதே இல்லை. ஆனாலும் வீட்டுக்காரார்கள் நோட்டீஸ் கொடுத்துக் கொண்டேயிருக்கிறார்கள்.

ஜாகைதாரர்கள் வீடு மாறிக் கொண்டேயிருக்கிறார்கள்'' என்று விவரிக்கிறார் தி.ஜ.ர.

ஒண்டுக்குடித்தனக்காரர்களிடம், வீட்டு உரிமையாளர்கள் தாங்கள் செலவழிக்கும் மின்சாரத்திற்கும் சேர்த்துக் கட்டணம் பெற்று விடுவதைப் பற்றியது 'ஒண்டுக்குடி' என்ற கட்டுரை. ஒவ்வொரு குடித்தனக்காரரும் அவரவர் உபயோகிக்கும் மின்சாரத்தைக் கணக்கிடத் தனி மீட்டர் என்ற முறை இப்போது வந்து விட்டதென்றாலும், பொது உபயோக இடம் என்ற முறையிலும், மின்சார வாரியம் விதிக்கும் கட்டணத்திற்கு மேல் கட்டணம் வைத்து வசூலிப்பது என்ற முறையிலும் இந்தக் கொடுமை இன்னும் வேறு வகையில் தொடர்வதை நடுத்தர வர்க்க நகரவாசிகள் அறிவர்.

''வீட்டுக்காரர் முழுப்பணமும் நாங்களே கொடுக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்தார். கூடக் குடியிருந்தவர் முடியாதென்று சண்டித்தனம் செய்தார். கடைசி வரையில் அதைக் கொடுக்காமல் அவர் வெளியேறியும் விட்டார். அவர் போன பின்பு வீட்டுக்காரக் கிழவர் என்னிடம் வந்தார். 'எங்கே அந்த இரண்டு ருபாய்'' என்று கேட்டார்.

எந்த இரண்டு ருபாய்?

''எலெக்டிரிக் கட்டணப் பாக்கி''

என் பங்கைத்தான் கொடுத்து விட்டேனே?

அதெல்லாம் எனக்குத் தெரியாது. எலெக்டிரிக் கட்டணப் பாக்கியை வீட்டுக்காரன் கொடுக்கமாட்டான். குடியிருப்பவர்களே கொடுக்க வேண்டும். ஒருவர் கொடுக்காவிட்டால் இன்னொருவர் கொடுக்க வேண்டும் என்றார் கிழவர். எனக்குப் பகீர் என்றது. இதென்ன நியாயம்!

முடியாது என்றேன்.

விட மாட்டேன் என்றார் அவர்.

பணத்தைக் கொடுத்துத் தொலைத்து விட்டு, இதுவே ஒரு மாத நோட்டீஸாய் வைத்துக் கொள்ளுங்கள். நான் ஜாகை மாறப் போகிறேன் என்றேன்.

குஷாலாய்ச் செய்யும் என்றார் வீட்டுக்காரர்''.

இது ஒரு மின்சாரக்கட்டணத்தால் சுரண்டப் பெறும் ஒண்டுக்குடித்தனச் சித்திரம் - இது 50' களின் சென்னை மாநகர நிலைமை எனக் கருத வேண்டும். இன்று நிலைமை இதை விட மோசம்.

'பேய் வீடு' என்ற கட்டுரை, சிறுகதை வரிசையில் சேர்க்கத் தகுந்தது. இரண்டாம் உலகப் போரின் போது ஜப்பான், சென்னையில் குண்டு வீசப் போகிறது என்ற தகவல் பரவிச் 'சென்னையே காலியாகி விட்டதை' 40' களின் நிலைமையைத் தெரிந்தவர் அறிவர். அப்படி நகரம் காலியான போது, மாளிகை போன்ற ஒரு வீடு, ஒரு மனிதருக்கு மிகவும் மலிவான வாடகைக்குக் கிடைத்தது. போரின் முடிவுக்குப் பின்பு நகரெங்கும் ஜனத்திரள் வந்து கூடியபோது ஓர் அங்குலமும் வீடு கிடைக்காத நிலை ஏற்பட்டது. அப்போது பல பேர் வந்து வந்து இந்த வீட்டிலும் கண் போடத் தொடங்கினார்கள். இந்தக் குடியிருப்புக்கு எங்கே மோசம் வந்து விடப் போகிறதோ என்று குடியிருந்தவருக்குக் கிலி உண்டாயிற்று. ஆகவே ஒரு யுக்தி செய்தார். அந்த வீட்டைப் பற்றிப் பயங்கரமான ஒரு கதை உண்டு. அதைப் பயன்படுத்திப் பேய் வீடு, பேய் வீடு என்று வருபவருக்கு எல்லாம் நம்புமாறு சொல்லி விட்டார். வந்த பலபேர் திரும்பிப் போயினர். ஒருவர் மட்டும் இல்லை எனக்குப் பேய் வீடுதான் வேண்டுமென்றார். பலவாறு வற்புறுத்தியும் கேட்டார். குடித்தனக்காரர் கூர்ந்து பார்த்தார். வந்தவர் பேய் மாதிரி தெரிந்தார். இவருக்குக் கிலி பிடித்தது. வீட்டைக் காலி செய்து விட்டார் என்பது கட்டுரை. கடைசியில் சிறு கற்பனை சேர்த்து இதை எழுதியதாகச் சொல்லும் தி.ஜ.ர. உண்மையில் இவ்வாறு ஒருவர் சொல்லிக் கொண்டிருப்பது தனக்குத் தெரியும் என்று முடிக்கிறார்.

'வெட்ட வெளி வீடு' என்ற கட்டுரை, புறநகர் ஒன்றில் வெட்டவெளி ஒன்றில் தனி வீடு கட்டிக் கொண்டு நிம்மதியற்று அலைபாயும் ஒருவரைப் பற்றியது. அவரைப் பார்க்கச் சென்ற ஆசிரியருக்கு ஒரு மனை வாங்கிப் போடுங்களேன் என்று யோசனை சொல்ல அதைப் பற்றி விவரிக்கும் பகுதி தான், தி.ஜ.ர. வின் சமகாலச் சிந்தனையை நமக்குக் காட்டி விடும் பகுதி. தான் அரண்மனை வாங்கத் திட்டமிட்டிருக்கிறேன் வெறும் மனையாவது என்று தொடங்குகிறது தி.ஜ.ர. வின் இக்குறிப்பிட்ட பகுதி உரையாடல்.

"கம்யூனிஸ்டுகளின் தர்க்க ரீதி எப்படியோ அப்படித்தான் என் தர்க்க ரீதியும். அவர்கள் என்ன சொல்லுகிறார்கள்? "உடனே இந்தியா முழுவதும் மில் மயமாக வேண்டும்; டிராக்டர் மயமாக வேண்டும்; பஸ்மயமாக வேண்டும். ரெயில்மயமாக வேண்டும். விமான மயமாக வேண்டும் இதுதான் சரியான பொருளாதாரம்" என்கிறார்கள். அதாவது கையில் நூற்பதாவது! கலப்பையாவது, காளை உழவாவது! போகவும் வரவும் காலால் நடப்பதாவது! இந்த இருபதாம் நூற்றாண்டிலே நடக்கிற இந்தப் பைத்தியக்காரத்தனத்தையெல்லாம்

பார்த்து இந்தியக் கம்யூனிஸ்டுகள் சிரிக்கிறார்கள். நானும் இந்த இருபது வருஷமாக அரண்மனை வாங்கத்தான் திட்டம் போட்டிருக்கிறேன். திட்டத்தில் எந்தக் குறையும் இல்லை. பின் ஏன் வாங்கவில்லை? என்று நீங்கள் கேட்கலாம். பணம் இருக்கிறது பாருங்கள் பணம். அது தான் கையில் இல்லை.

எனக்குக் கம்யூனிஸ்டுகளின் கற்பனை மீது மிகுந்த பிரியந்தான். ஆனால் இந்தப் புது வீடு கட்டிக் கொண்டவர் மாதிரி நண்பர்களின் காரியத்திலேயே பிரியம்".

என்று தி.ஜ.ர. வின் அந்த உரையாடலைச் சுருக்கிக் கூறலாம். பொதுவுடைமையாளர்கள் பற்றிய தி.ஜ.ர. வின் மனவோட்டத்தைப் புரிந்து கொள்ள உதவுவது இக்கட்டுரை.

"பிரேக் டவுன்" ஆன ஒரு பேருந்தில் நடந்த சம்பவத்தை நகைச்சுவை மிளிர விவரித்து விட்டு அதையே நிமித்தமாகக் கொண்டு, ஜனநாயகத்தின் கடமையை வலியுறுத்துகிறார் 'சண்டி பஸ்' என்ற கட்டுரையில்.

"அதிகாரிகளுக்கு என்ன பொறுப்பு? தொழிலாளர்களுக்கு என்ன பொறுப்பு? மக்களுக்கு என்ன பொறுப்பு? என்று விளக்கிப் பார்க்கும் இயல்பையே இழந்து வீணே சதா காலமும் முணுமுணுத்துக் கொண்டிருப்பதா ஜனநாயகம்? மந்திரிகளும், சர்க்கார் நிர்வாகமும் ஒழுங்காய் நடக்க வேண்டியதுதான். ஆனால் மக்களுக்கு எந்த வித ஒழுங்கும் தேவையில்லை என்று அர்த்தம் அல்ல. கள்ள மார்க்கெட்டை ஆயிரம் சட்டங்களாலும் தடுக்க முடியாது; ஜனங்கள்தான் தடுக்க வேண்டும். உற்பத்தியை எத்தனை உத்தரவுகளாலும் பெருக்க முடியாது. ஜனங்களின் உழைப்புதான் பெருக்க வேண்டும். வேற்றுமைகளை எத்தனைப் பலாத்காரத்தாலும் களைய முடியாது! கலை வளர்ச்சியால்தான் களைய முடியும்."

என்று தி.ஜ.ர. பேசும் போது அதிகாரவர்க்கச்சாயல் இருப்பது போலத் தோன்றினாலும், கடமையை வலியுறுத்தும் எழுத்தாளனின் அறச்சீற்றத்தையே நாம் கவனிக்க வேண்டும்.

இந்த அறச்சீற்றத்தை, அடுத்து வரும் 'பேருந்தும் சர்க்காரும்' என்ற கட்டுரையின் கருத்தும் உறுதி செய்யும். பேருந்துக் கட்டணத்தை அரசாங்கம் உயர்த்திய போது கிண்டல் செய்து தி.ஜ.ர. எழுதியது இது.

"என்னைக் கேட்டால், நம் சர்க்கார் இப்படியெல்லாம் ஜனங்களைச் சில்லரைப் பரிகாசம் செய்து கொண்டிராமல், ஒரு பெரிய வேலை செய்து விடலாம். அதாவது டிராமை ஒழித்தது போல

பஸ்ஸையும் ஒழித்து விடலாம். இதற்குப் பதிலாக ஆங்காங்கே சில தண்ணீர்ப் பந்தல்களை வைத்து விடலாம். மயிலாப்பூர் அறுபத்து மூவர் உற்சவத்தின் போது சிலர் தர்மம் செய்கிறார்களே அந்த மாதிரி வழிநெடுகிலும் பல இடங்களில் வெள்ளரிக் காய்களை நறுக்கித் தருமம் செய்வோரையும் நியமித்து விடலாம். கண்டக்டர். டிரைவர்களுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுமே என்று அஞ்சத் தேவையில்லை. அவர்கள் அனைவர்க்கும் தண்ணீர்ப்பந்தல் தருமத்திலும் வெள்ளரிக்காய் விநியோகத் திருப்பணியிலும் உத்தியோகம் தந்து விடலாம். இப்படிச் செய்தால் நாம்பாட்டுக்கு கையை வீசிக் கொண்டு, இரண்டு வெள்ளரிக்காய் துண்டுகளைக் கடித்துக் கொண்டு 'ஜாம் ஜாம்' என்று தினந்தோறும் ஆபிசுக்குப் போகலாம். போய் ஆபிசில் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்கிறது. பிறகு புறப்பட்டு வீட்டுக்குப் பிரயாணம் செய்கிறது....என் யோசனை எப்படி? பேஷானதல்லவா?"

இதே போலப் பேருந்தில் நடந்த இன்னொரு சம்பவத்தை முன்வைத்து, தி.ஜ.ர., சமூகப் பொறுப்புணர்ச்சி பற்றிப் பேசுகிறார். சமூகக் கடமை என்பது என்ன? சமூகத்துக்கு உண்மையாக நடந்து கொள்ளுவது எப்படி என்பது பற்றியது அச்சித்திரம்.

"நல்ல புஸ்தகம் போடுங்கள்; ஏன் கேவலமான புஸ்தகங்களைப் போடுகிறீர்கள் என்று ஒரு பிரசுரகர்த்தரிடமும் ஆபாசப் படங்கள் வேண்டாம் என்று ஒரு பட முதலாளியிடமும் கள்ள மார்க்கெட் நடத்தாதீர் என்று ஒரு வியாபாரியிடமும் நாச ஆயுதங்களைப் படைக்காதீர் என்று ஒரு விஞ்ஞானியிடமும் ஒழுக்கக் கேட்டைச் சித்திரிக்காதீர் என்று ஒரு கலைஞனிடமும் சொன்னால், 'விற்கும் புஸ்தகத்தைப் போடுகிறேன்; நான் சேவை புரியவில்லை' என்கிறார் பிரசுரகர்த்தர். 'ஜனங்கள் விரும்புவதைப் பிடிக்கிறேன். எனக்குப் பணம் முக்கியம்' என்கிறார் பட முதலாளி; 'நான் செய்வது வியாபாரம் தத்துவ ஆராய்ச்சி அல்ல' என்கிறார் வியாபாரி. "ஞான ஒளியைத் தேடுபவன் நான்; அதன் நிழலைப் பற்றி எனக்கென்ன கவலை' என்கிறார் விஞ்ஞானி. 'கலையை ஒழுக்கம் கட்டுப்படுத்தாது. நான் தர்ம சாஸ்திரி அல்ல' என்கிறார் கலைஞர். இத்தனையும் அபத்தம். எவன் எதைப் புரிந்தாலும், அவனுக்கு அதிலே ஒரு சமூகப் பொறுப்பு உண்டு. பிரதி பிரயோசனத்தை விரும்பாமல் சேவை புரிபவனே உத்தமனாக நடந்து நல்ல காரியம் புரிய வேண்டும் ; பிரதி பிரயோசனத்தை விரும்பிச் செயல் புரிபவனெல்லாம் என்ன அக்கிரமம் வேண்டுமானாலும் செய்யலாம் என்பது போலச் சிலர் பேசுகிறார்கள். இது மூடத்தனம் ஒருவன் ஊதியம் பெற்றாலும்

பெறாவிட்டாலும் அவன் செய்யும் ஊழியத்திலே சமூகத் துரோகம் கலக்கக் கூடாது; நான் சேவை செய்யவில்லை' பிஸினெஸ் செய்கிறேன்' என்று சொல்லி எந்தத் துரோகியும் தப்பித்துக் கொள்ள முடியாது.''

இன்னொரு இடத்தில் மிகத் தெளிவாகப் பொருளாதார விடுதலை எவ்வளவு முக்கியமானது என்பதைத் தி.ஜ.ர. கூறி விடுகிறார்.

''வகுப்புப் பிரச்சனையை நாம் சந்திக்கிழுப்பது ஏழை மக்களை ஏமாற்றும் செப்பிடு வித்தையாகும். கோடிக் கணக்கான மக்களுக்குப் பொருளாதார விமோசனம் வேண்டும். அந்த விமோசனத்துக்குப் பாடுபடாமல் அவர்களைக் குருட்டு வழியில் திருப்புவதற்காக, ''ஜாதி வேற்றுமையிலும், சமய வேற்றுமையிலும் இருக்கிறது சூட்சமம்'' என்று சொல்லி உண்மை இலட்சியத்தை அவர்களிடமிருந்து மறைக்கப் பல பொய் நிழல்களைச் சிருஷ்டித்து வருகிறோம். ஏழை மக்களுக்குப் பொருளாதார விமோசனம் வேண்டும்.''

''இன உணர்ச்சியை இயற்கை'' என்று கருதி அதைத் தவறல்ல என்று நம்பி, அதை அழிவிலிருந்து பாதுகாக்கவே, அனைவரும் ஏற்றுக் கொள்ளும் பொருளாதார விடுதலை என்ற கேடயத்தைத் தி.ஜ.ர. எடுக்கிறார் என்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது.

தி.ஜ.ர.வின் இயந்திர நுட்ப அறிவுக்குச் சான்றாக அமைவது இன்னொரு கட்டுரை. இதில் காமராவின் தொழில்நுட்பம் பற்றிப் பேசுகிறார்.

தி.ஜ.ர.வின் காலத்தில் சென்னை நகரில் தோன்றிய பால் டெப்போக்கள் பற்றியும், அதற்கு முன்னர் பால் விநியோகத்தைச் செய்து கொண்டிருந்த தனியார் பால்காரர்கள் பற்றியும், 'பாலும் நீரும்' என்றக் கட்டுரையில் எழுதியுள்ளார். அதில் நகைச்சுவை மிதக்கும்.

''இங்கே(சென்னையில்) உள்ள எருமைகள்,ஆடுகள் எல்லாமே பசும்பால் தான் கறக்கின்றன. இன்னும் என்ன என்ன ஜந்துகள் பசும் பால் கறக்கின்றனவோ, ஆண்டவனே அறிவான். ஆனால் அது எனக்குத் தெரியாது. ஓர் எருமை எப்போதும் பசும் பாலே கறந்து கொண்டிருப்பது மாத்திரம் எனக்குத் தெரியும். நான் அறிந்த பால்காரக் கிழவி இருக்கிறாள். அவள் கொட்டிலில் ஒரே ஓர் எருமை மாடு கட்டியிருப்பதைத்தான் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அவள் விற்பது அவ்வளவும் பசும்பாலே. அவளுடைய எருமை ஒரு

படிபால் கறப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அதைக் கிழவி முதலிலே பசும் பாலாக மாற்றுவாள். எருமை கறக்கும் ஒரு படி பாலிலே பம்புக் குழாய் கறக்கும் ஒரு படியை ஊற்றினால் இரண்டுபடி சுத்தமான பசும்பால் கிடைத்து விடுகிறது. அதற்கு மேலே அதே பம்புக் குழாயிலிருந்து மேலும் ஆறு படி கறந்து கொண்டு வந்து ஊற்றினால் முதல் தரமான வியாபாரப் பசும்பால் எட்டுப்படி கிடைத்து விடுகிறது.

பாலில் தண்ணீர் கலந்து விற்கும் கதையைச் சொல்ல இப்படி நீட்டி முழக்கித்தான் சொல்ல வேண்டுமா? என்ற கேள்வி நமக்கு எழலாம். இறுக்கமான செய்யுள் தமிழில் மூச்சு முட்டிக் கொண்டிருந்த வேளையில் தமிழை ஜனநாயகப்படுத்தும் முயற்சியில் இருந்தவர்களின் ஈடுபாடுள்ள எழுத்து இது என்ற காலப் பின்னணியில் இக்கட்டுரையை வைத்துப் பார்க்க வேண்டும்.

## யோசிக்கும் வேளையில்

''யோசிக்கும் வேளையில்'' நூலில் உள்ள கட்டுரைகளும் சமகால வாழ்வின் பல்வேறு பொருள்களைப் பற்றிப் பேசியவை. சமகால யதார்த்த வாழ்வில் தாம் பெற்ற அனுபவங்களை வாசகரோடு பகிர்ந்து கொள்ளும் தளத்திலேயே கட்டுரைகள் உள்ளன. ஆழ்ந்த தத்துவங்களின் விவரணையாகக் கட்டுரை அமையவில்லை. இடையிடையே மின்னற் கீற்றுகளாக அனுபவத் தத்துவங்கள் வெளிப்படுகின்றன.

அநுதாப அதிர்ச்சி என்ற கட்டுரை, எந்தக் கொள்கையையும் தீவிரமாகச் செயல்படுத்த முனையக் கூடாது. நம் சம்பிரதாயத்தையும், ஐதிகத்தையும் ஒட்டி, அநுதாபத்தோடுதான் இன்றைய சிக்கல்களுக்குப் பரிகாரம் தேட வேண்டும். அதுவே புத்திமான்களுக்கு அழகு என்ற கருத்தை, சமகால நவீன கண்டுபிடிப்பான வானொலியின் 'அநுதாப அதிர்ச்சி' தத்துவத்தை முன் வைத்து விளக்குகிறது. 'என் ரேடியோ' - என்ற கட்டுரை, வானொலி என்ற நவீன அறிவியலின் விளைவு தமிழகத்திற்கு வந்ததையும், அதை அவர் எதிர்கொண்ட விதத்தையும் சுவாரஸ்யமாக விளக்குகிறது. இயந்திர நுட்பத்தை அறியும் ஆர்வம் கட்டுரையில் பளிச்சிடுகிறது. வானொலி ஒலிபரப்பில் என்ன நடக் கிறது? வானொலியின் செயல்பாட்டைத் தான் அறிந்து கொள்ள முயன்றபோது நிகழ்ந்தவைகளின் விவரிப்புகள், வானொலியைத் தான் பயன் கொண்ட விதம் ஆகியவை இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன.

காலம் நிலையாமையைப் பற்றியது 'பிரபஞ்ச அற்புதம்' கட்டுரை. பழைய இன்பமான நாட்களை மட்டும் திரும்ப அடைய முடியாது. ஒருக்காலும் முடியாது. இதுதான் பிரபஞ்ச அற்புதம் என்கிறது கட்டுரை. அதை மறந்து மனிதன் எப்படியெல்லாம் நினைக்கிறான் என்று விவரிக்கிறது கட்டுரை.

சென்னையில் மாநகரக் குடிநீர்த் திட்டத்தின் ஓர் அங்கமாக வீடுகளில் குடிநீரைப் பெற அமைக்கப்பட்ட 'அடிபம்பு' பற்றியது 'குழாய் ரிப்பேர்' என்ற கட்டுரை. சென்னை மாநகராட்சியின் ஏற்பாட்டில் குழாய் வழி அனுப்பப்பட்ட குடிநீரை, வீடுகளில் பெற அமைத்துக் கொள்வது 'அடிபம்புகள்'. இந்தப் பம்புகள் அடிக்கடி பழுதாவதையும், அந்தப் பழுதை நீக்குவதில் தான் தேர்ச்சி பெற்றதையும் சுவையாக விவரிக்கும் கட்டுரை 'குழாய் ரிப்பேர்' என்ற கட்டுரை. சம கால வாழ்க்கையை யதார்த்தத்தின் வியர்வை கசிய விவரிக்கும் தி.ஜ.ர.வின் திறமையை இதில் காணலாம்.

"முந்திய தலைமுறையினரான நம் பெற்றோர்கள் 'சத்தியம் பேசு, தர்மமாய் நட, தீரமாய் வாழ்' என்றெல்லாம் சூத்திரம் போல் பல தத்துவங்களை நம்மில் பலருக்கு நம் குழந்தைப் பிராயத்திலே சொல்லிக் கொடுத்தார்கள். அந்தச் சூத்திரங்களின் முழு அர்த்தத்தையும் அறியாத கிளிப்பிள்ளைகளாய் அவற்றை நாம் கிரகித்துக் கொண்டோம். அப்படியே நம்பிவிட்டோம். இதுதான் இன்றைய விபரீதத்துக்கு மூல காரணம்." (ப.29, யோசிக்கும் வேளையில்)

'சத்தியம் பேசு' என்ற உபதேசத்தில் தவறு இல்லை. ஆனால் நீருக்கு நடுவில் நெருப்பை மூட்ட முடியாது. அசத்திய அஸ்திவாரத்தைக் கொண்ட சமூகத்தில் சத்தியம் எழாது; போலிச் சத்தியமே கிளம்பும் (ப.29, யோசிக்கும் வேளையில்).

சமூக இயல்பை அவர்களுக்கு (குழந்தைகளுக்கு) நன்றாய் விளக்கிக் கூற வேண்டும். வாழ்க்கையிலே என்ன என்ன சங்கடங்கள் ஏற்படும், எத்தகைய புல்லுருவிகள் தோன்றும். சமூகத்திலே எவர் எவர் வெறும் உதவாக்கரைப் பகட்டுப் போலிகள், இவர்களும் இந்த நிலைமைகளும் எதிர்ப்படும் போது நாம் எப்படியெல்லாம் சமாளிக்க வேண்டும் என்பதையெல்லாம் அவர்களுக்குப் போதிக்க வேண்டும். இதற்கேற்ற தகுதியும், திறமையும், விவேகமும் அவர்களுக்கு ஏற்படுவதற்காக அரசியல், சமூகம், பொருளாதாரம், விஞ்ஞானம், வேதாந்தம், இலக்கியம் முதலிய பல கலைகளிலும் அவர்களுக்கு உன்னதமான தேர்ச்சி உண்டாகும்படி எங்கெங்கும் ஞானக்

கலைகளைப் பரப்ப வேண்டும். வெறும் கிளிப் பிள்ளைச் சூத்திரங்கள் பயன்படமாட்டா'' (ப.30, யோசிக்கும் வேளையில்)

'கிளிப்பிள்ளை பேச்சு' என்ற கட்டுரையின் சாராம்சம் மேலே கண்டது. சமூக வாழ்க்கையில் அவர் கண்ட போலிமை, குழந்தைகளைச் சமூகத்திற்குத் தயாராக்கும் முயற்சியில் தடையாய் இருப்பதை உணர்ந்து இக் கட்டுரையை எழுதியிருக்கிறார்.

''வியாபார சூட்சுமம்'' என்ற கட்டுரை, தனி மனித நேர்மைக்கும், அவனே வியாபாரியாகும்போது கைக்கொள்ளும் நேர்மை யின்மைக்கும் இடையே நேரும் கோர முரணை விளக்குவது.

''தனி வாழ்க்கையில் மிக்க உத்தமர்களாக - சத்திய சந்தர்களாக - இருப்பவர்கள் கூடப் பொது வாழ்வு சம்பந்தப்பட்ட துறைகளில் தவறாக நடந்து கொள்கிறார்கள். இதற்கு மூல காரணம் சுய நல உணர்ச்சியும் குணங்களும் நம்மிடம் வளர்ந்திருப்பது தான். சமூக வாழ்வு உணர்ச்சியும் குணங்களும் நம்மிடம் வளரவில்லை.''(ப.37. யோசிக்கும் வேளையில்)...

ஜனநாயகம் சிறந்தோங்கும் நாடுகளில் ஒரு மனிதன் தன்வாழ்க்கையில் பொய்யனாக இருக்கலாம்; சூதனாக இருக்கலாம்; குடியனாக இருக்கலாம். ஆனால் அவனுங் கூடச் சமூகத்துக்குச் சம்பந்தமுள்ள விஷயங்களில் மிக்க ஒழுங்காக நடந்து கொள்ளுவான். வியாபார நாணயம், உத்தியோக நாணயம், கலை இலக்கிய நாணயம் இப்படி எல்லாத் துறைகளிலும் நாணயத்தைக் கடைப்பிடிப்பான்.

...நாம் சுதந்திரம் அடைந்து விட்டோம். ஜனநாயகம் அடையவில்லை....''(ப.37, யோசிக்கும் வேளையில்)

வழக்கம் என்ற வேலி எப்படி நம் இயல்பைக் குலைத்து விடுகிறது என்பதை விளக்குவது 'வழக்க வேலி' என்ற கட்டுரை.

''வழக்கத்துக்கு மேலே அறிவு, திறமை முதலிய லகான்களெல்லாம் சக்தியற்றுப் போகும். வழக்கம் இரண்டாவது இயற்கையாகிவிடுகிறது என்று சொல்லுவார்கள். உண்மையைச் சொன்னால் இயற்கையின் தோல்வியே வழக்கம் என்று கூடச் சில சமயம் தோன்றுகிறது'' (ப.39, யோசிக்கும் வேளையில்)

''நோய் பிடித்துச் சீரழிந்த வழக்கங்கள் தொலைய வேண்டும். போடும் போதே உறுதியற்ற தண்டவாளம் எப்படி ஆகாதோ அப்படியே அபத்த வழக்கங்களைத் தோற்றுவதும் கேடே புரியும். மேலான வழக்கங்களை - சம்பிரதாயங்களை - ஸ்தாபிக்கவும், கீழான,

தேய்ந்து நலிந்த வழக்கங்களை - சம்பிரதாயங்களை - உடைத் தெறியவும் வல்லவனே ஜனங்களுக்கு முன்னேற்ற வழி காட்டக் கூடியவன்" (ப.42, யோசிக்கும் வேளையில்)

சிந்தனையாளர் ஜே.கிருஷ்ணமூர்த்தி, வழக்கம் என்ற மாயத்திரை நம் கண்களை உண்மையைக் காணவிடாமல் மறைக்கிறது என்று சொன்னதை நினைவூட்டுவதாய்த் தி.ஜ.ர. வின் மேற்கண்ட குறிப்புகள் உள்ளன எனினும் அவரைப் போல வழக்கம் என்ற திரையை முழுவதுமாக கிழித்தெறிய தி.ஜ.ர. துணியவில்லை.

'மறதி' என்ற இயற்கைக் குணத்தைப் பற்றிய விவரிப்பு 'யோசிக்கும் வேளை' யில் 'நாம் மறந்தவை' என்ற கட்டுரையாகப் பரிணமித்துள்ளது.

'வலி என்பது இயற்கை நமக்கு அளித்திருக்கும் எச்சரிக்கை என்கிறார்கள் வைத்திய நண்பர்கள். மறதி என்பதும் இயற்கையிலே நமக்குக் கிடைத்திருக்கும் ஒரு கவசம் என்று எனக்குத் தோன்றுகிறது. நம் கஷ்டங்களையும் பிறர் இழைத்ததாக நமக்குத் தோன்றும் தீமைகளையும், துயரங்களையும் கவலைகளையும் மறக்கடிக்க நமது பிரக்ஞைக்கு ஒரு சக்தி இருக்கிறது. ஆனால் அந்தச் சக்தியை நாம் நமது செருப்பை இழக்கவும் குடையைத் தொலைக்கவும் அரிய கருத்துகளைப் பறக்க விடவும் பயன்படுத்துகிறோம். இது தான் வருந்தத்தக்க விஷயம்' (ப.47-48, யோசிக்கும் வேளையில்)

என்று மறதியைப் பயன்படுத்திக் கொள்ளும் விதம் பற்றிப் பரிந்துரைக்கும் கட்டுரை, குடையை நிமித்தமாக வைத்து மறதியை விவரிக்கும் விதம் சுவாரஸ்யமானது.

'படைப்பில் களிப்பு' என்ற கட்டுரை, பொருளை உருவாக்குவதில் கிடைக்கும் மகிழ்ச்சியை விதந்தோதுவது. "தொழில் நுட்பம்" என்ற கட்டுரை, ஒவ்வொரு தொழிலிலும். தொழிலாளியின் நுட்பமான திறமையைப் போற்றிப் பாராட்டுவது. 'அஞ்சலி' என்ற கட்டுரை மகாத்மா மறைவை யொட்டி எழுதிய இரங்கல் கட்டுரையாகும். சுதந்தர நவ இந்தியாவின் பிதா; உலகத்துக்கு உய்யும் வழி காட்டிய மகா குரு, மனித லட்சியத்தின் சிகரம், கண் கண்ட தெய்வம் என்று புகழும் கட்டுரை, அவர் சொல்படி வாழ முடியவில்லையே என்ற வருத்தம் மீறிய தன்னிரக்கத்தையும் காட்டுவது.

'யோசிக்கும் வேளையில்' அமைந்திருக்கும் கட்டுரைகளைப் பற்றிப் பேசும் அதன் பதிப்பாளர் இவ்வாறு பேசுகிறார்.

"சாதாரண விஷயங்களைப் பற்றி எழுதிக் கொண்டே போகும் போது தி.ஜ.ர. திடீரென்று, அடிக்கடி, மிகப்பெரிய தத்துவங்களையும் உண்மைகளையும் வீசி விடுகிறார்; ஆனால் இரு வித விஷயங்களும் இணைந்து நிற்கும் அம்சமும் கூடவே இருக்கிறது. இந்த ஆசிரியரின் எழுத்துகளில் மகிழ்ச்சியூட்டும் முக்கியமான பகுதிகளில் இது ஒன்று. இதன் மூலம் ஒரு சிறந்த வியாசகர்த்தா மட்டுமன்று, சிறந்த சிந்தனையாளர், அறிஞர் என்று தம்மைக் காட்டிக் கொண்டு விடுகிறார்."

இக் கருத்தையே 'யோசிக்கும் வேளையில்' அமைந்துள்ள கட்டுரைகளின் மொத்த விமர்சனமாகக் கொள்ளலாம்.

### 3. வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள்

இந்தியாவில், புதிய தேசியம் கட்டமைக்கப்பட்ட காலம் தி.ஜ.ர. வின் எழுத்துக்காலம். எந்தத் தேசத்திலும் தலைவர்களாக, வழிகாட்டிகளாகச் சிலரைக் காட்டிக் காட்டித்தான் பெரும்பான்மை மக்களைத் திட்டமிட்ட ஒழுங்குக்கு வழிப்படுத்த முடியும்.அதுவும் புதிய தேசியத்தை நிர்மாணிக்கும் புதுமையான வேலையில் அச்சமூகத்தின் ஆதிகாலத் தலைவர்களை ஆதர்சமாகக் காட்ட முடியாது. சம காலத் தலைவர்களையே திருவுருக்களாகக் காட்டி, விரும்பிய புதிய சமுதாயத்தைப் படைக்க முடியும். இந்தக் கடுமையான பணியின் ஒரு முயற்சியாகத்தான், தி.ஜ.ர. மேற்கொண்ட 'புகழ்ச் செல்வர்' உள்ளிட்ட வாழ்க்கை வரலாற்றுப் பணியைப் பார்க்க வேண்டும். பத்திரிகைகளிலும், தனி நூலாகவும் எழுதப்பட்ட இவ்வகைக் கட்டுரைகள் தி.ஜ.ர. வின் உழைப்பைப் பறை சாற்றுபவை.

வாழ்க்கை வரலாற்று நூல்களாகத் தீனபந்து ஆண்ட்ரூஸ், புதுமைக் கவி பாரதியார், புகழ்ச் செல்வர், தலைவர் ஜவாஹர், கோயரிங் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். லெனின் சரித்திரக் கதைகள், அற்புதப் பெண், காந்தி வாழ்க்கை, ரோஜாப் பெண் முதலியனவும் வாழ்க்கை வரலாற்றுக்குள் அடங்குமெனினும் அவற்றை மொழி பெயர்ப்பு நூல்களாகக் கொண்டு. தி.ஜ.ர. வின் மொழிபெயர்ப்பு ஆற்றலை விளக்கும் இயலில் அவற்றைப் பார்க்கலாம்.

#### *தீனபந்து ஆண்ட்ரூஸ் (1940)*

துன்பப்படுபவரிடமும், திக்கற்றவர்களிடமும் இரக்கமும் அன்பும் பிறப்பது மனிதச் செயல் பெரும்பாலும் இவ்வாறு அனுதாப

படுபவர்கள் அவர்களைச் சார்ந்தவராகவே இருப்பது இயல்பு. துன்பத்திற்குக் காரணமான ஆளும்வர்க்கத்திலிருந்து இந்த இரக்கத்தையும் அன்பையும் எதிர்பார்ப்பது வழக்கமல்ல. இந்த வழக்கத்தை மீறி, நம்மை ஆண்ட ஆளும் வர்க்கத்திலிருந்து வந்து நம் மீது கருணை மழை பொழிந்தவர் சிலர் உண்டு. அவ்வாறு பிரித்தானிய ஏகாதிபத்தியத்தால் இந்தியா துன்பப்பட்ட காலத்தில் துயர் துடைக்க நீண்ட ஆதரவுக் கரங்களுள் ஒன்றுதான் தீனபந்து சி.எப். ஆண்ட்ரூஸின் கரங்கள். இவர் கோகலே, காந்தியடிகள் ஆகியோரோடெல்லாம் இணைந்து தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் துன்பமடைந்த இந்தியர்களின் துயர் நீக்கப் பாடுபட்டார். இவரது வாழ்க்கைக் கதையைப் படிப்போர் மனம் நெகிழ்ந்து தியாக உணர்வில் கலந்துவிடுமாறு அருமையாக எழுதியிருக்கிறார் தி.ஜ.ர. இந்தத் தீனபந்து ஆண்ட்ரூஸ் என்ற வாழ்க்கை வரலாற்று நூலை 1940 இல் அல்லயன்ஸ் பதிப்பகம் வெளியிட்டிருக்கிறது.

'நல்ல படிப்பாளி; ஒழுக்கம் நிறைந்தவர்; பிறரிடமும் ஒழுக்கம் ஓங்கப் பிரயாசைப்பட்டவர்; அன்பில் சிறந்தவர்; ஜாதி மத பேதமின்றிக் கரை புரண்டோடியது அவரது அன்பு. மதத்தில் பற்றுண்டு; பற்று பித்தாக மாற வில்லை; தீனர்களுக்கு என்றும் எங்கும் தஞ்சம் அளித்தார். தீனபந்து என்று அதாவாக அவருக்குப் பெயர் ஏற்பட்டது' என்று ஆண்ட்ரூஸ் பற்றி முன்னுரையில் குறிப்பிடும் சுதேசமித்திரன் ஆசிரியர் சி.ஆர். சீனிவாசன். அவரது வாழ்க்கை குன்றின் மேலிட்ட விளக்காகப் பிரகாசிக்கிறது என்று எழுதியிருக்கிறார்.

'இந்தியரின் சுதந்திர வேட்கை குறித்து ஆங்கிலேயர்கள் தங்கள் மனத்தில் தோன்றியபடியெல்லாம் சொல்லிக் கொண்டிருந்த அந்த அடிமைச் சூழலில், அந்தப் பரம்பரையிலே உதித்த ஒருவர் என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தார் என்பது சந்தர்ப்பத்திற்கு ரொம்பப் பொருத்தமானது' என்று இந்த நூல் வெளிவந்த சந்தர்ப்பத்தைக் குறிப்பிடுகிறது இந்நூல் பற்றி வெளிவந்த விமர்சனமொன்று.

பொது வாழ்க்கையில் ஊக்கமில்லாதவர்களும் இந்தப் புத்தகத்தைப் படித்தால் நிச்சயம் மிக்க உணர்ச்சி அடைவார்கள் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை என்று அதே விமர்சனம் பாராட்டுகிறது. உண்மையில், தி.ஜ.ர. வின் நடையின் எளிமையும் தங்குதடையற்ற ஓட்டமும் நூலைப் படிக்கத் தூண்டுகிறது என்று சொல்லலாம். சான்றுக்கு ஓர் இடம்;

தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரகத்தில் மகாத்மா கைதானார். அவருக்கு வலது கை போல் உதவிவந்த ஸ்ரீ வெஸ்ட் என்ற ஆங்கிலேயரும் கூடவே கைதாகி விட்டார். இந்தச் செய்தி கோகலேவுக்கு எட்டியது. உடனே அவர், இங்கிருந்து திறமை வாய்ந்த சிலரை அனுப்ப எண்ணினார்.

நீங்கள் தென்னாப்பிரிக்கா செல்லத் தயாரா? என்று ஸ்ரீ ஆண்ட்ரூஸைத் தந்தி மூலம் ஸ்ரீ கோகலே கேட்டார்.

சிறிதும் தயக்கமின்றி, 'தயார்' என்ற பதில் வந்தது. ஸ்ரீ ஆண்ட்ரூஸ் மாத்திரமன்று; அவருடைய தோழரும் இந்தியாவின் மற்றொரு நண்பருமான ஸ்ரீ பியர்ஸனும் அதே சமயத்தில் தென்னாப்பிரிக்கா செல்லத் தயாரானார்கள்.

ஸ்ரீ ஆண்ட்ரூஸ்க்கு ஸ்ரீ கோகலேயின் தந்தி கிடைத்த போது, ஆண்ட்ரூஸின் தாய் லண்டனில் நோய்வாய்ப்பட்டு மிக்க அபாயமான நிலைமையில் இருந்தார். ஆதலால், தாம் உடனே ,லண்டனுக்கு வருவதாக, ஏற்கனவே அவளுக்கு அவர் ஒரு கடிதமும் எழுதியிருந்தார். ஸ்ரீ கோகலேயின் தந்தி ஒரு தர்ம சங்கடமான நிலைமையை உண்டாக்கி விட்டது. மரணப்படுக்கையிலிருக்கும் அன்னையைப் பார்க்கச் செல்வதா? திக்கற்ற தென்னாப்பிரிக்க இந்திய மக்களுக்குச் சேவை புரியப் போவதா? தம் தாய்க்கே இதைத் தந்தி மூலம் தெரிவித்து அவள் அபிப்பிராயத்தைக் கேட்டார். அந்தப் புனிதவதி, எனது இந்தியச் சகோதரிகள் தவிக்கிறார்கள் என்றால் அவர்களுக்கு உதவி செய்யத்தான் நீ போக வேண்டும் என்று மகனுக்குக் கட்டளையிட்டாள். "அவள் செய்த இறுதித் தியாகம் இது; அவளை நான் பின்னால் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை" என்று தீனபந்து ஓரிடத்தில் உருக்கமாய்க் குறிப்பிடுகிறார்" (பக்.18,19, தீனபந்து ஆண்ட்ரூஸ்).

மேலே குறிப்பிட்ட பகுதியில்தான் எத்தனை செய்திகள். காந்தி சிறைப்பட்டது. கோகலேவுக்கு அது தெரிந்தது! கோகலே தீனபந்துவை அனுப்ப முடிவு செய்தது. அதற்கு தீனபந்து ஒப்புக் கொண்டது. அந்தச் சமயத்தில் அவருக்கு இருந்த நெருக்கடி, தாயின் உடல் நலமின்மை. அவரிடம் எழுதிக் கேட்டுப் பதில் பெற்றது. பிறகு தாயை உயிரோடு பார்க்க முடியாத நிலை: இப்படிப் பல செய்திகளையும் தமது அழகான 'கதை சொல்லி' நடையில் சொல்லி எவ்வளவு தெளிவாகப் புரிய வைத்து விட்டார் தி.ஜ.ர.

இதனாலேயே, இந்நூலை விமர்சனம் செய்த 'சக்தி' இதழ் இந்நூலின் நடையைப் பற்றி இவ்வாறு எழுதியது

''ஆசிரியர் தி.ஜ.ர. கங்கை ஓட்டம் போன்ற கம்பீரமான நடையில் விஷயங்களை வெகு அற்புதமாக வர்ணித்திருக்கிறார். ஒரு சிற்பியின் சிருஷ்டியைப் பார்த்து ஒரு மகான்; 'எது எது எப்படி இருக்க வேண்டுமோ, அது, அதெல்லாம், அவ்விதமே அமைந்தி ருக்கிறது.'' என்று சொன்னாராம். இக் கலைஞரின் சிருஷ்டியான இப்புத்தகத்தை நாமும் அவ்விதம்தான் சொல்லுகிறோம். (சக்தி, விக்கிரம, புரட்டாசி இதழ்)

**புதுமைக்கவி பாரதியார் (1940)**

''பாரதியார் ஓர் அபூர்வ புருஷன்; மேதை. அவருடைய வாழ்க்கை வரலாற்றை விஸ்தாரமாக, ஆதாரபூர்வமாக எழுத வேண்டும். அவருடைய கவிதையைச் சம்பூர்ணமாக ஆய்ந்து மதிப்பிட வேண்டும். இந்த இரு துறைகளிலும் இந்தச் சிறிய புத்தகம் ஏதும் சாதித்து விட்டதாக நான் பாத்தியம் கொண்டாடவில்லை. இது ஒரு ஜீவிய சரித்திரம்''.

''பாரதியார் வாழ்க்கை பற்றி நான் எழுதியிருக்கும் வரலாறு பூராவும் பிறர் சொன்னவை. பாஷை மட்டும்தான் என்னுடையது'' என்று தி.ஜ.ர., புதுமைக் கவி பாரதியார் நூலின் முகவுரையில் கூறியிருப்பது, இந்நூலைப் பற்றி அறியப் பயன்படும் தகவல்களாகும்.

இந்நூலை எழுதத் தனக்கு உதவி புரிந்தவை என்று தி.ஜ.ர. கூறுவன பாரதி சரித்திரங்கள், விசுவநாதன் (பாரதியின் இளவல்), ஆக்கூர் அனந்தாச்சாரியார், சுவாமி சுத்தானந்த பாரதியார், வ.ரா. ஆகியோருடையவை. இவை தவிரப் பாரதி பிரசுராலய பாரதி நூல்களும், ஹிந்துஸ்தான் வாரப் பத்திரிகையின் வருஷ மலர்களும் பயன்பட்டிருக்கின்றன.

புதுமைக்கவி பாரதியார் நூல் இரண்டு பெரும் பிரிவுகளைக் கொண்டது. முதல் எட்டுக் கட்டுரைகள் பாரதியார் வாழ்க்கை வரலாற்றைச் சொல்வன. பாரதியின் காலத்தை விளக்கிப் பின் அவரது பிறப்பு முதல் கல்வி, தேசிய ஆர்வம், புதுவை வாசம், வறுமை, அரவிந்தர் தொடர்பு, பின் பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வந்து இறந்து போவது வரை அது பேசும். இரண்டாவது பகுதி, அவரது குணச் சித்திரம் முதல் அவரது கவிதை, வசனம், உள்ளிட்டு வேதாந்தம் வரை எட்டுக் கட்டுரைகளாய் அமைந்துள்ளன. இதில் பின்னிணைப்பாய் அமைந்துள்ள குவளைக் கண்ணன் குறிப்புகளும், சுதேச மித்திரன் ஆசிரியர் சி.ஆர் சீனிவாசன் கட்டுரையும் முக்கியமானவை. இவ்விரண்டும் அவரவர் பாரதியுடன் நேரில் கலந்து பழகியதை வைத்து எழுதப்பட்ட கட்டுரைகள்.

"புதுமைக்கவி பாரதியார்" நூலின் சிறப்பாகத் தி.ஜ.ர. கூறுவது அது வெளிவந்த காலத்தில் (1940) பாரதியோடு பழகியவரே பாரதியின் வரலாற்றை எழுதிவந்த சூழலில், அவரோடு பழகாத ஆனால் அவரிடம் ஈடுபாடு கொண்ட ஒருவர் எழுதியது என்பதே.

பாரதியாரைத் தமிழ்ச் சமூகம் ஏற்றுக் கொண்ட நிலையில், அவரது புகழை மேலும் பரப்புவதற்கு ஏதுவாக இந்த நூல் பயன்பட்டிருக்கும் என்று நம்பலாம். 'புதுமைக் கவியின் இரண்டாவது பிரிவான 'பாரதி இலக்கிய விமர்சனம்' வ.ரா. வின் வழியில் தி.ஜ.ர. பாரதியைப் பார்த்ததைக் காட்டுகிறது. பாரதியின் வேதாந்தம் என்ற கட்டுரையின் ஒரு பகுதி இது:

கவிஞர் ஷெல்லியைப் போல் 'வாழ்வோர் வாழ் வென்றுரைக்கும்' மேற் பூச்சான இந்த வர்ணத் திரையைத் தூக்கிவிட வேண்டாம் என்று பாரதியார் இரங்கவில்லை. வாழ்வு அவருக்கு உண்மைக் காட்சியையே நல்குகிறது.

'நிற்பதுவே நடப்பதுவே, பறப்பதுவே நீங்களெல்லாம்
சொற்பனந்தானோ? - பல தோற்ற மயக்கங்களோ?
கற்பதுவே கேட்பதுவே, கருதுவதே நீங்களெல்லாம்
அற்ப மாயைகளோ? - உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ'

என்று நம் கவி திலகம் வினவுகிறார். உலகம் மாயையா, வெறும் கனவு தானா? வாழ்வைப் பொருளற்ற மேற் பூச்சான சூன்யமாகப் பாரதியாரின் கவியுள்ளம் காணவில்லை. எனவே

'காலமென்றே யொரு நினைவும் காட்சியென்றே பல நினைவும்
கோலமும் பொய்களோ? - அங்குக் குணங்களும் பொய்களோ?
சோலையிலே மரங்களெல்லாம் தோன்றுவதோர் விதையிலென்றால்
சோலை பொய்யாமோ? - இதைச் சொல்லொடு சேர்ப்பாரோ?'

என்று எள்ளி மேலும்

"காண்பதெல்லாம் மறையுமென்றால்
மறைந்ததெல்லாம் காண்பமன்றோ?
வீண் படு பொய்யிலே - நித்தம்
விதி தொடர்ந்திடுமோ?
காண்பதுவே யுறுதிகண்டாய்,
காண்பதல்லா லுறுதியில்லை;
காண்பது சத்தியமாம் - இந்தக்
காட்சி நித்தியமாம்".

என்கிறார் பாரதியார்.

பாரதிக்குக்காணுங் காட்சி நித்தியம்; வாழ்வு நித்தியம். எனவே அவருடைய கவிகளிலே இல்லாப் பொருளுக்கு ஏக்கமில்லை.

அவருடைய கவிகள் மனச்சோர்வுக்கு மகிமையளிக்கவில்லை. பாரதிக்குச் சோர்வு என்பதுதான் வீண் மயக்கக் கனவாகும். அவர் வேண்டுபவை சுதந்திர இன்பங்கள். (பக். 62-63, புதுமைக்கவி பாரதியார்)

தி.ஜ.ர. பாரதியின் வரலாற்றை அனுபவித்து எழுதியிருக்கிறார். பாரதியின் இலக்கியத்தை, மேலை நாட்டுக் கவி ஷெல்லி முதலிய கவிகளின் கவிதைகளைப் படித்து அந்த அறிவானுபவத்தை வைத்துக் கொண்டு தம் சொந்த உணர்ச்சி அளவு கோலைக் கொண்டு ஆராய்ந்து எழுதியிருக்கிறார். பாரதி பற்றிய பலப்பல நூல்கள் வெளி வந்து விட்ட இன்றையச் சூழலிலும் இந்நூலைப் படிக்குமாறு செய்பவை, தி.ஜ.ர. வின் தோய்ந்த ஈடுபாட்டில் எழுதப்பட்ட எளிமையான நடையும், விளக்கத் தேர்ந்தெடுத்த சம்பவங்களும் கவிதைகளும் என்று சொல்லலாம்.

### புகழ்ச் செல்வர் (1947)

தமிழக, இந்திய, உலகப் பெருமக்கள் சிலரது வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கமும் அவர்களது கருத்தியல்களும் அடங்கிய 'புகழ்ச்செல்வர்' நூல் 1947 இல் இராமச்சந்திரபுரம் கார்த்திகேயினி பிரசுரத்தால் வெளியிடப்பட்டது. இதில் 21 பெருமக்களின் வாழ்க்கைச் சுருக்கம் அடங்கியுள்ளது.

'சக்தி' ஆசிரியராக இருந்த காலத்தில் (1940-1946) அந்தந்த மாதத்தின் தேவையையும், வசதியையும் உத்தேசித்து அவ்வப்போது இவற்றை எழுதி வந்ததாகத் தி.ஜ.ர. முன்னுரையில் குறிப்பிடுகிறார். பின்னர் இவற்றை நூலாக வெளியிட விரும்பிய போது (1947 மார்ச்) சில மாற்றங்களை, அது வரையிலான வரலாற்றையும் சேர்த்து எழுதியதாகக் குறிப்பிடுகிறார்.

இதில் வரலாறு கண்ட புகழ்ச் செல்வர் யார் எவர் என்று அறிவது தி.ஜ.ர. வின் பரந்து பட்ட உலகப் பரிச்சயத்தை புரிந்து கொள்ள உதவும். மகாத்மா காந்தி, பண்டித ஜவஹர்லால், மௌலானா அபுல் கலாம் ஆசாத், யோகி அரவிந்தர், கான் சகோதரர்கள், வைசிராய் வேவல், சியாங்கே ஷேக், ஈமன் டிவாலரா, தளபதி ஸ்மட்ஸ், ஜனாதிபதி ட்ருமன், வின்ஸ்டன் சர்ச்சில், பீவர் புருக், அமெரி, ஸ்டாலின், கமலா தேவி, கே.சீனுவாசன்,அவினாசிலிங்கம், விஜயலட்சுமி பண்டிட், டி.கே.சி., சுத்தானந்த பாரதியார், ருக்மிணி தேவி ஆகியோரே அந்தப் புகழ்ச் செல்வர்கள். பத்திரிகைத் தேவை, சம காலத்தில் வெளிச்சத்தில் இருந்தோர் என்ற அடிப்படையில் தேர்வு

இருந்திருந்தாலும் இவ்வளவு பேரின் வரலாற்றைத் தேடிப்பிடித்து எழுதுவது என்பது கடுமையான பணி. அதைச் சிறப்பாகச் செய்திருக்கும் தி.ஜ.ர. காலத்தின் பாராட்டுக்குரியவர்.

இவ்வரலாறுகளைத் தி.ஜ.ர. எழுதிய முறையைப் பற்றிய அவரது விளக்கம், புகழ்ச் செல்வர் நூலின் அமைப்பு முறையைப் புரிந்து கொள்ள உதவக் கூடியது. கமலாதேவி, கே. சீனுவாசன், அவினாசிலிங்கம், விஜயலட்சுமி பண்டிட், டி.கே.சி., சுத்தானந்த பாரதி, ருக்மிணிதேவி ஆகிய இந்த ஏழு பேர்களை வரலாறு எழுது வதற்கென்றே நேரில் பேட்டி கண்டு, அவர்களைப் பற்றியும், அவர்களது கருத்துகளைப் பற்றியும் சேகரித்து எழுதியிருக்கிறார். மற்றவர்களைப் பற்றிய தகவல்களைப் பத்திரிகைகளிலும், புத்தகங் களிருந்தும் சேகரித்துக் கொண்டு அவர்களின் வரலாறுகளை எழுதி யிருக்கிறார். இவ்வளவு பேரின் வரலாறுகளை எழுதினாலும், இன்னும் தான் விரும்பிய அனைவர் வரலாறுகளையும் இதில் எழுத முடிய வில்லை. இந்தியப் பிரமுகர்கள் அதிலும் முக்கியமாகத் தமிழ்நாட்டுப் பிரமுகர்களையாவது தான் முழுமையாக எழுத விரும்பியதாகவும் அது நிறைவேறவில்லை என்றும் தி.ஜ.ர. வருந்துகிறார். அதிலும் வ.ரா. இராஜாஜி இந்த இருவரின் வரலாற்றை நிச்சயமாய் எழுதியிருந்திருக்க வேண்டும். அது சாத்தியமில்லாமல் போய் விட்டது என்று வருந்துகிறார்.

இந் நூலில் தி.ஜ.ர. குறிப்பிட்டது போல அப்போதைக்கு அப்போது, தேவைக்குத் தக்கபடி எழுதியதால், ஒரு சீர்மையைக் கொண்டு வர முடியவில்லை. எல்லோரும் சமகால பிரபலஸ்தர்கள், பெரும்பாலும் அரசியலோடு தொடர்புடையவர்கள் என்பதாக ஒரு சீர்மையை நாம் உணரலாம். அது தவிர, பிற்காலச் சந்ததியினருக்குப் பயன்படக் கூடிய தீர்க்க தரிசனம் மிக்க சமகாலத்தில் முற்போக்கான தலைவர்களைப் பற்றிய வரலாறுகள் இதில் இடம் பெறவில்லை. இது பத்திரிகையில், அது மாத இதழாக இருப்பினும், வெகு மக்களைக் கவர வேண்டும் என்ற நோக்கத்தில் எழுதப்பட்டதால் ஏற்பட்ட விளைவாக இருக்கக் கூடும். கட்டுரைகள் எப்படி அமைந்துள்ளன என்பதற்குச் சான்றாக, ரசிகர் டி.கே.சி. என்ற தலைப்பில் புகழ்ச்செல்வரில் இடம்பெற்றுள்ள கட்டுரையைப் பார்க்கலாம்.

டி.கே.சி யின் குடும்பப் பின்னணியைத் தி.ஜ.ர. விவரித்து விட்டு. அவருக்குக் கம்பராமாயணப் பற்று எப்படி ஏற்பட்டது என்பதை அவரையே விவரிக்க வைத்தார். பின் சென்னையில் கம்பராமாயணம் பற்றிப் பேசிய வீட்டுக் கூட்டங்களைப் பற்றி விவரித்து விட்டு.

கம்பனைத் தவிர அவரது பழைய இலக்கியப் பரிச்சயம் பற்றிக் கேட்கிறார். பின் பரத நாட்டியம், தமிழிசை இயக்கம் போன்றவற்றைப் பற்றி டி.கே.சி.யின் கருத்துகளைக் கேட்டுப் பதிவு செய்து விட்டு, கோயில்கள் பற்றிய அவருடைய கருத்தோடு கட்டுரையை முடிக்கிறார்.

'ஆயிரக் கணக்கான வருஷங்களாக வந்த பண்பாடுகள் கல்லுகளுக்குள்ளே ஊறிக் கிடக்கின்றன. நம்முடைய கடமை அந்தப் பண்பாட்டுச் செல்வங்களை அந்தக் கல்லுகளுக்குள்ளிருந்து பிழிந்தெடுத்துப் பருக வேண்டியது தான்'' என்று டி.கே.சி. சொன்னதாகச் சொல்லி,

'செல்லரித்த மதச் சம்பிரதாயங்களின் சிறைகளாகக் கோவில்களை நாம் மதியாமல், அவைகளைக் கலைச் செல்வ பொக்கிஷமாகப் பாவித்து அனுபவிக்க வேண்டும், என்பதே டி.கே.சி. யின் கருத்து என்று தி.ஜ.ர. விளக்கம் தந்து கட்டுரையை முடிக்கிறார்.

பெரும்பாலான பேட்டிக் கட்டுரைகளின் அமைப்பு இவ்வாறாகவே இருக்கிறது. மற்ற கட்டுரைகள், சம்பவங்கள், விவரிப்புகள், விவரிப்புகள் வழி பெறும் கருத்துச்சித்திரம் என அமைந்துள்ளன. ஒரு கட்டத்தில், இவை பயன் தரும் அறிமுகக் கட்டுரைகளாக விளங்கியிருக்கக் கூடும் எனக் கருதலாம்.

**கோயரிங்**

ஜெர்மன் விமான அசுரன் கோயரிங் என்ற வாழ்க்கை வரலாற்று நூலின் ஆசிரியர் தி.ஜ.ர., நவயுகப் பிரசுராலயத்தால் வெளியிடப்பட்ட இந்நூல் வெளிவந்த ஆண்டு தெரியவில்லை. எனினும் தி.ஜ.ர. வின் பொழுது போக்கு நூல் விரைவில் வெளிவரும் என்று இந்நூலில் விளம்பரக் குறிப்பு இருப்பதால் இதை பொழுது போக்குக்காக 1942க்கு முன்னர் வெளி வந்ததாய்க் கருதலாம்.

நாயகர்களின் வரலாறுகளே நூலாக வெளிவரும் சம்பிரதாயம் உடைந்து எதிர் நாயகர்களின் வரலாறு நூலாகி இருக்கிறது. யதேச் சாதிகாரம், பாஸிஸம், என்ற கொடுங்கோல் தன்மைகளின் தலைவர் ஹிட்லர். அவரது வலக்கை போன்றவர் மார்ஷல் கோயரிங்: விமானம் ஓட்டுவதில் சூரர் இவர். இவரது வாழ்க்கை வரலாறே இந்நூல்.

ஜனநாயகத்தை எத்தகைய சத்ருக்கள் தாக்கி நின்றார்கள் என்று தெரிந்து கொள்ள இந்நூல் பயன்படும் என்று பதிப்பாளர் நம்புவதாகத் தெரிகிறது(பதிப்புரை - கோயரிங்). நூறு பக்கங்களுடன் 16

அத்தியாயங்களைக் கொண்ட இந்நூல் மொழிபெயர்ப்பா, சொந்தமாக எழுதப்பட்டதா என்று தெரியவில்லை.

நூல் எழுந்த காலத்தில் வாழ்ந்து கொண்டிருந்த வீரன் கோயரிங் பலசாலி, துணிச்சல்காரர், ஹிட்லரின் நம்பிக்கை மிக்க துணைவர்; விமானத்தை இயக்குவதில் தீரர், கடுமையாக நடந்து கொள்வதில் சூரர்: இப்படியான எண்ணம் வருமாறு இந்நூலில் தகவல்கள் இருக்கின்றன. ஜெர்மனியில் ஹிட்லரின் ஆட்சி தோன்றியதையும், ஹிட்லரின் வாழ்க்கையையும் கோயரிங் வரலாற்றோடு இணைத்தே பார்க்க வேண்டியிருக்கிறது.

ஒரு பிரபுவின் குடும்பத்தில் பிறந்து, வீட்டுக்கும் ஆசிரியருக்கும் அடங்காமல் திமிரி வளர்ந்த கட்டுப்படாத இளைஞன் கோயரிங். ஹிட்லரின் பேச்சில் மயங்கி, அவரது இயக்கத்தில் கலந்து, கடுமையாக உழைத்து ஹிட்லர் அதிகாரம் பெற உதவியவர் கோயரிங்; கோயரிங்குக்கும் மந்திரி பதவி கிடைத்தது. கோயரிங்கின் சாதனைகளின் பட்டியல், ஆற்றலைக் காட்டுவது. அது வருமாறு;

''கோயரிங் அதிகாரத்துக்கு வந்த பிறகு 12,863 ஜனங்கள் அவர்களது விருப்பத்துக்கு விரோதமாய் நிர்பந்தமாக மலடாக்கப் பட்டார்கள். 90,000 யூதர்கள் நாட்டை விட்டு ஓடினார்கள். 212 ஸ்திரீ - புருஷர்கள் சிரச் சேதம் செய்யப்பட்டார்கள். 2,80,308 பேர் சிறைப்படுத்தப்பட்டார்கள். ஓடிப்போக முயன்ற 184 பேர் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். 13,000 பேரின் பிரஜாஉரிமை பறிக்கப்பட்டது. 49,000 பேர் குவியல் சிறைக்கு அனுப்பப்பட்டார்கள்.'' (ப. 68, கோரயரிங்)

கோயரிங்தான் இதற்கு எல்லாவற்றுக்கும் முழுமுதல் பொறுப்பு என்று சொல்ல முடியாவிட்டாலும், ஹிட்லருக்குப் பிறகு இரண்டாவது என்ற அதிகாரப் பொறுப்பில் இவர் இருந்த போது நடந்தவை இவை என்பதால் பொறுப்பில்லை என்று சொல்லி விலக்கி விட முடியாது.

கோயரிங் வகித்த பதவிகளின் பட்டியலிலிருந்து இந்தப் பொறுப்புச் சுமையை நாம் யூகிக்க முடியும்.

''1. ரீச் சபை அக்ராசனர் 2. ரீச்ஸ்வேர் தளபதி 3. விமானப்படைத் தளபதி. 4. போலீஸ் தளபதி 5. ரீச்சின் விமான மந்திரி 6. பிரஷ்யாவின் பிரதம மந்திரி 7. வேட்டை மாஸ்டர் 8. ரீச்சின் காட்டிலாகா மந்திரி 9. டெலிவிஷன் அத்யட்சகர் - இத்தனை உத்யோகங்களையும் தாம் ஒருவராகவே வகித்து, அத்தனை இலாக்காக்களிலும் இரவு பகலாய் அசுரன் போல் உழைத்து வந்தார். (ப.69, கோயரிங்)

கோயரிங்கின் அதிகாரத் துஷ்பிரயோகச் செயல்பாடு நிகழ்கால அரசியல்வாதிகளின் செயல்களின் முற்காலத் தொடக்கமாகத் தோன்றுகிறது.

"1935 ஆம் ஆண்டு ஏப்ரல் 10 இல் மகா ஆடம்பரமாக கோயரிங்குக்கும் ஸோனிமானுக்கும் விவாக மகோற்சவம் நடை பெற்றது. தேசியத் திருவிழாப்போல அது கொண்டாடப்பட்டது. ஹிட்லரே மாப்பிள்ளைத் தோழரானார். பிரமாதமான விருந்தும் கேளிக்கைகளும் நடந்தன. இரண்டு பொதுவுடைமைவாதிகள் அந்தத் திருநாளன்று மரண தண்டனை விதிக்கப் பெற்று, கோடரியால் வெட்டப் பட்டார்கள். கலியாணத்தின் போது ஏராளமான பரிசுகள் வந்தன. பரிசுகளா! பாக்கி நாடுகளாயிருந்தால், லஞ்சம் என்று தான் சொல்லு வார்கள். ஒரு ரைபிள் தொழிற்சாலையின் முதலாளிகள் விவாகப் பரிசாக நேர்த்தியான ஒரு ரைபிளை அனுப்பினார்கள். கோயரிங்கின் காரியதரிசி, அந்த ரைபிளைத் திருப்பியனுப்பி விட்டு, அத் தொழிற் சாலை முதலாளிகளுக்கு ஒரு கடிதமும் எழுதினார். 'கோயரிங்கிடம் ஏற்கெனவே இம்மாதிரி ஐம்பது ரைபிள்கள் இருக்கின்றன. ஆகையால் இது அவருக்கு வேண்டாம். இதற்குப் பதிலாக, மாக்லென் பாக்கில் இன்ன இடத்தில் இவ்வளவு விஸ்தீரண முள்ள ஒரு விவசாயப் பண்ணையை வாங்கித் தந்தீர்களானால், கோயரிங் ஏற்றுக் கொள்வார் என்று அந்தக்கடிதத்தில் கண்டிருந்தது. ரைபிளின் விலை ஆயிரம் மார்க்குகள் தான் ; கோயரிங் விரும்பிய பண்ணையின் விலையோ 60 ஆயிரம் மார்க்கு களாகும்".(பக்.71,72, கோயரிங்)

இவ்வாறு கொடுங்கோன்மைக்கும், யதேச்சாதிகாரத்துக்கும் அழியாத சாட்சியாய் விளங்கிய கோயரிங்கின் வாழ்க்கையைப் பலவித எடுத்துக்காட்டுகளுடன் விளக்கிய இந்நூல், மறைமுகமாய் ஜனநாயக உணர்ச்சியை மக்கள் மனத்தில் ஏற்படுத்தியிருக்கும் என்று நம்பலாம். இந்திய விடுதலையை அடைய, தமிழ் மக்களுக்கு உணர்வூட்டிய கருவியாய் இந்நூல் பயன்பட்டிருக்கும். இந்நூலின் முடிவில் கூறப்பட்டிருப்பதே இதற்குச் சாட்சி.

"ஹிட்லர்களும் கோயரிங்குகளும் என்னதான் கேடு செய்தாலும், உறக்கத்திலிருந்த உலகத்தைத் தட்டி யெழுப்பிய புண்ணியம் அவர்களையே சார்ந்தது" (ப.100,கோயரிங்).

## முடிவுரை

தமிழின் கட்டுரை இலக்கிய வகையின் முன்னோடிகளுள் ஒருவராகத் தி.ஜ.ர. திகழ்ந்தார். எப்பொருள் பற்றியும் சுவாரஸ்யமாக,

பொருள் நிறைந்த கட்டுரையை எழுதத் திறன் பெற்றவராக இருந்தார். பொழுதுபோக்காக இருப்பினும், சம கால நிகழ்வுகளாக இருப்பினும், வாழ்க்கை வரலாறாக இருப்பினும் அவர் கட்டுரைகள் ஆழ்ந்த பொருளை விவாதிக்கும். அலங்கார நடையைத் தவிர்த்தவர். பேச்சு வழக்கில் கதை சொல்லும் பாணியில் கட்டுரை எழுதியவர். மேற்கோள்களைச் செய்யுளில் காட்டி, பயமுறுத்தாதவர். தொழில் நாகரிகத்தின் வரவால் எழுந்த வாசகர் எண்ணிக்கையை உயர்த்தும் விதமாக, கல்கி செய்தது மாதிரி. வாசிப்புப் பழக்கத்தைத் தமிழரிடையே உயர்த்தும் விதமாக அவரது கட்டுரைகள் எளிமை யாய்ப் பேசின. இழையோடிய நகைச்சுவையுடன், எளிய பொருள் களைப் பற்றிப் பேசின. கடிகாரம் பற்றி, பால் பற்றி, மோர் பற்றி, புத்தகம் பற்றி, மூக்குக் கண்ணாடி பற்றி யெல்லாம் பேசிப் புதிய வாசகரைப் பற்றியிழுத்துப் படிப்புக் கடலில் அமிழ்த்தியவர் தி.ஜ.ர.. இவ்வகையில் தி.ஜ.ர. வின் கட்டுரைச் சாதனை, தனிச்சிறப்புப் பெற்றதாகும்.

---

# 4

# பத்திரிகைப் பணிகளும் மொழிபெயர்ப்புகளும்

சிறந்த சிறுகதையாசிரியர்களுள் ஒருவராகவும், தமிழ்க் கட்டுரை இலக்கியத்தின் முன்னோடிகளுள் ஒருவராகவும் மதிக்கப் பெறும் தி.ஜ.ரங்கநாதன், அடிப்படையில் ஒரு பத்திரிகை ஆசிரியராகவே இருந்தார். அவரது மணி விழாவின் போது, அவரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்பு எழுதியவரும் இதைக் குறிப்பிடுகிறார்.

''எழுத்தாளர் தி.ஜ.ர. அடிப்படையில் ஒரு பத்திரிகை ஆசிரியர். பிறரது எழுத்துகளில் தரம் பார்ப்பது, பிறரை ஊக்குவிப்பது, பிரசுரிக்க வேண்டியவற்றைச் செப்பனிடுவது, வேண்டாதவற்றை நீக்கி அழகாகச் சுருக்குவது ஆகியவற்றைச் சலிப்பின்றிச் செய்து வருகிறார். வாய்த்தபோதெல்லாம் பிறருக்குப் பயிற்சியும் அளித்திருக்கிறார்.'' (தி.ஜ.ர.வின் மணிவிழாமலர்)

என்று எழுத்தாளர் தம்பி சீனிவாசன் குறிப்பிடுவார்.

தி.ஜ.ர.வின் எழுத்துப்பணி 'ஆனந்த போதினி'யில் தொடங்கிய தாகக் கருதப்படுவது போலவே அவரது ஆசிரியப் பணி 'சமரச போதினி' யில் தொடங்கியதாகக் கருதலாம். பிறகு 'ஊழியன்', 'சுதந்திரச்சங்கு', 'ஹனுமான்', 'ஹிந்துஸ்தான்', 'ஜெய பாரதி', 'சக்தி' 'மஞ்சரி' நடுவில் 'நவமணி' என்று பல இதழ்களில் தி.ஜ.ர. பணியாற்றியிருக்கிறார். இவ்விதழ்களில் அவர் ஆற்றிய பங்கு, பணிகளை விரிவாக இவ்வியலில் பார்க்கலாம். அதே போல, இந்த இதழ்களிலும், தவிரத் தனியாகவும், ஆங்கிலத்திலிருந்து பல படைப்புகளை மொழி ஆக்கம் செய்து வெளியிட்டுள்ளார். அவையும் தி.ஜ.ர. வின் திறமையைப் பேசுவன. கூண்டுக்கிளி, அபேதவாதம், அட்லாண்டிக் சாசனம், ஒரே உலகம், லெனின் சரித்திரக் கதைகள், புது நாள், காந்தி வாழ்க்கை, குமாவும் புலிகள். அரசியல் நிர்ணயசபை ஆகியன அம்மொழிபெயர்ப்புகளாகும். இவை தவிரக் குழந்தைகள் அறிவு, ரோஜாப் பெண் ஆகிய மொழிபெயர்ப்பு

களையும் செய்துள்ளார். எனினும் அவற்றின் உள்ளடக்கம் கருதி, குழந்தை இலக்கியச் சாதனைப் பகுதியில் அவை பற்றிப் பேசலாம்.

''சென்ற பல வருஷ காலத்தில் மூன்று வகையான பத்திரிகைகளில் எனக்கு அனுபவம் உண்டு. ஏறக்குறைய முழுப் பொறுப்பையும் அந்த மூன்று வகைப் பத்திரிகைகளிலும் நான் சில சில காலம் நிர்வகித்ததும் உண்டு. தினசரி, வாரம், மாதம் ஆகிய பத்திரிகைகள் அவை. தினசரிப் பத்திரிகையில் செய்திக்குத்தான் முக்கிய ஸ்தானம். மாதப் பத்திரிகைகளில் கட்டுரை, கதைகளே இருக்கும். இதே மாதிரி கட்டுரை, கதைகளே அடங்கிய வாரப் பத்திரிகைகளும் சில உண்டு. ஆனால் செய்திகளுக்கும், கட்டுரை, கதைகளுக்கும் ஒருங்கே இடமுள்ள வாரப் பத்திரிகைகள்தான், லட்சிய பத்திரிகைகள் என்பது என் மனோராஜ்யம்.

பத்திரிகையின் ஓர் இதழை உருவாக்குவதற்குள் நாங்கள் இன்னும் எத்தனையோ பாடுகளைப்படுகிறோம். அச்சுக்கூடம், சித்திரக்காரர், பிளாக் செய்பவர் இவர்கள் எல்லோரோடும் ஓயாத மல்யுத்தம் நடத்திய பிறகுதான் ஓர் இதழ் வெளிவருகிறது. அதையெல்லாம் விவரிப்பதானால் உங்களுக்குத் தலைவலி எடுத்து விடும்''.

என்று தன் பத்திரிக்கை அனுபவத்தை 1940 களில் ஒரு முறை தி.ஜ.ர. வெளியிட்டார். பத்திரிகைகள் மலிந்து, அதற்குரிய வசதியான அச்சுக் கூடங்களும், அனுபவத்தின் மூலம் பயிற்சிபெற்ற அச்சுப் பணியாளர்களும், அதே மாதிரியான சித்திரக்காரர் உள்ளிட்ட துணைப் பணியாளர்களும் எண்ணிக்கையில் மிகுதியாய் இருந்த 1940 களின் சூழலில் வெளிப்பட்ட தி.ஜ.ர.வின் கருத்து இது என்றால் அவர் பத்திரிகைப் பணியைத் தொடங்கிய 1920 களின் நிலைமையைக் கற்பனை செய்து பார்த்துக் கொள்ளலாம். இத்தகைய சூழலில் 1923 இன் தொடக்கத்தில் சமரசபோதினியில் தொடங்கிய அவரது பத்திரிகைப் பணி 50 ஆண்டுகளுக்கு நீடித்து 1972 இல் மஞ்சரியில் நிறைவு பெற்றது. ஆசிரியர், உதவி ஆசிரியர், துணை ஆசிரியர், கூட்டாசிரியர், நிருவாக ஆசிரியர் அல்லது சுயேச்சைப் பத்திரிகையாளர் என்று எப்படியோ அவர் காலம் பத்திரிகையோடே சென்றிருக்கிறது.

### *சமரச போதினியில் பணி(1923)*

1923 வாக்கில், தஞ்சாவூரில் சேஷாத்திரி ஐயங்கார் என்பவர் 'சமரச போதினி' என்ற வாரம் மூன்று இதழை நடத்தி வந்தார். 500

பிரதிகளே அச்சிட்டு விற்று வந்த அந்தப் பத்திரிகையில் எழுத்தாளர் வ.ரா. துணையாசிரியராகப் பணியாற்றி வந்தார். 1923 இல் (தம் 22 ஆம் வயதில்) தி.ஜ.ர.வும் அந்தப் பத்திரிகையில் உதவி ஆசிரியராகச் சேர்ந்தார். அப்போது அவருக்கு கொடுக்கப்பட்ட சம்பளம் நாள் ஒன்றுக்கு அரை ரூபாய். மறு மாதத்திலேயே மாதச் சம்பளம் 20 ரூபாயாகவும், பின்பு 25 ரூபாயாகவும் உயர்த்தப்பட்டது. 500 பிரதிகளை வெளியிட்ட ஒரு பத்திரிகை, அந்தக் காலத்தில் கொடுத்த இந்தச் சம்பளம் பெரிய சம்பளமாகவே கருதப்படுகிறது.

சமரச போதினியின் இதழ்கள் தற்போது கிடைக்காத நிலையில், இதற்கு மேல் தி.ஜ.ர.வின் பங்கும் பணியும் பற்றி அறிய இயலவில்லை.

**ஊழியனில் பணி (1927 - 1933)**

1910-20 களில் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் என்ற வணிக இனம் காரைக்குடி, செட்டிநாடு முதலான ஊர்களை மையமாகக் கொண்டு செல்வாக்குப் பெற்று விளங்கியது. இரண்டாம் உலகப் போருக்கு முன் வரை, இப்பகுதியை வேராகக் கொண்டு வாழ்ந்த செட்டிமார்களின் செல்வாக்கு உலகளாவியது. அவர்களது வணிகத் தொடர்பிற்காகவும், அறிவுத்துறையில் தங்களை நிலை நிறுத்திக் கொள்வதற்காகவும் (இன்றைய வட்டாரப் பத்திரிகைகளின் பொருளடக்கத்தைச் சில சமயம் நினைவூட்டும்) சில பத்திரிகைகளைத் தங்களையே ஆசிரியர்களாகக் கொண்டு தொடங்கி நடத்தி வந்தனர். உதவி ஆசிரியர்களாக மற்றவரைச் சேர்த்துக் கொள்வதுண்டு. அத்தகைய பத்திரிகைகளுள், ராய. சொக்கலிங்கம் நடத்திய 'தன வைசிய ஊழியன்' பிறகு பெயர் மாறி 'ஊழியன்' சொ. முருகப்பா நடத்திய 'குமரன்' ஆகிய இதழ்கள் முக்கியமானவை.

அவற்றுள் ஊழியன் இதழில் தி.ஜ.ர. சில காலம் பணியாற்றினார். 1972 ஏப்ரல் 12 ஆம் தேதியிட்ட ஊழியன் இதழில் அவரது முதல் படைப்பு வெளிவந்துள்ளதை யடுத்து அவர் அந்தத் தேதியிலோ அதற்கு முன்னரோ சேர்ந்திருக்கலாம் என்று ஊகிக்கலாம். 'சந்தனக் காவடி - ஒரு சிறு கற்பனை' என்ற அந்தப் படைப்பு அவரது பெயர் இல்லாமலேயே வந்திருக்கிறது. வெளியிலிருந்து அவர் எழுதியிருந்தால் அவரது பெயரை நிச்சயமாய்ப் போட்டிருப்பார்கள் என்று எதிர்பார்க்கலாம். பத்திரிகையில் வேலை செய்பவரே எழுதியதால், போடவில்லை என்று ஊகித்து அந்தக் காலத்திலிருந்தே அவர் பணி செய்யத் தொடங்கினார் என்று கருதலாம். எனினும் 1927

ஏப்ரல் தொடங்கி 1928 மார்ச் வரை அவரது பெயரில் படைப்புகள் எவையும் வந்ததாகத் தெரியவில்லை. 1928 ஏப்ரல் தொடங்கி 1933 ஏப்ரல் வரை 130 படைப்புகள் தி.ஜ.ர. பெயரில் வெளிவந்துள்ளன.

1928 ஆம் ஆண்டு மட்டும் 34 கட்டுரைகள் வெளிவந்துள்ளன. வார இதழாக வெளிவந்த ஊழியனில் முதல் பக்கத்தில் மலர்மணம் என்ற பகுதி வெளியாகும். அந்தப் பகுதியில் முக்கியத்துவம் வாய்ந்த தோற்றத்தில் பெரும்பான்மையான கட்டுரைகள் வெளிவந்துள்ளன. 1929 இல் 35 கட்டுரையும், 1930 இல் மூன்றரை மாதங்கள் பத்திரிகை வெளிவராத நிலையில் 15 கட்டுரைகளும், 1931 இல் 36 படைப்புகளும், 1932இல் இரண்டு இதழ்களே வெளிவந்த நிலையில் இரண்டு கட்டுரைகளும், 1933 ஏப்ரலில் அது நிற்கும் வரை ஆறு கட்டுரைகளும் என, ஊழியனில் தி.ஜ.ர.வுக்குப் படைப்புப்பணி மிகுதியாக இருந்ததை அறிய முடிகிறது.

தி.ஜ.ர. ஊழியனில் வ.ரா.வுக்கு உதவியாகச் சேர்ந்ததும், பின் ஆசிரியராக உயர்ந்ததும் பற்றிய குறிப்புகள், வ.ரா. வை முன் வைத்து அவர் எழுதிய குறிப்புகள் மூலம் தெரியவருகிறது.

''1923 அல்லது 1924 இல் என்று நினைக்கிறேன்; சமரஸ போதினியில் அவரை (வ.ரா.வை) சந்தித்தேன். இரண்டொரு வருஷத்தில் ராய.சொ.விடம் என்னைச் சிபாரிசு செய்து 'ஊழியனில்' தமக்கு உதவியாக வ.ரா. அமர்த்திக் கொண்டார்,... துளி அப்பழுக்கு இல்லாது காரியம் செய்ய வேண்டும் அவருக்கு. இதனால் 'ஊழியனில்' அவரை விட்டு ஒரு சந்தர்ப்பத்தில் பிரிய விரும்பினேன். அன்று சகோதர வாஞ்சையோடு, அவர் சொன்ன சொற்கள் என்னைக் கண்ணீர் விடச் செய்தன. உடனே அவரும் கண்ணீர் விட்டு விட்டார். இந்தச் சம்பவத்துக்குப் பிறகும் என் வேலையில் சில சமயம் அவருக்கு அதிருப்தி ஏற்பட்டது.. ஆனால் அப்போதெல்லாம் அவர் அதிகமாக வாய் விட்டு என்னைக் கண்டிப்பதில்லை. அவருடைய முகம் மாத்திரம் சுண்டியிருக்கும். அவர் என்னைச் சொற்களால் கண்டித்தபோதை விட, இது தான் எனக்கு மேலும் சங்கடமாயிருந்தது. கடைசியில் என்ன நினைத்தாரோ தெரியவில்லை. ஊழியனின் தமது ஸ்தானத்தை எனக்கே அளித்து விட்டு அவர் விலகிவிட்டார். அவர் நினைப்பு இதுவாய்த்தான் இருக்க வேண்டும். 'இவன் ஒரு இளம் பயிர். நிமிர்ந்து நிற்கும் ஆல விருட்சத்தின் நிழலிலே இளம்பயிர் எப்படி வளரும்? நாம் அகன்றால்தான் இவன் முன்னுக்கு வர முடியும்?'' என்று நினைத்தே அப்படி அவர் விலகியதாக நான் எண்ணுகிறேன்''(கலைமகள், 1951 செப்டம்பர்)

என்று உருக்கமாகத் தி.ஜ.ர. ஊழியன் கால நிகழ்ச்சியை, வ.ரா. மறைந்த சமயம் நினைவு கூர்ந்தார். வ.ரா. விலகியது ஏன்? என்றக் கேள்விக்கு வேறு சமூகவியல் பதில் இருப்பினும், தி.ஜ.ர. இவ்வாறு கருதுமாறு அவர்களுக்குள் அன்புறவு இருந்தது என்ற அளவில் இந்நிகழ்வைப் புரிந்து கொள்ளலாம். 20.9.1927 இல் வ.ரா. ஊழியனி லிருந்து விலகிய பிறகு, தி.ஜ.ர. வுக்குப் பொறுப்பு கூடியிருக்கும். தி.ஜ.ர. பணியாற்றிய காலத்தில் எழுத்தாளர் பி.ஸ்ரீ.யும் ஊழியனில் பணியாற்றியதாகத் தெரிகிறது. ஊழியனில் தி.ஜ.ர. எழுதிய கட்டுரை களின் சிலவற்றின் பெயர்கள் வருமாறு: கர்வபங்கம், பாவ உரிமை, முறுவல்வதனம், பிசாசுப் பரிட்சை, தளையின் வலிமை, சமூக சீர்திருத்தமும் அரசியலும், அறிவுத் தெளிவு, திரைக்கும் பின்னே, தேசங்களின் தர்மம், இந்திய நாணயமாற்று, தமிழ் வளர்ச்சி, இக் கட்டுரைகள் தவிர, பல சிறுகதைகளையும் மொழி பெயர்ப்பு களையும் தி.ஜ.ர. செய்துள்ளார். புதுமை மிரட்சி, இலஞ்சமுறி (தழுவல் சிறுகதை), நச்சுப்புகை, வன நடுவே(மொழி பெயர்ப்புச் சிறுகதை) சாப மோதிரம் (தழுவல் சிறுகதை), கனவில் தோன்றிய கடவுள், சந்தனக் காவடி போன்றன ஊழியனில் வெளிவந்துள்ள சில சிறுகதைகளாகும்.

ஊழியனில்தான் தி.ஜ.ர.வுக்கு எழுத்துப் பக்குவம் கிடைத் திருக்கும் என நம்பலாம். தி.ஜ.ர.வின் தமிழ் நடை இலக்கியத் தமிழிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாய் மாறி வழக்குத் தமிழுக்கு வந்திருப்பதை ஆண்டு தோறும் அவர் எழுதிய கட்டுரைகளிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.

ஊழியனில் (18.9.1928) மலர் மணம் பகுதியில் வளர்ச்சி என்ற தலைப்பில் 'தி.ஜ.ரெ.' என்ற பெயரோடு வந்த கட்டுரையிலிருந்து ஒரு பகுதி இது.

அதிகாரப் பெருக்கும், செல்வச் செழிப்பும், உடல் வலுவும் மனிதனுக்கு வளர்ச்சியென்பது போல உலகாயத எண்ணங் கொண்டவர்கள் கருதுவார்கள். இவை பௌதீக லாபங்கள் தான். பௌதீக லாபங்களை மனிதனது வளர்ச்சியென்பதாக, ஆன்மார்த்த இலட்சியத்தை உடையவர்கள் நினைப்பதில்லை. மனித வருக்கத்தின் பொதுப்போக்கு உலகாயத நோக்கை ஏற்பதாக இல்லை. மனித வருக்கம் தனது பௌதீக நல்வாழ்வுக்கும் அறமுறையை வேண்டு கிறது. அறநெறியே ஆன்ம வளர்ச்சியைத் தருவது. எனவே மனித வருக்கத்தின் பொதுப்படையான தன்மையை நோக்குங் காலையிலும், பிரபஞ்ச நலன்கள் மட்டில் மனிதனது வளர்ச்சிக் குறிகள் ஆகா என்பது பெறப்படும்.

இக்கட்டுரைப் பகுதியில் காணப்பெறும் மொழி நடை 'தமிழ்க்கடல்' ராய.சொ.வின் ஊழியன் இதழ் நடையாகும்.

ஊழியன் (29.10.1929) இதழில் மலர்மணம் பகுதியில் வெளியான 'நூற்பயன்' என்ற 'தி.ஜ.ர.' கட்டுரையிலிருந்து ஒரு பகுதி கீழ் வருவது;

நூலறிவு காரியத்துக்குதவாதென்று கூறுவோரும், எடுத்ததெற் கெல்லாம் நூல் மேற்கோள் வேண்டுமெனும் பண்டிதரும், நூற் பயனையும் இயல்பையும் அறியாதவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? நமது அனுபவத்துக்கு வராத, இதுவரை நமது யுக்திக்கு எட்டாத ஒன்றை நூல் கூறுமாயின், நமது அறிவு கொண்டு அதன் உண்மையை விளங்கிக் கொள்ளலாம். இவ்வாறே நமது சொந்த அனுபவத்தில் நாம் கண்டு கொண்ட, நமது யுக்திக்கும் பொருத்தமாகப் பிரத்தியட்சத்தில் விளங்கும் ஒன்றுக்கு நூற் பிரமாணம் தேவையில்லை. முதன் முதலாக நூலினின்று அறியினும் நேரிலே சுவைத்துப் பார்ப்பினும் சர்க்கரை தித்திக்கத்தான் செய்யும். கசந்து விடாது. நூற்பயன் பிறர் அனுபவமும் கருத்தும் நமதுடைமை யாதலாலே.

1929இலும் இலக்கிய வழக்கிலேயே, தி.ஜ.ர.வின் நடை தொடர்ந்து பயின்று வருவதைத் தடித்த எழுத்துகள் உள்ள சொற்றொடர்கள் புலப்படுத்தும்.

சந்தேகக் கடல் என்ற ஊழியன் (27.5.1930) கட்டுரை, தி.ஜ.ர.வைப் புதிய நடையாளராகக் காட்டத் தொடங்குகிறது.

"எந்த இயக்கமாயினும் சரி, பொது ஜனங்களின் உள்ளத்தைக் கவர வேண்டுமானால், உண்மையும், தெளிவும், நேர்மையும் வேண்டும். சந்தேகத்தினால் தான் நெறிகள் தவறுகின்றன. சந்தேகத்தினால் பெரியவர்களைப் பற்றித் தவறாகக் கருதுகிறோம். சந்தேகத்தினாலேயே, ஏமாற்று வித்தைகளும், ஜால வேடிக்கைகளும், நமக்குத் தேவையெனத் தோன்றுகின்றன. நாம், நமது அறிவு செல்லுமிடத்தைப் பற்றி நிற்பதில் தவறில்லை. நமது அறிவும் இதயமும் உண்மையாக விருப்பதற்காக, பிறர் அறிவும் இதயமும் பொய்யாகி விடாது. அநவரத சந்தேகிகள் தீரமாக வாழ முடியாது. சந்தேகக் கடலில் தத்தளிப்பவர்கள் ஏறுவதற்குக் கரை கிடையாது."

தி.ஜ.ர. உள்ளடக்கத்திலும் மொழி நடையிலும் எளிமையின் திசை நோக்கிப் பயணமாகிவிட்டதை மேற்கண்ட வரிகள் காண்பிக்கின்றன.

தமிழ் நாவல்கள் ஏன் வளரவில்லை என்பது குறித்தும், தனி மனித நியாயத்திற்கும், தேசத்தின் நியாயத்திற்கும் உள்ள தொடர்பு குறித்தும் இன்னும் சமூக, அரசியல், இலக்கிய, மொழி, குறித்தும் பல கட்டுரைகள் தி.ஜ.ர.வின் பங்களிப்பாக ஊழியன் இதழில் மிளிர்கின்றன. பெரும்பாலும் அவை நூலாக்கம் பெறாதவையே.

1927இல் தொடங்கி 1933 வரை ஊழியன் இதழில் தொடர்ந்து பணியாற்றினார். இடைஇடையே 1930 இல் மூன்றரை மாதங்களும், 1932இல் 11 மாதங்களும், இதழ் வெளிவராது போயின. 21.6.1933 முடிய வெளிவந்த ஊழியன், பிறகு பொருள் முட்டுப்பாடு காரணமாய் நிறுத்தப்படுகிறது. அதுவரை தி.ஜ.ர. அதில் பணியாற்றியதாகக் கருதலாம். பின்னர் 6.7.1934இல் மீண்டும் ஊழியன் (காரைக்குடிக்குப் பதிலாக) சென்னையிலிருந்து வெளிவருகிறது. இதில் தி.ஜ.ர. வந்து சேர்ந்து பணி புரிந்ததாகத் தெரியவில்லை.

### *சுதந்திரச் சங்கு*

காரைக்குடி ஊழியனில் பணியாற்றி விலகிய பிறகு அதாவது 1933 ஜூன் அல்லது அதற்குச் சற்று முன்பிருந்து 1940இல் வை.கோவிந்தனின் 'சக்தி'யில் சேரும் காலம் வரையிலான இடைப்பகுதியில், சுதந்திரச் சங்கு, ஹிந்துஸ்தான். ஜயபாரதி உள்ளிட்ட பல இதழ்களில் அவர் பணியாற்றியிருக்க வேண்டும். கிடைக்கும் சில சுதந்திரச் சங்கு இதழிலிருந்து தி.ஜ.ர. பணியாற்றியதை அறிய முடிகிறது.

சங்கு கணேசன் மற்றும் சங்கு சுப்பிரமணியன் ஆகியோரால், காந்திய தத்துவங்களைப் பரப்பும் தேசிய நோக்கத்துடன் சென்னையி லிருந்து வெளிக் கொண்டு வரப்பட்ட வார இதழ் சுதந்திரச் சங்கு ஆகும். சங்கின் ஆசிரியர்களாகப் பலர் பணியாற்றியுள்ளனர். சுதந்திரச் சங்கை அது வெளிவந்த காலத்தை யொட்டி ஐந்து தொகுதிகளாகப் பிரிக்கலாம். அதன் ஐந்தாம் தொகுதி வெளிவந்த காலத்தில் தான் தி.ஜ.ர. அதில் பணியாற்றியிருப்பார் என்று ஊகிக்க முடிகிறது. கிடைத்த இதழ்களில் அவரது பெயர் ஆசிரியர் பெயரிடத்தில் இல்லை என்றாலும் அவரது படைப்புகள் வந்ததையடுத்து அவர் பங்காற்றியதை உறுதி செய்யலாம். "காந்தி சென்னை வந்த சமயம்தான் சுதந்திர சங்கு அலுவலகத்தில் பணி புரிந்து வந்தேன். அப்போது வாங்கிய காமிராவால் அவரைப் படம்

பிடித்தேன்'' என்று தி.ஜ.ர. ஒரு கட்டுரையில் கூறியிருப்பது கொண்டும் இதை உறுதி செய்யலாம்.

16.7.1934இல் வெளிவந்த சுதந்திரச்சங்கு இதழில் 'ஒரே கேள்வி' என்ற கட்டுரை தி.ஜ.ர. பெயரில் வெளிவந்துள்ளது. இது தவிர வேறு சில கட்டுரைகளும் தி.ஜ.ர. பெயரில் வெளிவந்துள்ளன. டால்ஸ்டாயின் மொழி பெயர்ப்புகள் பலவும் சுதந்திரச்சங்குவில் வெளியாகி உள்ளன. அவை அநேகமாய் தி.ஜ.ர. செய்த மொழியாக்கங்களாக இருக்கலாம். 'எல்லாம் நானே', 'மடிந்த தோசை' ஆகியன அவரது பெயரில் வெளிவந்த வேறு சில கதைகளாகும்.

### 'சக்தி'யில் பணி (1940-1946)

பர்மாவில் லேவா தேவி தொழில் செய்து அதில் வெறுப்புற்று, தாய்த் தமிழகம் வந்த வை. கோவிந்தன், சுத்தானந்த பாரதியின் மீது பற்றுக் கொண்டு அவரது நூல்களை வெளியிட அன்பு நிலையத்தைத் தொடங்கினார். பின்னர் ஆங்கில ஏடான 'டைம் மேகஸின்' ஒத்த தமிழ்ப் பத்திரிகையைத் தொடங்கும் எண்ணத்தில் 'சக்தி' மாத இதழை 1939இல் சென்னையில் தொடங்கினார். இவ்விதழ் 1939 தொடங்கி 1954 வரை தொடர்ந்து வந்தது. சில காலம் நின்றது, எனினும் சில காலம், மாதப் புத்தகம் என்ற நிலையிலும், வடிவ வேறுபாடுகளுடன் வந்து கொண்டுதான் இருந்தது. அழகிய போட்டோக்களுடன், நல்ல தாளில், நல்ல புதிய புதிய சிந்தனைகளையும், மொழிபெயர்ப்பு களையும் தாங்கி வந்து, தமிழகத்தில் புதிய கிளர்ச்சியைத் தந்தது வை. கோவிந்தனின் 'சக்தி'. அழகாகப் பத்திரிகையைக் கொண்டு வர வேண்டும் என்ற எண்ணத்தைத் தமிழகத்தில் இப்பத்திரிகை தோற்றுவித்தது எனலாம். இப்பத்திரிகையின் 15 ஆண்டு கால வரலாற்றில் தி.ஜ.ர., சுப. நாராயணன், கு. அழகிரிசாமி என்று பல ஆசிரியர்கள், வை. கோவிந்தனுடன் கூட்டாசிரியராகத் துணை புரிந்துள்ளனர். முதலில் அவருக்குத் துணையாயிருந்தவர் தி.ஜ.ர. எனலாம்.

1939 ஆகஸ்டில் தொடங்கிய சக்தி மாத இதழின் முதல் ஐந்து இதழ்களில் தி.ஜ.ர.வின் பெயர் ஆசிரியப் பொறுப்புப் பக்கத்தில் இல்லை. படைப்புகளும் அவர் பெயரில் எதுவும் இல்லை. 1940 ஆடி இதழில் தி.ஜ.ர.வின் கட்டுரை 'என் குருட்டு பக்தி' வெளியாகி யுள்ளது. இதுவே சக்தி இதழில் வெளியான தி.ஜ.ர.வின் முதல் கட்டுரை எனலாம். அடுத்த இதழான 1940 ஆவணி இதழில் 'ஒதுங்கி நிற்கும் காந்தி' என்ற கட்டுரை தி.ஜ.ர. பெயரில் வெளி வந்துள்ளது.

இந்தச் 'சக்தி' இதழில் வெளிவந்த படைப்புகளைப் படைத்தவர் பற்றிய குறிப்புகளை எழுதும்போது.

"போன மாதம் ஏன் இவரைப் பற்றி ஒன்றும் குறிப்பிடப்பட வில்லை என்று ஒரு கேள்வி வந்தது. இன்று இவர் நமது காரியாலயத்திலேயே சேர்ந்திருக்கிறார். நம்மைப் பற்றி நாமே என்ன எழுதிக் கொள்வது" என்று எழுதியது.

எனவே,1940 ஆடி அல்லது ஆவணியிலிருந்து தி.ஜ.ர. சக்தி இதழில் பணியாற்றத் தொடங்கினார் என்று ஊகிக்கலாம். ஆசிரியர் பொறுப்புப் பக்கத்தில் பின்னர் அவரது பெயர் தொடர்ந்து வெளிவந்தது. 'மதிப்பிழந்த நோட்டு' என்ற தி.ஜ.ர. வின் கட்டுரை வெளியான 1946 மார்ச்சு இதழின் ஆசிரியர் விவரம் வெளியாகும் பகுதியில் தி.ஜ.ர. வின் இடத்தில் சுப.நாராயணன் பெயர் உள்ளது. இதிலிருந்து 1946 பிப்ரவரிவரை அவர் பணியில் இருந்தார் என்றும் சக்தியில் அவர் மதிப்பிழந்தது 1946 மார்ச்சில் என்றும் துணியலாம். ஆக, விக்கிரம ஆடி அல்லது ஆவணி முதல் பார்த்திப தை முடிய சக்தி இதழில் தி.ஜ.ர. பணியாற்றினார். அதாவது 5 ஆண்டுகள் 7 மாதங்கள்.

தி.ஜ.ர. தம் பெயரிலும், புனைபெயர்களிலும், கதை, கட்டுரை, சிறுவர் பாடல், சிறுவர் கதை, மொழி பெயர்ப்பு என 99 படைப்புகளை இக் கட்டத்தில் சக்தியில் செய்துள்ளார். ஆசிரியப் பணியோடு, படைப்புப் பணியும் தி.ஜ.ர.வைச் சிரமப்படுத்தியிருக்க வேண்டும்.

சக்தியில் முக்கியப் பங்களிப்பாகக் காவலன் தீபம், கூண்டுக்கிளி உள்ளிட்ட நாடகங்களைக்கொண்ட கூண்டுக்கிளி மொழி பெயர்ப்பையும், புகழ்ச்செல்வர் வரலாற்றுக் கட்டுரைகளையும், குழந்தைகள் அறிவு என்ற பெயரில் நூலாகப் பின்னர் வெளிவந்த டால்ஸ்டாயின் குழந்தைக் கட்டுரைகளையும், சினிமா தொடர்பாக அவர் எழுதிய கட்டுரைகளையும் கருதலாம்.

சக்தியில் தி.ஜ.ர. எழுதிய சினிமா தொடர்பான கடிதங்கள் மிக முக்கியமானவை. முதலாளிக்கு, நடிகருக்கு, கதாசிரியருக்கு, டைரக்டருக்கு, படப்பிடிப்பாளருக்கு, ஸ்ரீமான் விசிறிக்கு என இவை ஆறு. இவற்றுள் அப்போதுதான் பேசத் தொடங்கியிருந்த சினிமாவை, புராண, நாடகபாணியிலிருந்து சுவாரஸ்யமான, புதிய திசைக்கு இட்டுச் செல்லும் வழியை அறிவுரையாக, சாதாரண மனிதனின் பார்வையிலிருந்து தருகிறார்.

'முதலாளிக்கு' எழுதிய கடிதத்தில் (சக்தி, விக்கிரம) இருந்து ஒரு பகுதி:

''பிறர் கிழித்த பழைய கோட்டை விட்டு நகராது அல்லாடுகிறீர்கள் ஆனால் அது கோடே அல்ல: குடை கவிழ்ந்த வண்டிகளின் சிதறிய குப்பை அது. மாறுதல் என்றால் அஞ்சுகிறீர்கள். புது மாதிரியாய். கண்ணுக்கு இன்பமாய், காதுக்கு அமிழ்தமாய் உருக்கமும் உணர்ச்சியும் குதூகலமும் களிப்பும் பரபரப்பும் நிறைந்ததாய் - கேவல இச்சைகளைக் கிளறாததாய் - ஒரு படம் பிடியுங்கள். நன்றாய் விளம்பரம் செய்யுங்கள் - வெற்றி உங்களுடையதாகும்'' என்று புதிய பாதையைக்காட்டுகிறார் முதலாளிகளுக்கு.

நடிகருக்கு எழுதிய கடிதத்தில், (சக்தி,விக்கிரம)

''நாடகத்துக்கும் சினிமாவுக்கும் எத்தனையோ வித்தியாசம். நாடக நடிப்பு ஒரு பிறப்பு என்றால், சினிமா நடிப்பு இன்னொரு பிறப்பு. நீங்கள் வீழ்ச்சியுற்ற தமிழ் நாடக மேடையிலே நடித்தவர்களாக இருந்து விட்டாலோ விமோசனமே இல்லை.

(நடிப்புக்கு) கற்பனாசக்தியும் புத்திக்கூர்மையும் உணர்ச்சி உள்ளமும் லோகானுபவமும் வேண்டும்'' என்று நடிப்பதற்குரிய இலக்கணத்தைச் சொன்னார்.

சினிமா என்கிற புதிய கலை வடிவத்தை வரவேற்று அதைத் தமிழ்ச் சூழலுக்கு ஏற்ற விதத்தில் ஆக்கி விடும் முயற்சியில் தி.ஜ.ர. 'சக்தி' மூலம் ஈடுபட்டிருப்பது தெரிகிறது. 'சக்தி' இம் மாதிரியான, நவீன, முற்போக்கு அம்சங்களைத் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்திய இதழ். அந்த வகையில் 'சக்தி' இதழில் அமைந்தது இக்கட்டுரைக் கடிதத் தொடர். இதைப் போலவே, புகழ்ச் செல்வராக வந்த ''பிரபலஸ்தர் வரிசையும்'' 'சக்தி'யில் வந்த தி.ஜ.ர.வின் முக்கியமான படைப்பாகும். இவை தவிரக் குழந்தைகள் பக்கங்களும் குறிப்பிடத்தகுந்தவை.

கதைகள், வரலாறுகள், கட்டுரைகள், பாடல்கள், குறிப்புகள் எனச் சக்தியின் உள்ளடக்கம் தி.ஜ.ர. காலத்தில் இருந்தது. கதைகளில் சிறுகதைகளும், வரலாற்றில் தமிழ்நாடு, இந்தியா, உலக வரலாறுகள் பற்றிய கட்டுரைகளும், உலக பிரபலஸ்தர்களின வரலாறுகளும் அடங்கும். கட்டுரையில் உள்நாட்டு, வெளிநாட்டுச் சமூகக் கட்டுரைகள் அடங்கும். பாடல்களில் தேசிக விநாயகம்பிள்ளையின் பழைய பாடல் முதல் ந.பி.யின் புதிய பாடல் வரை இடம் பெறும்.

குறிப்புகளில் புத்தக உலகம் என்ற நூல் விமர்சனப் பகுதியும், காலச் சுழலில் செய்திக் குறிப்புகளும். பறித்த பூக்களில் பிற இதழ்களில் வெளிவந்த முக்கிய குறிப்புகளும் இடம் பெறும். நகைச்சுவைக் குறிப்புகளும், துணுக்குகளும் சக்தியின் அடையாளங்கள். 17 முதல் 19 படைப்புகள் வரை ஒவ்வொரு இதழிலும் இடம் பெற்றிருந்தன.

### சக்தியிலிருந்து விலகியது

காரைக்குடி ஊழியனுக்குப் பிறகு ஆறாண்டுக் காலம் பல பத்திரிகைகளில் காலத்தை ஓட்டிய தி.ஜ.ர., பிறகு தொடர்ந்து ஆறாண்டு காலம் ஒரே பத்திரிகையில் சக்தியில் நிம்மதியாகப் பணியாற்றி இருந்திருப்பார் என்று கருதியிருந்த நமக்கு இடி போலக் கிடைக்கிறது தி.ஜ.ர. வின் விலகல் கடிதம். என்ன பிரச்சனை? என்று தெளிவாகத் தெரியாத நிலையில் 'தவறாகப் புரிந்து கொள்ளப்படுதல்' என்றே முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது. 'சக்தி' யின் அதிபரான வை. கோவிந்தனுக்குத் தி.ஜ.ர. எழுதிய கடிதத்தின் (10.1.1946) ஒரு பகுதி இது.

''சக்தியில் இரண்டாவது வருஷம் தொடங்கி, அதில் நான் இருந்து வருகிறேன். இருந்தாலும் தங்களை நானும் என்னைத் தாங்களும் நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை, புரிந்து கொள்ளத் தவறி விட்டோம் என்று நான் உணர்கிறேன். இந்த நிலையில் நான் இன்னமும் சக்தியில் இருந்து வருவது தங்களுக்கோ எனக்கோ நியாயமில்லை என்று கருதுகிறேன். பல காரணங்களால் என்னால் தற்போது வேலை செய்யச் சிரமமாயிருக்கிறது. இதைப் பற்றி விவாதித்துப் பயனில்லை. ஆகையால் இந்தக் கடிதத்தை என் ராஜினாமாவாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

என்று எழுதி சக்தியிலிருந்தும் அதைத் தொடர்ந்து அதன் சகோதரப் பத்திரிகை 'பாப்பா' விலிருந்தும் விலகிக் கொள்கிறார். 'பாப்பா' விலிருந்து விலகிக்கொள்வது பற்றித் தனியாக அதன் அதிபர் தியாகராஜனுக்கு எழுதிவிடுவதாகவும் அக்கடிதத்திலேயே தி.ஜ.ர. குறிப்பிடுகிறார்.

சக்தியிலிருந்து விலகினாலும் அதில் தி.ஜ.ர. பின்னர் கட்டுரைகள் எழுதினார். ஆசிரியர் என்ற உறவை அலுவலக ரீதியாக முறித்துக் கொண்டாலும் எழுத்தாளர் என்ற முறையில் இலக்கிய ரீதியாக நட்பு தொடர்ந்திருக்கலாம். விலகலை வை.கோவிந்தன் உடனே ஏற்காமலும் இருந்திருக்கலாம்.

சக்தியிலிருந்த போது தி.ஜ.ர. அதன் சகோதரப் பத்திரிகையான 'பாப்பா' இதழில் குழந்தைகளுக்கான இலக்கியத்தை வளர்ப்பதிலும் ஈடுபட்டிருந்தார். பல கதைகளை அதில் எழுதியதாகத் தெரிகிறது.

**மஞ்சரியில் பணி (1947-1972)**

1946 இல் சக்தியிலிருந்து வெளியே வந்ததும், அவருக்கு ஏற்ற இலக்கியப் பணியைத் தேடிக் கொண்டிருந்த மனநிலையில் மஞ்சரி பத்திரிகையின் உதயம் தி.ஜ.ர.வுக்குப் பெரும் நம்பிக்கை ஒளியாய் இருந்திருக்கக் கூடும். தி.ஜ.ர.வுக்கும் மஞ்சரி போன்ற உள்ளடக்கம் கொண்ட பத்திரிகை, கனவாய் இருந்திருக்கிறது. இதைப் பற்றிய தம்பி. சீனிவாசனின் கருத்து வருமாறு:

'வந்து குவியும் கையெழுத்துப் பிரதிகளிலிருந்து தரமான வற்றைத் தொகுத்து ஒவ்வொரு பத்திரிக்கையும் வெளியிட்டால், அத்தகைய பத்திரிக்கைகளிலிருந்தே தரமானவற்றைத் திரட்டி, ஒரு 'டைஜஸ்ட்' வெளியிட்டால் என்ன என்பது தி.ஜ.ர.வின் நீண்ட நாள் ஆசை. அதற்கான பல சோதனைகளை அவர் சக்தி ஆசிரியராக இருந்த போது நிகழ்த்திப் பார்த்தார். தமிழ்நாட்டின் ஒரே டைஜஸ்ட்டான 'மஞ்சரி' தொடங்கியதும் இவரே ஆசிரியரானார்' (தி.ஜ.ர. மணி விழா மலர் 1969).

என்று தி.ஜ.ர. மஞ்சரியில் ஆசிரியர் பொறுப்பை ஏற்ற சூழலை அவர் விளக்கினார். மஞ்சரியின் அதிபர், தி.ஜ.ர. வை மஞ்சரிக்குத் தேர்ந்தெடுத்த சூழலைப் பின் ஒரு சமயம் சொல்லும் போது,

''தமிழில் 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' போன்ற ஒரு பத்திரிகையைத் தொடங்க வேண்டும் என்று எனக்கு வெகுநாளாக ஆவல். ஸ்ரீ தி.ஜ.ரங்கநாதன் அதை நிறைவேற்ற முன்வருவார் என்று தெரிந்ததும் எனக்கு இந்த விஷயத்தில் பின்னும் உற்சாகம் மூண்டது. அவரைப் பற்றிப் பலர், 'பத்திரிகையுலகின் ஜாம்பவான் தி.ஜ.ர. - நல்ல அனுபவம் உள்ளவர்' என்று சொல்லக் கேட்டிருந்தேனே தவிர, அதற்குமுன் பார்த்ததில்லை. நான் கேட்டுக் கொண்டதன் மேல் என் விருப்பத்துக்கு உடனே இசைந்து மஞ்சரி ஆசிரியர் பொறுப்பேற்றார்'' (மஞ்சரி, டிசம்பர் 1972) என்று இவரே அழைத்துக் கொடுத்த பெருந்தன்மையை வெளிப்படுத்தினார்.

மொழிபெயர்ப்பில் விருப்பமும் பயிற்சியும் பெற்றிருந்த தி.ஜ.ர வுக்கு மொழிபெயர்ப்போடு பெரிதும் தொடர்புடைய ரீடர்ஸ் டைஜஸ்ட் போன்ற இதழ் அமைப்புடைய மஞ்சரி மிகுந்த

பொருத்தமான பத்திரிகையாய் இருந்திருக்க வேண்டும்.அதற்கு முன்னர் பல்வேறு பத்திரிகையில், மஞ்சரியோடு ஒப்பிடும்போது குறைவான காலமே பணியாற்றியிருந்தார் தி.ஜ.ர.. மஞ்சரியின் பணி 1947 இல் தொடங்கி 1972 வரை நீடித்தது. மஞ்சரியின் நிருவாக ஆசிரியர் என்றப் பொறுப்பில் தி.ஜ.ர. இருந்தார். ஆசிரியரும் பதிப்பாளருமாக அதன் அதிபர் நா. ராமரத்னம் விளங்கினார். பாஷை ஆசிரியர்களாக கி.வா.ஜ, த.நா. குமாரசாமி. கா.ஸ்ரீ.ஸ்ரீ., கி.சாவித்திரி அம்மாள் முதலியோர் விளங்கினர்.

"மஞ்சரி புதியது; புதுமையான முயற்சி ஆனால் அது ஒரு புதிய பத்திரிகை அல்ல. பல பத்திரிகைகளின் திரட்டாகும்.

இந்தியாவில் எத்தனையோ அருமையான பத்திரிகைகள் எத்தனையோ பாஷைகளில் விதவிதமான பொருள்களுடன் வெளியாகின்றன. புதுப்புது விஷயங்களை அறியவும், காலத்தோடு ஒட்டி வாழவும் விரும்புகிற எவருக்கும் அத்தனையையும் படிக்க வேண்டுமென்ற ஆசை உண்டாகிறது. ஆனால் அது சாத்தியமல்ல; நேரமும் இராது. இத்தனைப் பத்திரிகைகளையும் படிப்பதென்றால் எத்தனை பாஷைகள் தெரிய வேண்டும். தெரிந்தாலுந்தான் நாள்பூராவும் படித்துக்கொண்டிருக்க இயலுமா? அப்படியே படித்தாலும் அவ்வளவையும் படித்து முடிகிற காரியமா?

ஆகவே சகல பத்திரிக்கைகளிலும் வெளிவரும் மிகச்சிறந்த விஷயங்களைச் சாரமாகத் திரட்டித் தந்தால் அதைப் படிக்க யாவரும் விரும்புவது இயல்பு. தமிழ் நாட்டில் அந்தப் பொறுப்பை மஞ்சரி ஏற்றுக் கொண்டிருக்கிறது. இந்தியாவின் வெவ்வேறு பாஷைப் பத்திரிகைகளில் வெளியாகும் இலக்கியம், கலை, விஞ்ஞானம், அரசியல், ஹாஸ்யம் முதலிய விஷயங்களில் மிகச் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து எவரும் படிக்கக் கூடிய எளிய தமிழில் அழகாகச் சுருக்கிக் கொடுப்பது மஞ்சரி..அறிவுக் களஞ்சியமாக மஞ்சரி விளங்கவேண்டும் என்பதே எங்கள் நோக்கம்".

என்று மஞ்சரிக்காரர்கள் குறிப்பிட்டது மாதிரியே தி.ஜ.ர. இருந்தவரை மஞ்சரி திகழ்ந்தது. பல இதழ்களில் வெளிவந்த சிறந்த கட்டுரைகள் மஞ்சரியில் இடம் பிடித்தன. சான்றுக்கு ஒரு மஞ்சரியில் இடம் பெற்ற பத்திரிகைகளை நாம் பார்க்கலாம். மணி விளக்கு, தமிழ்நாடு, செந்தமிழ்ச்செல்வி, ஸண்டே கிரானிக்கள், ப்ரக்ருதி, பேரண்ட்ஸ் மகஸீன், புக் யுனிவர்சிடி ஜர்னல், ப்ரபாசி, ஸவுத் ரெயில்வே மகஸீன், மாடர்ன் ரெவ்யூ, ஸ்வதந்திரா முதலியன அவற்றுள் சில.

மஞ்சரியின் முயற்சியைப் புகழ் பெற்ற இந்தி எழுத்தாளர் கே.ஏ. அப்பாஸ் பாராட்டியிருக்கிறார்.

''இந்தியாவிலேயே பத்திரிக்கைப் பிரசுரத்தில் 'மஞ்சரி' ஓர் இணையற்ற முயற்சி ஆகும். பிறமாகாண மக்களின் வாழக்கையை யும் பிற இந்திய பாஷைகளிலுள்ள இலக்கியத்தையும் பற்றி மஞ்சரியின் தமிழ் வாசகர்கள் அறிந்து வருவதைக் கண்டு நான் மகிழ்கிறேன்'' என்பது அவரது பாராட்டு (மஞ்சரி.1947)

இக்கட்டுரைகளன்றி, புகழ்பெற்ற நாவல்கள், முக்கியமான நூல்களின் சுருக்கங்களும் இடம் பெறுவது மஞ்சரியின் தனிச் சிறப்பு. இதைச் செய்வதில் தி.ஜ.ர. கை தேர்ந்தவராம். அந்தப் புத்தகச் சுருக்கங்களுக்கு அவர் எழுதும் சிறு குறிப்பு முழுப் புத்தகத்தையும் நன்கு படித்து உள் வாங்கி அச்சுருக்கம் செய்யப்பட்டதைப் புலப்படுத்தும் வண்ணம் உள்ளது. வ.ரா. வின் சுந்தரி நாவலுக்கு எழுதிய குறிப்பை வைத்து இக் கருத்தைச் சொல்லமுடிகிறது.

### நடுவில் 'நவமணி'

மஞ்சரியிலிருந்து சிறிது காலம் விலகி. நவமணி என்ற புதிய தமிழ்த் தினசரியில் ஆசிரியராகத் தி.ஜ.ர. விளங்கினார். அதற்காக, மஞ்சரியிலிருந்து சிறிது காலம் விலகிய போது எழுதிய குறிப்பு, மஞ்சரியிலிருந்து அவர் முற்றும் விலகாததையும் அதன் வளர்ச்சியில் அவருக்கிருந்த அக்கறையையும் காட்டுகிறது. மஞ்சரியில் வெளியான அக்குறிப்பு நண்பர்களுக்கு என்ற தலைப்பிட்டு இப்படிச் செல்கிறது.

'பன்னிரண்டு வருஷத்துக்கு மேலாக - மஞ்சரியின் தொடக்கத்திலிருந்து - அதன் நிர்வாக ஆசிரியனாகப் பொறுப்பு வகித்து வந்த நான், இப்போது 'நவமணி' - என்ற புதிய தமிழ்த் தினசரியின் ஆசிரியனாகப் பதவியேற்றிருக்கிறேன். இதற்காக மஞ்சரி அன்பர்களிடம் நான் விடை பெறுவதாகச் சொல்ல மாட்டேன். மஞ்சரி காரியாலயத்தில் இருந்து கொண்டு, நிர்வாகப் பொறுப்பை இனி வகிக்க மாட்டேனே தவிர, வெளியிலிருந்தபடி, பாஷை ஆசிரியர் குழுவில் ஒருவனாக இருந்து கொண்டு என்னால் இயன்ற பணியை இனியும் புரிந்து வருவேன். நான் எங்கேயிருந்தாலும் மஞ்சரியின் வாழ்விலும் வளர்ச்சியிலும் என் இதயம் பதிந்திருக்கும்' (மஞ்சரி, 1960 செப்டம்பர்)

என்று குறிப்பிட்டு, தமக்குப்பின் தம் பொறுப்பை நிருவகிக்க இருக்கும். த.நா. சேனாபதியை அறிமுகப்படுத்தி, மஞ்சரியில் தொடங்கத் திட்டமிட்ட புதிய பணி தொடங்கி நடக்குமென்றும்

அதற்குத் தம் பங்கும் பணியும் நிச்சயம் இருக்கும், என்று கூறி விடை பெற்றார்.

எழுத்தாளர்களின் கூட்டுறவு முயற்சியில் நவமணி நாளிதழ் தொடங்கியது. ஆசிரியராக இருந்த அந்தச் சில மாதங்களில் தி.ஜ.ர. எழுதிய தலையங்கங்கள் இலக்கியத்தரத்துடன் அமைந்தன. அன்றன்று மலர்ந்து மறையும் ஒரு தினசரியின் தலையங்கங்களில் புத்தக வடிவமாக்கக் கூடியவை என்று சிலவேனும் தேறுமானால், அவற்றில் தி.ஜ.ர.வின் எழுத்தும் இடம் பெறும் என்று தம்பி சீனிவாசன் நவமணியில் தி.ஜ.ர. பணி பற்றிச் சிறிது அறியத்தருகிறார். கொஞ்ச நாளில் நவமணியிலிருந்து தி.ஜ.ர. மீண்டும் மஞ்சரிக்கே முழு நேரமும் திரும்பிவிட்டார்.

1947 முதல் 1972 முடிய 25 ஆண்டுகள் மஞ்சரியில் ஆசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெறும் வேளையில், மஞ்சரியின் பதிப்பாளர், தி.ஜ.ர.வைப் பாராட்டிச் சில வார்த்தைகள் எழுதினார். அவை மஞ்சரியைத் தி.ஜ.ர. எப்படி நடத்தினார் என்பதை அறிய வைக்கின்றன.

"இன்று மஞ்சரி இந்தியாவிலுள்ள பல மொழிப் பத்திரிக்கைகளி லிருந்தும் வாசகர்களைக் கவரும் முறையில் பல விஷயங்களைத் திரட்டித் தருவதை எல்லாரும் பாராட்டுகிறார்கள் என்றால், அந்தப் பெருமை ஸ்ரீ.தி.ஜ.ர.வுக்குத் தான். இந்தத் துறையில் அவர் மன்னன்!

எங்களுக்குள் என்றென்றும் சுமுகமான உறவு நீடித்து வந்திருக்கிறது. நண்பர்களாகவே நாங்கள் பழகினோம். சிறிது காலம் அவர் 'நவமணி' ஆசிரியர் பொறுப்பேற்றிருந்த போதும் அந்த நட்பு நீடித்தது. சூழ்நிலை அவருக்கு ஒத்து வராததால் பழையபடி 'மஞ்சரி'யிலேயே சேர்ந்தார். எப்போதும் புகழை அவர் நாடியதில்லை.

அவருக்கு வயது 70க்கு மேல் ஆகிறது. சில காலமாக அவரது உடல்நிலை சரியாக இல்லை. இலக்கிய உலகத்துக்கு நெடுங்காலம் தொண்டு புரிந்து மஞ்சரியின் சிறப்பாசிரியராக இருந்து இப்போது ஓய்வு பெறுகிறார்" (மஞ்சரி, 1972 டிசம்பர்).

தி.ஜ.ர.வின் 50 ஆண்டுக்காலப் பத்திரிகைப் பணியில் அரைப் பகுதி மஞ்சரியிலும், மீதி அரைப்பகுதி ஊழியன், சுதந்திரச் சங்கு, சக்தி உள்ளிட்ட பல பத்திரிகைகளிலும் அமைந்திருக்கிறது. மஞ்சரியில் வெளிவந்த புத்தகச் சுருக்கங்கள் அவரது அடையாளமாகக் கருதப்படுகிறது. அவரது பத்திரிகைப் பணியின் அடையாளமும் அதுவேயாகும்.

### மொழிபெயர்ப்புச் சாதனைகள்

தமிழகத்தில் 1930 களுக்குப் பிறகு அறிவொளியின் வீச்சு நன்றாகப் பரவியது; பல பத்திரிகைகள் வெளிவரத் தொடங்கின. தேசிய விடுதலைப் போராட்டம் வலுப் பெற்றது. ரஷ்ய செல்வாக்கு பரவத் தொடங்கியது. பொதுவுடைமைத் தத்துவம் பரவத் தொடங்கி விட்டது. வங்க இலக்கியங்களின் செல்வாக்கும் பரவத் தொடங்கி விரிவும் பெற்றது. அந்தச் சூழ்நிலையில் மொழிபெயர்ப்பின் தேவை உருவாகி, மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் பெருகின. கா.ஸ்ரீ.ஸ்ரீ. த.நா.கு., த.நா. சேனாபதி போன்றோர் இந்திய மொழி இலக்கியங்களைத் தமிழுக்கு மொழிபெயர்த்தனர். 'போரும் வாழ்க்கையும்' போன்ற நூல்களைத் திருஞானசம்பந்தம், டி.எஸ். சொக்கலிங்கம் போன்றோர் மொழி பெயர்த்தனர். இத்தகைய சூழலில் தி.ஜ.ர.வும் மொழிபெயர்ப்புகளைச் செய்தார். தி.ஜ.ர. செய்த மொழிபெயர்ப்புகளை இங்குக் காணலாம்.

### கூண்டுக்கிளி

வங்க எழுத்தாளர் ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா எழுதிய கூண்டுக்கிளி முதலிய நாடகங்களைச் 'சக்தி'யில் மொழிபெயர்த்து வெளியிட்டார் தி.ஜ.ர., பின்னர் அவை நூலாயின. அவற்றில் கூண்டுக்கிளி, காவலன் தீபம், சவப்பெட்டி, சன்னல், அந்தி விளக்கு என்று ஐந்து நாடகங்கள் அடங்கும்.

ஆழமான உணர்ச்சியும், முற்போக்குக் கருத்துகளும் கொண்ட இந்த ஐந்து நாடகங்களும், தி.ஜ.ர.வின் மொழி பெயர்ப்பு மொழித்திறனுக்கும், உள்ளடக்கத்தேர்வுக்கும் சான்றுகளாய் அமைவன.

மோகன் ஒரு கவிஞன். பணக்காரியான அத்தை, அவனை மிகச் செல்வமாய் வளர்க்கிறாள். வங்கி மூழ்குகிறது. அத்தை பணம் இழந்தாள். வறுமை பிடுங்கித் தின்கிறது. கவிஞனுக்குக் கண் திறக்கிறது. 'சவப் பெட்டி' என்ற மூன்றாவது நாடகத்தில் வரும் அந்த மோகன், அத்தையிடம் இவ்வாறு பேசுகிறான்.

''ஏகாந்தமாய் ஓய்வோடிருந்தேன். உன் பாங்கியிலிருந்து முட்டின்றிப் பணம் கிடைத்தது. அதன் பலனாய்த்தான், ஆத்மாவையும் கடவுளையும் பற்றி, அழகழகாய் என்னால் எழுத முடிந்தது. இதை நான் முன்னே உணராமல் போனேன். பாங்கி முறிந்த நிமிஷத்தில் நான் வாடி விழுந்தேன். என் கவிதையும்

என்னை விட்டகன்றது. இந்தப் பேடித்தனத்தைக் கண்டு கொண்ட அதிர்ச்சியால், என் ஆண்மையுங்கூடப் போய் விட்டது. நான் ஒரு கோழை ஆனேன்... மாயை! மாயை! உன் பணத்தைக் கொண்டு வெறும் மாயைகளை எனக்கு ஊட்டி வளர்த்தாய். முட்டாள்தனமாய் உன்னையே சார்ந்து வாழ்ந்ததை, என் சுதந்திரம் என்றாய்! வைத்திய சாலைகளில் பாஷாணச் சீசாக்களுக்கு விலாசம் ஒட்டுவார்களே அதேபோல, எனக்கு நீ மேதை என்று விலாசமிட்டாய்! இவ்வாறு என்னைப் பொய்யும் வீணுமான கண்ணாடிப் பெட்டியிலே, முகஸ்துதியால் மகிழ்ந்ததொரு கைதியாக வைத்து விட்டாய். உன் பணம்! யார் பணம்? அதை நீ எப்படிப் பெற்றாய்? ஏழை மக்களிடம் சுரண்டிய யாரோ ஒருவன் உனக்கு வைத்துவிட்டுப் போனதுதானே. என் மேதை! யார் மேதை! மேதை என்பது ஒரே ஒருவனுக்கு, ஒரு குடும்பத்துக்கு, ஒரு வகுப்புக்கு மட்டிலுமே சொந்தமாய், ஆத்மஸ்துதியும் சுய நலமுமே குறிக்கோளாய்க் கொண்டதுபோலப் பேசுகிறாயே! நான் வியர்வை சொட்ட உழைக்க வேண்டும். பிறர் உழைப்புதான் எனக்கு ஓய்வு அளித்தது. நான் அவர்களுக்குத் திருப்பிக் கொடுத்தது என்ன?...?'' என்று அவன் புலம்புகிறான்.

தமிழகத்துக்குப் புதுச் சிந்தனைகளைக் கொண்டு வந்த இலக்கியங்களையே தி.ஜ.ர. மொழிபெயர்ப்புக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார் என்பதை மேலே கண்ட பகுதி நமக்குத் தெரிவிக்கிறது.

**அபேத வாதம்**

''பொதுவுடைமைத் திட்டங்களைப் பற்றி, ராஜியத்தில் சர்ச்சைகள் சற்று அதிகரித்திருக்கும் இந்தச் சமயத்தில், ஜனங்கள் உண்மையான பொதுவுடைமைத் தத்துவத்தை உணர்ந்து கொள்வதுடன், பொதுவுடைமையைப் பற்றித் தவறான அபிப்பிராயங்கள் கொள்ளாதும் செய்ய வேண்டியது அவசியமாகும். இந்த மொழி பெயர்ப்பு அந்தத் துறையில் ஓரளவு உதவியாயிருக்கும்'' என்ற நோக்கத்தில் சக்தி காரியாலயத்தால் தி.ஜ.ர.வின் அபேதவாதம் மொழிபெயர்ப்பு வெளியிடப்பட்டது.

இராஜாஜி, சிறையில் இருந்த சகோதர அரசியல் கைதிகளுக்குப் பொதுவுடைமைத் தத்துவங்கள் பற்றிப் பேசிய பிரசங்கங்களின் (Chats behind bars என்ற நூலில் Bolshevism என்ற தலைப்பின் கீழ் வெளியான ஆங்கிலப் பிரசங்கங்கள்) மொழி பெயர்ப்பே இந்நூல் ஆகும்.

பொதுவுடைமைத்தத்துவம் யாது? அதன் இலட்சணம் என்ன? அதை உருவாக்குவதற்குக் கைக் கொள்ள வேண்டிய நெறிகள் யாவை? பொதுவுடைமையால் என்னென்ன பலன்கள் விளையும்? மனித குல வாழ்க்கையில் ஏற்படக்கூடிய மாறுதல்கள் எவை? பொது உடைமை நிருவாகம் எவ்வாறு நடைபெறும்? என்ற கேள்விகளுக் கெல்லாம் இந்நூலில் பதில்கள் கிடைக்கும்.

தி.ஜ.ர.வின் சரளமான மொழி பெயர்ப்பு, புதிய தத்துவங்களை அறிமுகம் செய்யும் நோக்கத்தில் அமைந்துள்ளது.

***அட்லாண்டிக் சாசனம்(1944)***

1941ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் அமெரிக்க அதிபர் — ரூஸ்வெல்ட்டும், பிரித்தானிய அதிபர் சர்ச்சிலும், அட்லாண்டிக் கடலில் இரண்டு கப்பல்களில் சந்தித்தார்கள். எட்டு அம்சங்கள் கொண்ட போர் தொடர்பான ஒரு சாசனத்தில் கையெழுத்திட்டார்கள். ஆகஸ்ட் மாதம் 14ஆம் தேதி, பிரித்தானிய உதவிப் பிரதமமந்திரி ஆட்லி, வானொலி மூலம் உலகத்துக்கு அதை அறிவித்தார். அதுவே "அட்லாண்டிக் சாசனம்" என்பதாகும்.

சர்வாதிகார சக்திகள் கொண்ட அரசுகளின் கையில் உலகம் இருப்பதையும் இந்த அரசுகளின் கையில் உலகையே அழிக்கும் ஆயுதங்கள் இருப்பதையும் உணர்ந்த எச்.ஜி.வெல்ஸ் போன்ற அறிஞர்கள், உலகெங்கும் இருக்கிற மனிதர்களின் மனித உரிமைகளை மதிக்கும் வண்ணம் "எதற்காகப் போர்" என்ற போர் லட்சியத்தை எல்லா நாடுகளும் சேர்ந்து உருவாக்கிப் பிரகடனப்படுத்த வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். இதைப் பல தரப்பாரும் வற்புறுத்தினர். அதன் விளைவாய் இரண்டாம் உலகப்போர் முடியும் தறுவாயில் வெளியானது இந்த அட்லாண்டிக் சாசனம். இந்தச் சாசனம் வெற்றிகரமாகச் செயல்படுகிறதா என்பதை, இந்தச் சாசனம் வெளியாகி இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு உலக நிலைமையைக் கண்டு ஆராய்ந்து சொல்வதாக இந்த நூல் உள்ளது. இதில் மொழிபெயர்ப்புச் சங்கதிகளே முழுமையாய் இருந்தாலும் நடுநடுவே தி.ஜ.ர.வின் விளக்கங்கள் அருமையாய் இருக்கின்றன என்பதால் இதை மொழிபெயர்ப்பு நூலாகக் கொள்ளாது, அரசியல் கட்டுரை நூலாகவே கொள்ளலாம்.

இரண்டாம் உலகப்போர் தீர்ந்ததும் நிரந்தரமான சமாதானத்தை உலகத்தில் நிலை நாட்ட என்ன வழி? அந்தச் சாசனத்தால் அது நிறைவேறும் என்றார்கள். ஆனால் அந்தச் சாசனத்தால் உலக

சமாதானம் நிரந்தரமாக ஏற்படுமா? என்பதைப் பற்றி ஆராயும் நூலாக இது உள்ளது.

**ஒரே உலகம் (1945)**

வெண்டல் வில்கீ என்ற புகழ் பெற்ற அமெரிக்க எழுத்தாளர் எழுதியது ஒரே உலகம் என்ற நூல். சுதந்திர ஆர்வம் கொண்ட உலக மக்களின் அன்பையெல்லாம் கொள்ளை கொண்டவர். அடிமையாய் இருக்கும் உலக நாடுகள் அனைத்தும் விடுதலை பெற்று ஐக்கியமாய் உலக சமாதானத்துக்குப் பாடுபட்டால்தான், உலகத்துக்கு விடுதலை கிடைக்கும் என்பது வில்கியின் சிந்தனை. இதை இரண்டாம் உலகப் போர் முடிவடையும் முன்னே செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி னார். இதைத் தருக்க ரீதியாய், ஆதாரத்தோடு இந்தப் புத்தகத்தில் அவர் கூறியிருக்கிறார். இந்நூல் பல நாடுகளின் சித்திரத்தை நமக்குள் வரைகிறது. உலக ஒருமைப்பாட்டை நமக்குள் சிந்தனைபூர்வமாக எழுப்புகிறது.

தி.ஜ.ர. இந்நூலைத் தெளிந்த தமிழில் அழகாக மொழி பெயர்த்துள்ளார். கருத்துச் சிறப்புக்காக இந்நூலை மொழி பெயர்ப்புக்குத் தி.ஜ.ர. தேர்ந்திருக்கலாம். திருச்சி, புத்தக நிலையம் இம்மொழிபெயர்ப்பை 1945இல் வெளியிட்டது.

***லெனின் சரித்திரக் கதைகள்(1946)***

ருஷ்யாவில் பொது உடைமைப் புரட்சியை நடத்தி வெற்றிகண்ட தலைவர் லெனின். அவரது வாழ்க்கைச் சரிதத்தை வழக்கமான பாணியில் எழுதாமல், அழகான, ருசிகரமான, பல சிறுகதைகள் போல எழுதப்பட்டிருக்கிறது மூல நூலாசிரியனால். அதனால் இந்நூலைப் படிக்கும்போது ஓர் இலக்கியச் சுவை ஏற்படுகிறது. சம்பிரதாயமான முறையில் இது தொடங்கவில்லை, செல்லவுமில்லை, முடியவுமில்லை. குழந்தைகளோடு குழந்தையாய், பனிக்கட்டி மீது சறுக்கி விளையாடும் லெனின்தான், முதல்முதலாக நமக்கு அறிமுகம் ஆகிறார் நூலில். பிறகு பாட்டாளி மக்களிடம் கருணை கொண்ட பொதுச் சேவைக் குறிப்பு ஒன்று. வனவாசத்தில் கிராம மக்களை யெல்லாம் புரட்சிக்கு முன்குறியாக ஒன்று கூட்டி மே விழாக் கொண்டாடும் லெனின். அப்புறம் ரகசிய வாழ்வு. ரகசியப் பிரசாரம், அதிகாரிகளிடம் தப்பித்துக் கொள்ளும் நிகழ்ச்சிகள். பின்பு புரட்சி. புரட்சிக்குப் பிறகு, அபூர்வமான முறையில் கண்டிப்பான முறையில் நிருவாகம், நாட்டைப் புனர்நிர்மாணம் செய்யும் ஆக்க வேலைகள்.

தேசத்துக்கே இணையற்ற தலைவனாய்த் தலைமை பூண்டும், தொழிலாளரோடு தொழிலாளராய் வேலை செய்யும் லெனின். எளிய வாழ்வு, மறைவு, மறைவுக்குப் பின்னும் மக்களின் மனத்திலே குடி கொண்ட மாண்பு. இத்தனை அம்சங்களையும் சுவை மிகுந்த முறையில், சிறிது சிறிது பரிமாறும் அழகிய கதைகள்.

இந்நூலை, இந்தியாவில் செல்வாக்குப் பெற்ற மனிதராகக் காந்தி இருப்பதைப் போலவே, ருஷ்யாவில் லெனின் என்ற எண்ணத்திலேயே மொழி பெயர்த்திருக்கிறார் தி.ஜ.ர. பொது உடைமைத் தத்துவத்தில் அபிமானம் கொண்டவர் தி.ஜ.ர. என்பதனாலே மொழி பெயர்ப்பு சுவையாக அமைந்திருக்கிறது. எளிய வாக்கியங்கள், எளிய சொற்கள்.

"ருஷ்யாவில் வெகு தொலைவிலே ஸைபீரியா என்ற பிரதேசம் இருக்கிறது. அங்கே ஷீஸ் என்ற ஆறு. அந்த ஆற்றங்கரையில் ஷீஷென்ங்கோயி என்ற கிராமம் இருக்கிறது." இப்படித்தான் நூல் முழுமையும் எளிமையான வாக்கியங்களுடன் அமைந்திருக்கிறது.

## புது நாள் (1955)

ருஷ்ய எழுத்தாளர் மிஹேல் ஜோ ஷென்கோ எழுதிய ரஷ்ய மொழி நாவலை ஆங்கிலம் வழி தமிழில் தி.ஜ.ர. மொழிபெயர்த்து 1955இல் பழனியப்பா பிரதர்ஸ் மூலம் வெளியிட்டுள்ளார். ஹிந்துஸ்தான் பத்திரிகையில் தி.ஜ.ர. ஆசிரியராக இருந்த காலத்தில் அதில் தொடர்ச்சியாக, இந்நாவலை மொழிபெயர்த்து வெளியிட்டு வந்ததாகத் தெரிவிக்கிறார்.

மூல நூல் ஆசிரியரைப் பற்றிக் குறிப்பிடும் தி.ஜ.ர. அவர் மிகவும் பிரபலமானவர் என்றும், ஆரம்பத்தில் நகைச்சுவை நிறைந்த சிறு கதைகள் அல்லது நடைச் சித்திரங்கள் எழுதி வந்தார் என்றும் குறிப்பிடுகிறார். சோவியத் ருஷ்யாவின் வாழ்க்கையிலே சில அம்சங்களை இவர் கேலி செய்வார். சோவியத் அதிகாரிகளைக் கிண்டல் செய்வார். இவருடைய நகைச்சுவை அலாதி ரகம், விசித்திரமாயிருக்கும். அடக்கமான புன்சிரிப்பை எழுப்பும். கம்யுனிஸ்ட் ருஷியாவில் நகைச்சுவையேயில்லை என்பது வெறும் புரளி என்பதற்கு இவருடைய எழுத்துகளே அத்தாட்சி என்கிறார் தி.ஜ.ர..

இப்புதுநாள் நாவல், ருஷியாவில் நடந்த கம்யுனிஸ்ட் புரட்சியையே பொருளாகக் கொண்டது. புரட்சியில் தொடர்புடைய ஒரு பெண் தன் வாழ்க்கை வரலாற்றைச் சொல்வது போல இ ஆசிரியர் எழுதியிருக்கிறார்.

"தோழி காஸ்யனவா" என்பவளின் வாழ்க்கை வரலாறே இது. புரட்சிக்கு முந்தைய வாழ்க்கையனுபவம். ஒரு குடும்பத்தில் வேலைக்காரியாகச் சேர்ந்த இந்த அனாதைப் பெண், தொழிலாளர் இயக்கத்தில் சேர்ந்து, போல்ஷ்விக் கட்சியில் சேர்ந்து புரட்சியில் ஈடுபட்ட கதை இது. போர் முனையிலும், உளவுப் பணியிலும் ஈடுபட்டுழைத்த வரலாறு மிகச் சுவையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. புரட்சிக்கு முந்தைய வாழ்க்கையில் ஒரு மிராசுதார் வீட்டிலும் ஒரு சீமாட்டி வீட்டிலும் இவள் வாழ்ந்த வாழ்க்கையும் அந்த அனுபவங்களும் மிக நன்றாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. புரட்சிக்குத் தூண்டும் அனுபவங்களாகவே அவை உள்ளன. அதே உணர்ச்சியைத் தரும் விதத்தில் அவை பதிவாகி, மொழிபெயர்ப்பும் அடைந்துள்ளது. அவள், புரட்சிப்படை வீரர்களுக்கு உதவி செய்ய ரகசியமாய்ச் சென்று அதில் பெற்ற அனுபவம் கதையின் மையமாய் அமைகிறது. அதே சமயம் அவளது எதிரியான வெண்படையினர் பலர் இவளிடம் காட்டிய பெருந்தன்மையான அன்பும், சமயம்வாய்க்கும்போதெல்லாம் காட்டப்படுவது சிறப்பு. இந்தப் பெண் அன்னா காஸ்யனவா துன்பத்திலும், இன்பத்திலும் எப்போதும் கொள்கையை விடாமல் பிடித்துக் கொண்டிருப்பது இன்றைய நமக்கும் கூடத் தேவைப்படும் பாடமாகும். உறுதி குன்றாப் பெண், விடா முயற்சி. சூழ்நிலைகளைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுதல், வேண்டும்போது பற்றி, வேண்டாதபோது உதறித் தள்ளும் காரிய சித்திக்குப் பயன்படும் போர்த்தந்திர முறை, இப்படிப்பல அம்சங்களை இந்நாவலின் கதாநாயகி கையாளுகிறாள். அவளது காதல், கல்யாண விவகாரங்களும் கதையில் இடை இடையே வருகின்றன. அதேபோல ருஷ்யாவில் புரட்சிக்கு முந்தைய காலச் சீமாட்டிகளின், வியாபாரிகளின் உல்லாச வாழ்க்கை நன்றாக விவரிக்கப்பட்டிருக்கின்றன.

வேற்றுமொழி நாவல் என்ற எண்ணத்தைக் கதைக் களம், பகைப்புலம் மட்டுமே அளிக்கின்றன. தவிர, எளிமையான சொற்றொடர்களால், உணர்ச்சி ததும்பும் சொற்களால் இந்நாவல் தமிழுக்குத் தரப்பட்டிருக்கிறது.

### *அரசியல் நிர்ணய சபை (1947)*

1947இல் வெளியான அரசியல் நிர்ணய சபை என்ற நூல், ஜவஹர்லால் நேரு அரசியல் நிர்ணய சபை நிமித்தமாகக் கொண்டு பல்வேறு சமயங்களில் ஆற்றிய உரைகளின் தொகுப்பு ஆகும். ஒரு

பொருளை நோக்கமாகக் கொண்டு, தொகுக்கப்பட்ட பல்வேறு உரைகளின் இணைப்பாக இது உள்ளது.

இந்தியாவின் விடுதலைக்குப் பிறகு சுதந்திர இந்தியாவின் அரசியல் எப்படியிருக்க வேண்டும் என்பது குறித்து முடிவெடுக்க ஏற்பட்ட அரசியல் நிர்ணய சபை தோன்றியபோது இருந்த சூழலோடு அதை விளக்குவதே இந்நூல்.

இந்தியா உலகத்தைக் கவனிக்கிறது, காங்கிரசும் யுத்தமும், இந்தியாவின் கோரிக்கையும் இங்கிலாந்தின் பதிலும், அரசியல் நிர்ணய சபை, வழி பிரியும் கட்டம், ஜவஹர்லால் நேரு அவர்களின் வானொலிச் செய்தி, பிரிட்டிஷ் மந்திரிகளின் தூது கோஷ்டித் திட்டமும் பிரதிநிதித்துவ அட்டவணையும், சுதந்திரக் குடியரசுத் தீர்மானம் என்னும் எட்டு அத்தியாயங்களாய் இந்நூல் அமைந்துள்ளது.

1939 (ஜனவரி 25) (நவம்பர் 6) (நவம்பர் 15); 1940 (ஜனவரி6) (மார்ச்சு 8) (ஆகஸ்ட் 10); 1946 (செப்டம்பர் 8) ஆகிய இடைவெளி மிக்க ஏழு ஆண்டுகளில் நேரு ஆற்றிய அரசியல் நிர்ணய சபை பற்றிய கருத்துகள் அடங்கிய உரைகள் இதில் மொழி பெயர்த்துத் தரப்பட்டுள்ளன. தவிர, அரசியல் நிர்ணய சபை உருவாவதற்கு முகாந்திரம் போல இந்தியாவிற்கு வருகை புரிந்த, பிரித்தானிய அமைச்சர்கள் அடங்கிய தூதுக் குழுவினர் பற்றிய விவர அறிக்கையும், 1946 டிசம்பர் 9ஆம் தேதி கூடிய அரசியல் நிர்ணய சபை விவாதித்து 1947 ஜனவரி 2 அல்லது 3ஆம் தேதி ஏகமனதாக நிறைவேற்றிய சுதந்திரக் குடியரசுத் தீர்மானமும் பிற்சேர்க்கையாக இந்நூலில் அமைந்துள்ளன. இவை நூலின் நோக்கத்தை முழுமையுறச் செய்கின்றன.

அரசியல் நிர்ணய சபை எந்தச் சூழ்நிலையில் உருவானது. அதை உருவாக்குவதற்கு வெளியிலும் உள்ளேயும் காங்கிரஸ் எப்படி சிரமப்பட்டது, அதில் ஜவஹர்லால் பங்கு எத்தகையது என்பதை அறிய இந்நூல் பயன்படும். நேருவை மைய அச்சாகக் கொண்டு சுழல்கிறது இந்நூற்பொருள். அரசியல் நிர்ணய சபையின் உருவாக்கத்தைத் தடை செய்வதில் வெளியாரின் பங்கு சொல்லப் பட்ட அளவுக்குக் கூட, அதை உருவாக்க நினைத்த நேரு தவிர்த்த பிறரது பங்கு பேசப்படவில்லை. அதைத் தடுப்பதில் செயல்பட்ட உள் சக்திகளைப் பற்றிய விமர்சனங்கள் தவறாது இடம் பெற்றுள்ளன. ஏதோ, அரசியல்தேவை இந்நூல் எழுவதற்குக் காரணமாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

***அற்புதப் பெண் (1957)***

எழுத்தாளர் வான் வைக் ப்ருக்ஸ் எழுதிய ஹெலன் கெல்லரின் வாழ்க்கை வரலாற்றைத் தமிழில் மொழிபெயர்த்து 1957இல் உமா தேவன் கம்பெனி மூலம் வெளியிட்டார் தி.ஜ.ர.. அந்த நூலே அற்புதப் பெண்.

பிறந்த சில மாதங்களிலே ஹெலன் கெல்லர் குருடும், செவிடும், ஊமையுமானார். இந்த நிலையில் கல்லூரிப் படிப்பு வரையில் படித்துத் தேறினார். உலகத்துப் பெரியோர்களையெல்லாம் சந்தித்தார். எத்தனையோ நாடுகளில் சுற்றி, உலகத்து ஊமை, குருடர், செவிடர்களுக்கெல்லாம் பணிபுரிந்தார். இவரது சாதனைகள் பிரமிக்கத் தக்கவை. இந்தியாவில் நேருவைச் சந்தித்ததைப் பற்றி ஹெலன் கெல்லர் கூறுவது இது.

''கீழ் நாடுகளில் நாற்பதாயிரம் மைல் சுற்றுப் பிராயணம் செய்தபோது, நான் சந்தித்த அத்தனை தலைவர்களிலும் நேருவே என் மனத்தைக் கவர்ந்தார். அவருடைய சிறப்பியல்புகளையும் விசாலமான நெற்றியையும் கண்டு வியப்புறுகிறேன்'' என்று சொன்னார்.

ஸ்பரிச உணர்ச்சியாலும், அதற்கு அடுத்து மோப்பம், சுவை இந்த உணர்ச்சிகளாலுமே ஹெலன் கெல்லரின் உலகம் பெரும்பாலும் உருவாகியிருந்தது. கையைப் பற்றி, அவர் வர்ணித்திருப்பது ஆச்சர்யமாக இருக்கிறது. கண்ணும் காதும் மற்றவருக்கு எப்படி உபயோகப்படுகின்றனவோ அப்படியெல்லாம் கை அவருக்கு உபயோகப்பட்டதாம். தன்னைச் சந்திக்கிறவர்களின் முகபாவங் களையும், கை ஜாடைகளையும் தன் கையைக் கொண்டே கண்டுபிடித்துவிடுவாராம். எவர் குரலையும் அவர் கேட்டதேயில்லை. அப்படியிருந்தும் பேசுவோரின் தொண்டையிலே இரண்டு மூன்று இடங்களை விரல்களால் தொட்டுப்பார்த்து சில விஷயங்களைப் புரிந்து கொள்வாராம். மற்றவரின் முக ஜாடைகளைக் கொண்டு நாம் அறிவதை விட அதிகமாக, அவர்களுடைய கைகளைக் கொண்டு அவர்களின் குணாதிசயங்களை இவர் கண்டுபிடித்துவிடுவாராம்.

''ஒரு பிஷப்பின் குஷியான கை, ஒரு விகடகவியின் உணர்ச்சியற்ற மந்தமான ஈயக்கை, வீண் ஜம்பம் பேசும் ஒருவனின் கோழைக்கை, அமைதியும் கூச்சமும் கொண்ட ஒருவனுடைய அழுத்தமான இரும்புக்கை, பல வெண்ணெய் வெட்டிச் சிப்பாய்களின் கை இவற்றையெல்லாம் தொட்டுப் பார்த்தே ஹெலன் கெல்லர் சொல்லிவிடுவாராம். தீண்டின உடனே 'கொன்று

விடுமோ என்று எண்ணத்தோன்றிய சில கைகளை அவர் குலுக்கியிருக்கிறார். 'துர்க்குறி கைகள்' என்று அவற்றை அவர் வர்ணிக்கிறார். சிலருடைய கைகள் மிருதுவாய் வழவழப்பாக உருண்டு திரண்டிருந்தன உழைத்தேயறியாத செல்வர்களின் கைகள் அவை. வளர்ந்து பக்குவப்படாத ஒரு குழப்பந்தான் இவற்றிலே தென்பட்டது. சிலருடைய விரல் நுனிகளைத் தொடுவதற்கு முன்னே பின்வாங்கிவிடும் அவை மிகவும் மரியாதையான கனவான்களின் கைகள். மார்க்டிவைனின் கைகள் ஷணச்சித்தமும் ஷணப் பித்தமுமான போக்கைக் காட்டுமாம். குறும்புத்தனம் நிறைந்திருக்குமாம். அவற்றைப் பிடித்து விட்டாலோ அனுதாபமும் ஆதரவும் காட்டத் தொடங்கி விடுமாம். நிசப்தமான இருளிலே ஹெலன் வாழ்ந்தார். ஆயினும் சொந்தக் கையைக் கொண்டே அழகையும், வலிமையையும், பலவீனத்தையும் விநோதத்தையும் உணர்ந்து கொள்ள முடிந்தது. (அற்புதப் பெண்).

இவை போன்ற சுவையான விவரங்கள் கொண்ட, வாழ்க்கை வரலாற்றை அழகுத் தமிழில் தி.ஜ.ர. மொழிபெயர்த்துத் தந்தார்.

### காந்தி வாழ்க்கை (1962)

"துன்பமும் துயரமும் இன்னலும் மிடிமையும் நம் தனி வாழ்வில் நிறைந்து வாட்டிய காலத்திலே காந்தி தோன்றினார். துன்பங்கள் எத்தனைதான் நம்மைக் கவிந்திருந்தாலும், அவற்றுக்கு நடுவேயும் மனத்திலே ஒரு பூரிப்பும் மகிழ்ச்சியுமாய் வாழ்விலே ஒரு நிறைவைக் காந்தி பரப்பிய அருள் ஒளியிலே மூழ்கி நாம் அனுபவித்தோம். 'ஆத்ம சக்தி' என்பதை நாம் அறியோம்; அது என்னவென்றே புரியவும் இல்லை. ஆயினும், காந்தியைக் காணும்போது, அதை நம்பத்தான் தோன்றுகிறது. அவருடைய வாழ்வு. செயல் நிறைந்த வாழ்வு, தவ வாழ்வு, அற வாழ்வு, அன்பு வாழ்வு, அற்புத ஸத்திய வாழ்வு" (காந்தி வாழ்க்கை, முன்னுரை)

என்று தி.ஜ.ர. வால் புகழ்ந்து போற்றப்பட்டவர் காந்தியடிகள். அவரது வாழ்க்கை வரலாற்று நூலை எழுதிய லூயி ஃபிஷர், காந்தியடிகள் பற்றியே பல நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் மிகச் சிறந்த நிறைவு பெற்ற வரலாறு இது என்று தி.ஜ.ர. கருதி இந்த நூலை மொழிபெயர்த்துள்ளார்.

தி.ஜ.ர.வுக்குக் காந்தி, பாரதி ஆகியோர் பேரில் அளவில்லாத பிடிப்பு உண்டு. பெரிய நிலையில், காந்தி வாழ்க்கையை 735 பக்கங்களில் இப்படி மொழி பெயர்த்தார். பாரதியார் வாழ்க்கை

வரலாற்றைப் 'புதுமைக்கவி பாரதியார்' என்று எழுதினார். இவர்களை ஆதர்சமாகக் கொண்டு, குழந்தைகள் வளர வேண்டுமென, பாப்பாவுக்கு பாரதி, பாப்பாவுக்கு காந்தி, பாப்பாவுக்கு காந்தி கதைகள் எனப் பல நூல்களை எழுதினார்.

காந்தி வாழ்க்கை எனும் இந்த நூலின் மொழிபெயர்ப்பைப் பற்றிச் சொல்லும்போது தி.ஜ.ர. இப்படிச் சொல்கிறார் "மொழிபெயர்ப்பைப் பற்றி உபசார வார்த்தை ஏதும் சொல்ல எனக்கு விருப்பம் இல்லை. மொழிபெயர்ப்பு எப்படி இருந்தாலும் சரி, அதை எண்ணாமல், அந்தப் புண்ணிய புருஷரின் இந்த வரலாற்றைப் படியுங்கள்; காந்தி வாழ்வின் முழுப் பொருளையும், தத்துவத்தையும் நுட்பத்தையும் காணும் புதுக்கண் பெறுவீர்கள் இது நிச்சயம்" என்று வாசகர்களுக்குச் சொல்லுகிறார். (காந்தி வாழ்க்கை, முன்னுரை)

நூல் ஆசிரியர் லூயி ஃபிஷர் காந்தியடிகளுடன் நேரிடையாகப் பழகிக் கிடைத்த அனுபவங்கள் நூலாகி இருக்கின்றன. காந்தியுடன் பல ஆண்டுகள் இடைவெளிகளுடன் பழகிப் பெற்ற அனுபவங்கள், முதல் தரமானவை. காந்தியுடன்,பல ஊர்களில் தங்கிப் பெற்ற அனுபவம், அவருடன் காலை, மாலை உலாவப் போகும் போது கிடைத்த அனுபவம், பல பொருள்களைப் பற்றிப் பல சந்தர்ப்பங்களில் பேசிப் பெற்ற அனுபவம், காந்தியின் நண்பர்களான பல தேசத் தலைவர்களுடன் நெருங்கிப் பெற்ற அனுபவம் முதலியவை, நூலின் நம்பகத்தன்மையைக் கூடுதலாக்கியுள்ளன. நூலைக் காந்தியின் இறப்பு நிகழ்ச்சியிலிருந்து தொடங்கிப் பல விஷயங்களையும் சொல்லி, அதே நிகழ்ச்சியையே முடிவாகவும் கூறி நிறைவு செய்திருப்பது லூயி ஃபிஷரின் திறன் மிக்க எழுத்தாற்றலை நிரூபிக்கிறது. காந்தியைப் பற்றி ஆயிரக்கணக்கில் நூல்கள் வெளி வந்திருப்பினும், காந்தியைப் பற்றித் திரைப்படம் எடுத்த அட்டன்பரோ, இந்த நூலையே ஆதாரமாக எடுத்துக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

மாபெரும் மனிதர் பற்றிய வரலாற்றை, முக்கியமான எழுத்தாளர் எழுதியதை மொழி பெயர்க்கும் போது தி.ஜ.ர. மிகக் கவனமாக இருந்திருக்கிறார். தம் மொழி பெயர்ப்பில், மூல ஆசிரியன் சொல்ல வந்தது வெளிப்படாமல் போய்விடுமோ என்று அஞ்சி, அசசத்துடன், மிகக் கவனத்துடன் மொழிபெயர்த்திருக்கிறார். 'மௌன வருஷம்' என்ற அத்தியாயத்தில் வரும் மொழி பெயர்ப்புப் பகுதி பின் வருவது. இது தி.ஜ.ர.வின் மொழி நடையையும், அவரது கவனமாக மொழி பெயர்க்கும் ஆற்றலையும் காட்ட வல்லது.

..."தர்க்க வாதத்தைக் கொண்டு மாத்திரம் மனித குலம் வாழ முடியாது. அது வாழக் கவிதையும் தேவைப்படுகிறது. புலன் உணர்வு (ஸென்ஸரி பெர்ஸெப்ஷன்) பகுத்தறியும் சிந்தனை இந்த இரண்டின் களத்தையும் விட்டு அடிக்கடி காந்தி விலகுவார்; நம்பிக்கை, இயற்கை இச்சை, உள்ளுணர்வு, அன்பு (ஃபெயித், இன்ஸ்டிங்ட், இன்ட்யுவிஷன், லவ்) இவற்றின் களத்திலே புகுந்து விடுவார். ஆயினும், மர்மமான அருள் வாக்கு, அற்புதம், தெய்வ தர்சனம், வருவதுரைத்தல் (மிஸ்டிக் மெஸ்ஸேஜ், மிரக்கிள், ஹல்லூஸிநேஷன், ப்ராஃபெஸி) இன்னும் இவைபோல் காரணங்காண முடியாது மனமும் மெய்யும் காட்டும் பிற தோற்றங்கள். இவை பற்றிய வானவெளியிலே அவர் அலைந்து திரிந்ததேயில்லை." (காந்தி வாழ்க்கை)

எங்காவது தம் மொழிபெயர்ப்பு தவறாகி விடுமோ! என்ற எண்ணத்தில் அப்படித் தவறானாலும் வாசகன் மூல நூலாசிரியரின் கருத்தை அறிய மூல மொழிச் சொல்லையும் இடையிடையே தருவதைத் தி.ஜ.ர.வின் சிறப்புக்குரிய நடவடிக்கையாகக் கருதலாம்.

**முடிவுரை**

பத்திரிகைப் பணிகளைப் பொறுத்தவரை, ஊழியன் இதழில் தி.ஜ.ர. எழுதிய கட்டுரைகள், இலக்கிய ரீதியாக, வாசகர்களிடம் பரந்துபட்ட அறிவுத் தேடலைக் கொடுத்திருக்கும். கட்டுரை என்ற இலக்கியவகைமையைத் தமிழில் நிலைநிறுத்துவதற்கு அக்கட்டுரைகள் பயன்பட்டிருக்கும். சுதந்திரச் சங்கு - வில் எழுதிய கதைகளும் கட்டுரைகளும், தேசிய இயக்கம் நன்கு பரவி, காந்திய வழியில் தேசம் விடுதலை பெறுவதற்கு உதவக் கூடியவையாகும். சக்தியில் எழுதப் பட்ட கட்டுரைகளும் மற்றவையும், இலக்கியத்திலும், கலையிலும், தேசிய வாழ்விலும் புதிய புதிய ஒளிகளைப் பாய்ச்சியவையாகும். இலக்கியத்தில் முற்போக்கு, கலையில் சமகாலத்தன்மை, தேசிய வாழ்வில் காந்தியின் தலைமை அல்லது வழி ஆகியவற்றை வற்புறுத்தியவையாகும். மஞ்சரியில், பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. கலை, அறிவு, அறிவியல், அரசியல், இலக்கியச் செல்வங்கள் - தேர்ந்தெடுக்கப் பட்டவைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவைகள் - என்ற தன்மையில் தமிழ் மண்ணுக்குப் பல மொழிகளிலிருந்தும் கொண்டு வரப்பட்டன. தமிழில் இத்தகு பணியை அரை நூற்றாண்டுக்கும் மேலாக, தொடர்ந்து அமைதியாகச் செயல்மட்டுமே நோக்கமாகக் கொண்டு செய்தவர் தி.ஜ.ர. காலத்தில் தி.ஜ.ர. மட்டுமே என்று சொல்லலாம்.

மொழிபெயர்ப்புப் பணி பத்திரிகைப் பணியின் அங்கமாக ஆரம்பித்து, தனியாக வளர்ந்து, இத்தனை புத்தகங்களாக உருப்பெற்றுவிட்டன. முக்கியமான புத்தகங்களான காந்தி வாழ்க்கை, ஒரே உலகம் மொழிபெயர்ப்புகள் சமுதாயத்தில் நல்ல பலனைக் கண்ணுக்குத் தெரியாமல் கொடுத்திருக்கக் கூடியவை.

---

# 5

# குழந்தை இலக்கியப் பங்களிப்பு

குழந்தை இலக்கியத்துக்கு அதன் தொடக்கக் காலத்தில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, தி.ஜ.ர. முதலானோர் ஆற்றிய பெருந்தொண்டால் தமிழின் குழந்தை இலக்கிய முன்னோடிகளாய் அவர்கள் கருதப்படுகின்றனர். பாப்பா பத்திரிகையில் ஆசிரியராக இருந்தபோதும், சக்தி இதழில் ஆசிரியராக இருந்தபோதும், வி.வி. சடகோபன் நடத்திய 'தியாகபாரதி' என்ற சிறுவர் இதழில் ஆலோசகராக இருந்தபோதும், மஞ்சரி இதழில் பணி செய்த போதும் தி.ஜ.ர. குழந்தை இலக்கியத்துக்குத் தொடர்ந்து பணி செய்து வந்திருக்கிறார். அவரது சிறுவர் இலக்கியச் சேவையைப் பாராட்டிக் குழந்தை எழுத்தாளர் சங்கம் 1959இல் நடத்திய குழந்தை எழுத்தாளர் இலக்கிய மாநாட்டில் தி.ஜ.ர.வுக்குக் கேடயம் வழங்கிச் சிறப்பித்தது.

1940 முதல் 1946 வரை சக்தி இதழில் பணிபுரிந்தபோது அதில் பாலர் பகுதியில் பாலன், நீலா என்ற புனைபெயர்களில் குழந்தை களுக்கான கதைப் பாடல்களை எழுதி வந்தார். அதில் டால்ஸ்டாயின் குழந்தைகள் அறிவு என்ற நூலையும் மொழிபெயர்த்து வெளியிட்டு வந்தார். தவிர சக்தியின் சகோதர பத்திரிகையான பாப்பா என்ற குழந்தைகளின் பத்திரிகைப் பொறுப்பையும் அவர் கவனித்து வந்தார். அப்போது தான் அவரது கவனம் குழந்தைகளின் பக்கம் முழுவதுமாகத் திரும்பியிருக்க வேண்டும்.

1945ஆம் ஆண்டு தி.ஜ.ர. தயாரித்த பாப்பா தீபாவளி மலரைச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார்கள். இம்மலரில் 20 பக்கங்களில் ஒரு சித்திர ராமாயணம் வெளியானதாம். அதில் ராமாயணக் கதையை தி.ஜ.ர. சுருக்கமாகவும் சுவையாகவும் எழுதியிருந்தாராம். (ப.2, குழந்தை இலக்கிய முன்னோடி - தி.ஜ.ர.)

தி.ஜ.ர.வின் இலக்கிய வாழ்க்கையின் பின்பகுதி குழந்தை களுக்கான இலக்கியத்தைப் படைப்பதிலேயே கழிந்தது. குழந்தை இலக்கிய எழுத்தாளர் என்றே அவர் கொண்டாடப்படும் அளவுக்கு அது சென்றது. அவர் குழந்தை இலக்கியம் பற்றித் தெரிவித்த கருத்து இது.

"குழந்தை இலக்கியம் என்றால் அது என்னவோ கிள்ளுக்கீரை என்ற அலட்சியம் சில பேருக்கு இருக்கிறது. பெரியவர்களுக்கான இலக்கியங்களைவிடக் குழந்தைகளுக்கான இலக்கியம் படைப்பது தான் பெரிதும் சிரமம். குழந்தையைத் தெய்வமாகக் கொண்டாடுவது நம் நாடு. குழந்தைகளின் உலகம் ஒரு தனி உலகம். பேரானந்தம் நிறைந்த ஒரு கற்பனை உலகம் அது. அதிலே எளிதிலே எல்லாப் பெரியவரும் புக முடியாது. அந்த உலகத்திலே செலாவணியாகக் கூடிய இலக்கியத்தைப் படைப்பது மிகவும் கடினமான வேலை.

அவர்களுடைய அறிவும் உணர்ச்சியும் கற்பனையும் இயற்கை யோடு ஒட்டியவை; கள்ளமற்றவை. களங்கமற்ற இன்பம் பயக்கும் இலக்கியமே அவர்களிடம் செலாவணியாகும், செலாவணியாக வேண்டும்." (குழந்தை இலக்கிய வரலாறு; பூவண்ணன் - முன்னுரையில் தி.ஜ.ர.)

இந்தக் கடினமான பணியில் தி.ஜ.ர. உருவாக்கிய குழந்தை இலக்கியப் படைப்புகளை அதன் உள்ளடக்கத்தை வைத்து நான்கு வகையாகப் பிரித்துப் பார்க்கலாம். அறிவியல் கருத்துகளால் ஆன வண்ணாத்திப்பூச்சி, சமர்த்துமைனா ஆகிய நூல்களை அறிவியல் நூல்களாகவும் பாப்பாவுக்குப் பாரதி, பாப்பாவுக்குக் காந்தி, பாப்பாவுக்குக் காந்திகதைகள் ஆகியவற்றைக் குழந்தைகளுக்கான வரலாற்று நூல்களாகவும் கருதலாம். குழந்தைகளுக்கு எப்போதும் களிப்பூட்டும் கதைகள் அடங்கிய நூல்களாக, ரோஜாப் பெண், அலமுவின் அதிசய உலகம், குழந்தைகள் அறிவு ஆகியவற்றைச் சேர்க்கலாம். குழந்தைகளின் கவனத்தை ஈர்க்கும் பாடல்களை நான்காவதாய்க் குறிப்பிடலாம். ரோஜாப் பெண் நூலில் உள்ள பாடல்களும் சக்தியில் பாலர் பகுதியில் நீலா, பாலன் ஆகிய புனை பெயர்களில் எழுதிய பாடல்களும் இவ்வகையில் அடங்கும். இனி அவற்றைச் சற்று விரிவாகப் பார்க்கலாம்.

***அறிவியல் நூல்கள்***

'பியரி காஸ்டர்' என்ற பிரெஞ்சு எழுத்தாளர் எழுதிய சிறுவர் களுக்கான கதைகளை வழிகாட்டியாகக் கொண்டு, கண்ணன் பத்திரிகையில் எழுதிய கதைகளில் அறிவியல் கருத்துகள் உள்ளன. இத்தகு கதைகளில் விலங்கு, பறவைகளை நேரில் பார்த்தறிந்த விவரங்களையும், நம்பத் தகுந்த நூல்களில் பெற்ற விவரங்களையும் பயன்படுத்தியிருப்பதாகத் தி.ஜ.ர. எழுதுகிறார்.

"வண்ணாத்திப் பூச்சி நூலில் கதையை வண்ணத்துப் பூச்சியே சொல்கிறது. பூச்சி பேசுமோ? பேசாது. உண்மையிலேயே பேசாது. ஆனால் இது கதைதானே. கதையிலே எல்லாம் பேசும். ஆடு, மாடு, கோழி, பூனை, புலி எல்லாம் பேசும். இது உங்களுக்குத் தெரியும். இந்த வண்ணாத்திப் பூச்சியும் பேசுகிறது. சிறுகதைதான். வண்ணாத்திப் பூச்சியின் பேச்சுதான் கதை. விஷயம் அத்தனையும் உண்மை. இனி கதையைக் கேளுங்கள்" என்று வண்ணாத்திப் பூச்சி முன்னுரையில் தி.ஜ.ர. கூறுகிறார். இது அறிவியல் உண்மைகளைப் பற்றிப் பேசும் நூலாதலால் எது உண்மை, எது கற்பனை என்று குழந்தைகளுக்கு விளக்கிவிட்டுக் கதையைச் சொல்லத் தொடங்குகிறார். குழந்தைகளுக்குச் சிறு சந்தேகமும் வந்துவிடக் கூடாது என்ற கவனம் குழந்தை எழுத்தாளர்க்குத் தேவை என்பதைத் தி.ஜ.ர. புரிந்திருப்பது தெரிகிறது.

**சமர்த்து மைனா**

'சமர்த்து மைனா'வில் கட்டுரைகள், கதைகளைக் காட்டிலும் சுவையானவை, ஒவ்வொரு விலங்கையும் பறவையையும் அறிமுகப்படுத்தும் நேர்த்தியும், அவற்றைப் பற்றிய அறிவியல் உண்மைகளை வெளிப்படுத்த அமைக்கும் நிகழ்ச்சிகளின் சிறப்பும் படித்து இன்புறத்தக்கவை. சமர்த்து மைனா நூலில் உள்ள குயில் கட்டுரையில் குழந்தைகளுக்கு ஏற்பக் கதை சொல்லுவது, சந்தேகமறக் குழந்தைகளுக்கு விளக்குதல் ஆகிய திறன்கள் இருப்பதை, இதை ஆராய்ந்த பூவண்ணன் சொற்களிலேயே காணலாம்.

"பல பறவைகளின் கூடுகளில் குயில் முட்டையிடும் என்று பொதுவாகக் கலைக் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

'குழந்தைகள் நல்ல அறிவுடையவர்கள், எதையும் நன்றாக அறிந்து கொள்ளும் ஆவலில் துருவித் துருவிக் கேள்விகள் கேட்பார்கள். அவர்களிடம், 'காக்கையின் கூட்டினருகே ஆண் குயில் சென்றதும் காகங்கள் தமது எரிச்சலில் முட்டைகளையும் கூட்டையும் மறந்து அதைத் துரத்தி விடும். அச்சமயம் பார்த்து பெண் குயில் காக்கையின் கூட்டில் முட்டையிடும்" என்று தமிழ்க் கலைக் களஞ்சியத்தில் இருப்பதை அப்படியே சொன்னால் ஒப்புக் கொள்ளமாட்டார்கள்.

காக்கை நான்கு முட்டைகளை இட்டுள்ளது. புதிதாகப் பெண் குயில் ஒரு முட்டையிட்டால் கூட்டில் ஐந்து முட்டைகள் இருக்குமே. இதைக் கூடவா காக்கை புரிந்து கொள்ளாது என்று நிச்சயம்

கேட்பார்கள். இந்த ஐயத்தைப் போக்கும் வகையில் கட்டுரையை அமைக்கிறார் தி.ஜ.ர.

கள்ளிக் குருவிகள் (அல்லது காக்கைகள்) தம் கூட்டருகே வந்த ஆண் குயிலை விரட்டிச் செல்கின்றன. அப்புறம் நடந்தது என்ன?

இப்போது கூட்டிலே முட்டைகள் மட்டும் இருந்தன. காவல் எதுவும் இல்லை. இந்தச் சமயம் பார்த்துப் பெண் குயில் வந்தது. கள்ளிக் குருவியின் முட்டை ஒன்றை அலகால் குத்தி எடுத்தது. கீழே எறிந்தது. அதற்குப் பதிலாகத் தான் ஒரு முட்டையிட்டது. பிறகு ஜம் என்று பறந்து போய் விட்டது. இது தி.ஜ.ர.வின் கட்டுரை. பெண் குயில் அது முட்டையிடும் கூட்டில் ஏற்கெனவேயுள்ள முட்டைகளுள் ஒன்றை அழித்துவிட்டு தான் ஒரு முட்டையிடுகிறது. இது குறிக்கத் தகுந்த செய்கையன்றோ?' (ப.6,7,8 - குழந்தை இலக்கிய முன்னோடி தி.ஜ.ர. - பூவண்ணன்).

இவ்வாறு தி.ஜ.ர. கூர்த்தமதிகொண்டே குழந்தைகள் இலக்கியத்தைப் படைத்துள்ளார்.

**வாழ்க்கை வரலாற்றுக் கதைகள்**

குழந்தைகளுக்கு நாட்டின் சான்றோர் கதைகளைச் சொல்வது வழிவழி மரபு. அதைப் போலவே தி.ஜ.ர., பாரதி, காந்தி ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றை, ஓவியர் ரெஸாக், ஓவியர் சாகர் ஆகியோர் வரைந்த கண்ணுக்கினிய ஓவியங்களோடு, பாப்பாவுக்குச் சொன்னார். குழந்தைகளுக்குச் சொல்வதால், சுவையான நிகழ்ச்சிகளில் மட்டும் கவனம் செலுத்தாது, அவர்கள் வாழ்க்கையிலிருந்து குழந்தைகள் எடுத்துக் கொள்ள வேண்டிய செய்தி நிரம்பிய முக்கியமான நிகழ்ச்சிகளையும் தி.ஜ.ர. இந்நூல்களில் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார்.

பாரதி பணியாற்றிய பத்திரிகை பற்றிச் சொல்லும்போது அவர்களுக்குத் தெரிந்த விஷயங்களைக் கொண்டே அதை விளக்குகிறார்.

'பள்ளிக்கூட ஆசிரியர் என்ன செய்வார்? சிறுவருக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பார். பத்திரிகை ஆசிரியர் என்ன செய்வார்? பல செய்திகளை எழுதுவார். அவை அச்சாகும். அப்படி அச்சாவது தான் பத்திரிக்கை. அதை மக்கள் வாங்கிப் படிப்பார்கள். பெரிய பத்திரிக்கையில் தலைமை ஆசிரியர் ஒருவர் இருப்பார் அவரே எல்லாம் எழுத முடியாது. வேறு சிலரும் எழுதுவார்கள். அவர்கள் உதவி ஆசிரியர்கள், பாரதி இப்படி ஓர் உதவி ஆசிரியர்'

காந்தியின் வாழ்க்கையில் முக்கிய செய்தியான 'சத்தியம்' பற்றி அழகாக விளக்குகிறார் தி.ஜ.ர.

"மெட்ரிகுலேஷன் பரிட்சையில் ஒரு கேள்வி கேட்டார்கள் தங்கத்தை விட உயர்ந்தது எது? என்பது கேள்வி.

சத்தியம் என்று விடை எழுதினார் காந்தி. சத்தியத்தில் அவ்வளவு பற்று அவருக்கு. பதினாறு வயதிலேயே இந்தப் பற்று ஏற்பட்டு விட்டது". (ப.14,15, குழந்தை இலக்கிய முன்னோடி தி.ஜ.ர. - பூவண்ணன்)

இப்படி, வாழ்க்கை வரலாறுகளைக் குழந்தைகளுக்குச் சொல்வதால் அவர்கள் நாட்டின் சிறந்த குடிமகன்களாக விளங்குவார்கள் என்று தி.ஜ.ர. எதிர்பார்த்தார்.

**கதைகள்**

தி.ஜ.ர. 'ரோஜாப் பெண்' என்ற சிறுவர்கதைத் தொகுதிக்கு எழுதிய முன்னுரையில் நான் யாருக்கு வேண்டுமானாலும் சுலபமாய்க் கதை சொல்லிவிடுவேன். குழந்தைகளுக்குக் கதை சொல்வது சிரமம் என்று அதை விளக்கிவிட்டு, தான் எப்படி குழந்தைக் கதை எழுதினேன் என்று குறிப்பிடுகிறார்.

"நான் சில காலம் ஆசிரியராயிருந்து பதிப்பித்த 'சக்தி', 'பாப்பா' இரண்டிலும் உங்களுக்குக் கதை சொல்ல வேண்டி வந்தது. யோசித்து யோசித்துப் பார்த்தேன். சொந்தமாய்ச் சொல்ல ஒரு கதையைக் கூட என்னால் இட்டுக் கட்ட முடியவில்லை. இங்கிலீஷில் குழந்தைகளுக் கென்று சிலர் ஏராளமாகக் கதைகள் சொல்லுகிறார்களே எப்படி என்று பார்த்தேன். பல நாட்டிலும் பல காலமாக வழங்கி வரும் கதைகளையும் ஒன்றிரண்டு புதிய கதைகளையும் திரட்டித் திரும்பத் திரும்பத் தங்கள் சொந்த வார்த்தைகளிலும் அவர்கள் சொல்லி வருவதைக கண்டேன். அபூர்வமான சில மேதைகள் தான் தாமே சொந்தமாய் ரசமான குழந்தைக் கதையும் எழுத முடியும். நான் அப்படிப்பட்ட மேதை இல்லை. எனவே நானும் அப்படியே பல பழங்கதைகளையும் புதுக்கதைகளையும் திரட்டி, எனக்கு உசிதமென்று தோன்றிய சில திருத்தங்களுடன், என் சொந்த நடையிலும், மொழியிலும் திரும்பச் சொல்ல எண்ணினேன், சொன்னேன்." (முன்னுரை - ரோஜாப்பெண்).

என்று தம் குழந்தைக் கதைகளின் மூலத்தைச் சொன்னார். ரோஜாப் பெண் என்ற (1955) கதைத் தொகுதியில் 14 தழுவல் கதைகள் உள்ளன.

அலமுவின் அதிசய உலகம் என்ற நூல் லூயி கோரல் எழுதிய Alice in Wonderland என்னும் பெருங்கதையைத் தி.ஜ.ர. பாப்பா இதழில் மொழி பெயர்த்து எழுதியது. இது வானொலியிலும் ஒலிபரப்பாகி, 'தியாக பாரதி' யிலும் வெளிவந்ததாக தெரிகிறது என்று பூவண்ணன் தெரிவிக்கிறார். (ப.22 - குழந்தை இலக்கிய முன்னோடி தி.ஜ.ர - பூவண்ணன்).

லியோ டால்ஸ்டாய் தமது இறுதிக் காலத்தில் செய்த புதுமையான இலக்கியப் பரிசோதனை முயற்சிகளை, அப்படியே மொழி பெயர்த்துச் சக்தி இதழில் குழந்தைகள் அறிவு என்ற தலைப்பில் வெளியிட்டு வந்தார் தி.ஜ.ர.. 'வாழ்க்கையின் சிக்கலான பெரிய பிரச்னைகள். பெரிய விஷயங்கள் என்று பண்டிதர்கள் மிரட்டக் கூடிய பொருள்களையெல்லாம் குழந்தைகளின் பார்வையிலே டால்ஸ்டாய் சித்திரித்துக் காட்டுகிறார்' என்று தி.ஜ.ர. குறிப்பிடும் இவ்வகைச் சித்திரங்கள் 20 அடங்கிய நூல் குழந்தைகள் அறிவு என்ற பெயரில் நூலாக வந்தது. இவற்றைக் குழந்தைகள் புரிந்து கொண்டாலும், இவற்றைக் குழந்தை நூல் என்று கொள்ள முடியாது என்கிறார் பூவண்ணன். (ப.23, குழந்தை இலக்கிய முன்னோடி தி.ஜ.ர. - பூவண்ணன்)

மாடு, இலை தழைகளைப் பகல் வேளையில் சாப்பிட்டு விட்டு வந்து இரவில் அசை போட்டுச் செரித்துக் கொள்வதைப் போலக் குழந்தைகளாயிருக்கும் போதே இக்கதைகளை விழுங்கி விட்டால் அறிவு வளர்ச்சிபெற்ற பிறகு அசை போட்டு, அசை போட்டு இவற்றைப் புரிந்து கொள்ளலாம் என்ற யோசனையின் பேரில் இவற்றையும் குழந்தைக் கதைகளாகவே கருதலாம்.

**பாடல்கள்**

''எழுத்தறிவும், எண்ணறிவும் இரு கண்கள்தான். ஆனால் நல்லதையே பார்த்து இன்புறாத கண்களால் பயனில்லை. இதற்கேற்றது பண்பாடு. உணர்ச்சியையும் உள்ள எழுச்சியையும் பக்குவப்படுத்துபவை நுண் கலைகளே. அந்தக் கலைகளுக்கெல்லாம் மூலாதாரம் கற்பனை செறிந்த கவிதை தான். மற்ற எல்லாரையும் விடச் சிறு குழந்தைகளுக்குக் கவிதை பல விதங்களில் பயன்பாட்டுக்கு உதவும். இதனால்தான் கைக் குழந்தைக்கே சந்தத்தோடு கூடிய பாடல்களைப் பாடி விளையாட்டு காட்டி மகிழ்வித்து வந்தார்கள். இந்த ஆடலும் பாடலும், கண், செவி, உடல் மூன்றையும் பதப்படுத்துவதோடு உள்ள உணர்ச்சிகளையும் செம்மையுறச்

செய்கின்றன. எனவே குழந்தைகள் ஆடிப்பாடிக் களிக்கப் பாடல்கள் மிக அவசியம்'' (அ. அப்துல் கரீம் எழுதிய குழந்தைகளுக்குக் கவிதை தந்தவர் கதை - நூல் முன்னுரையில் தி.ஜ.ர.)

என்று குழந்தைப் பாடல்களின் முக்கியத்துவத்தைத் தி.ஜ.ர. குறிப்பிடுகிறார்.

ரோஜாப் பெண் நூலில் உள்ள கதைகளின் இடையே காணப்பெறும் பாடல்களை அவரே எழுதியுள்ளார். சக்தி இதழில் பாலர் பாட்டுப் பகுதியில் நீலா என்னும் புனை பெயரில் எழுதிய பாட்டொன்று, ஆங்கிலத்தில் IF என்னும் தலைப்பில் அமைந்த பாடலின் மொழி பெயர்ப்பு ஆகும். அது வருமாறு:

**If all the seas were one sea**
**What a great sea that would be**
**If all the trees were one tree**
**What a great tree that would be**

....என்ற அந்தப் பாடல் தமிழில் தி.ஜ.ர. விடமிருந்து இப்படி வருகிறது.

எல்லாக் கடலும் ஒன்றானால்
எத்தனை பெரிய கடலாகும்
எல்லா மரமும் ஒன்றானால்
எத்தனை பெரிய மரமாகும்
எல்லா வாளும் ஒன்றானால்
எத்தனை பெரிய வாளாகும்
எல்லா ஆளும் ஒன்றானால்
எத்தனை பெரிய ஆளாவான்
அந்த ஆள் தான் கையினிலே
அந்த வாளைப் பிடித்தோங்கி
அந்த மரத்தை வெட்டிச் சாய்த்து
அந்தக் கடலில் விட்டெறிந்தால்
டும்டும் டும்டும் டொமீல்
எத்தனை பெரிய சத்தமிடும்.

என்று தி.ஜ.ர.வின் மொழிபெயர்ப்பு மிக அழகாக வந்துள்ளது. (மேற்கோள் ப.27, குழந்தை இலக்கிய முன்னோடி, தி.ஜ.ர. - பூவண்ணன்)

அற்புதமான சிறுகதைகளைத் தி.ஜ.ர. எழுதியிருந்தாலும் சிறுகதை வரலாற்றாசிரியர்கள் அவரைப் பெரும்போக்குக் கதையாளர்கள் என்ற வரிசையிலேயே வைத்துப் பார்க்கிறார்கள். அவரது கட்டுரையை மதிப்பிடுபவர்கள் அவரை வ.ரா.வுடன் ஒப்பிட்டுக் கட்டுரையில் அவருக்கு இணையாகவே மதிக்கிறார்கள்.

மொழிபெயர்ப்புச் சாதனையை மதிப்பிடுகிறவர், மொழிபெயர்ப்புக்கு எடுத்துக் கொண்ட நூல்களின் உள்ளடக்கத்தை வைத்துப் பார்ப்பதை விடவும் நூல்களின் எண்ணிக்கையை வைத்துப் பார்த்துப் புத்தகச் சுருக்கங்களில் அவர் மன்னர் என்று சொல்லிவிட்டு முடித்துக் கொள்ளுகிறார்கள். குழந்தை இலக்கியத்தில் அவர் சாதனையைப் போற்றித்தான் ஒரு தனி நூலே குழந்தை இலக்கியத்தின் முன்னோடி என்று வந்திருக்கிறது. சிறுகதைக்குப் பரிசு பெற்றதுபோல, குழந்தை இலக்கியத்துக்கும் கேடயம் பரிசு பெற்றுள்ளார். குழந்தை இலக்கியக்காரர்கள்தான் அவரைப் போற்றுகிறார்கள்.

"குழந்தைகளின் உலகம் ஒரு தனி உலகம். பேரானந்தம் நிறைந்த ஒரு கற்பனை உலகம் அது. அதிலே எளிதிலே எல்லாப் பெரியவரும் புக முடியாது. அந்த உலகத்திலே செலாவணியாகக் கூடிய இலக்கியத்தைப் படைப்பது மிகவும் கடினமான வேலை. அவர்களுடைய அறிவும் உணர்ச்சியும் கற்பனையும் இயற்கையோடு கூடியவை; கள்ளமற்றவை; களங்கமற இன்பம் பயக்கும் இலக்கியமே அவர்களிடம் செலாவணியாகும்." (குழந்தை இலக்கிய வரலாறு - பூவண்ணன் நூல் முன்னுரையில் தி.ஜ.ர.)

என்று சொன்னார் தி.ஜ.ர. குழந்தை எழுத்தாளர்கள் களங்க மற்றவர்கள். அவர்கள் தி.ஜ.ர.வை மற்ற எல்லாரை விடவும் அதிகமாகப் போற்றுகிறார்கள்.

---

# பின்னிணைப்புகள்

## இணைப்பு - 1

## கட்டுரை

***பசி***

***தி.ஜ.ர.***

இரண்டு வரியிலே, அந்தச் செய்தி முடிந்துவிட்டது. ஆனால், அதை நான் கற்பனை செய்து பார்த்தேன். என்ன துயரக் காட்சி அது!

அவன் எத்தனை நாள் பட்டினியோ? எப்படி யெல்லாம் தவித்தானோ? யாரார் வீட்டு வாசலில்போய் நின்றானோ? எவ்வளவு பேர்கள் எரிந்து விழுந்தார்களோ? எவ்வளவு பேர் உதாசீனமாய்ப் பேசினார்களோ? ஒருவாய்ச் சோறு, ஒரே ஒரு கவளம் கிடைக்காமல், அலைந்து அலைந்து கால் ஓய்ந்து போயிருப்பான்.

இது கதையில்லை; கல்கத்தாவிலே நடந்த ஒரு சம்பவம். வைஸ்ராய் நிர்வாகச் சபையின் மாஜி அங்கத்தினரான ஸர்.ஜகதீச பிரசாதே கூறியுள்ளது.

இதைப் பத்திரிகையிலே படித்துவிட்டு, வீட்டுக்கு வந்தேன்.

''அம்மா தாயே! ஒருபிடி சோறு போடுங்கள்'' என்று அடுத்த வீட்டு வாசலில் ஒரு குரல் கேட்டது. என் உள்ளம் திடுக்கிட்டது. கல்கத்தாவிலே மாண்ட அவனது ஆவியோ இது என்று எண்ணினேன். திரும்பிப் பாராமல் வீட்டினுள் புகுந்தேன்.

''ஐயோ பாவம்! என்ன கஷ்டம் பாருங்கள்'' என்றாள் மனைவி.

''என்ன சொல்லுகிறாய்?''

''ஒன்றுமில்லை. இதோ போகிறான் பாருங்கள். இந்தப் பிச்சைக்காரன் எப்போதும் வருகிறவன் தான். இவன் என்ன செய்தான் தெரியுமா?''

''என்ன செய்தான்?''

''உங்களுக்கு ஞாபகமிருக்குமே? போனவருஷம் ஒரு பிச்சைக்காரன் வந்தான். அவன் கப்பரையில், சோறும் தண்ணீருமாய்ப்

போட்டு விட்டேன். 'என்னம்மா, பழையதைப் போட்டுவிட்டாயே' என்று சண்டைக்கு வந்தானே..."

"அவனா இவன்?"

"இல்லை, அப்படி யெல்லாம் சண்டித்தனம் செய்கிற பிச்சைக்காரர்கள் இப்போது எப்படி மாறிவிட்டார்கள்!" என்றாள் அவள்.

"விஷயத்தைச் சொல்."

"இவன் வந்தான். முன்னெல்லாம் வந்தால், சோறு போட்டால் தான் வாங்கிக் கொள்வான். இன்று 'அம்மா, கொஞ்சம் சோற்று நீர் இருந்தால் ஊற்றுங்களேன்' என்றான். 'ஏன், சோறு வேண்டாமா?' என்று கேட்டேன். 'சோறு கேட்கப் பயமாயிருக்குதம்மா. எப்படிக் கேட்போம்? உங்களுக்கே படியளக்கிறார்களே? என்றான். எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருந்தது..."

"சரி, சரி, போ" என்று நான் எரிந்து விழுந்தேன். ஏன் எனக்கு எரிச்சல் வந்தது? அவனுக்குக் கஷ்டமாயிருந்தது. என் காதிலும் விழ வேண்டுமா? என்னால் அதைச் சகிக்க முடியவில்லை.

பசி! சீ! மனித வாழ்க்கை இவ்வளவுதானா? மனிதனுடைய உன்னதமான வேதாந்தமெங்கே, சாஸ்திரங்களெங்கே, கலைகள் எங்கே? எல்லாம் கவளம் சோற்றுக்குப் பின்னால்தானே? இல்லை யென்று வித்தாரம் பேசலாம். இதோ பாருங்கள், கல்கத்தாவிலே என்ன நடக்கிறது? எத்தனையோ வருஷமாய் இணைந்து வாழ்ந்த அண்ணனும் தங்கையும் பிரிகிறார்கள்; தாயும் மகனும் விலகுகிறார்கள்; கணவனும் மனைவியும் கலைகிறார்கள்! ஏன்? ஒரு கவளம் சோற்றைக் காணாமல்! அட தெய்வமே! மனிதனை ஏன் சோற்றால் எடுத்த சுவராகப் படைத்தாய்? பல வருஷங்களுக்கு முன்னே நடந்தது. சொந்த விஷயம்தான். இங்கே ஞாபகம் வருகிறது.

சின்ன வயது. அற்ப விஷயத்துக்கெல்லாம் பிரமாதமான கோபம் வரும் எனக்கு. குடும்ப விஷயங்களையெல்லாம் உங்களுக்கு எதற்காக நான் சொல்ல வேண்டும்? கேட்டால், உங்களுக்கும் சலிப்புத்தான் வரும். ஆகையால், அதையெல்லாம் விட்டு, விஷயத்தை மட்டில் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

ஒருநாள் வீட்டிலே எனக்குச் சிறிய மனஸ்தாபம் வந்தது. உணவு கொள்ள மறுத்துவிட்டேன். காலை முதல் பட்டினி. தந்தை கெஞ்சுகிறார். கெஞ்சக் கெஞ்ச என் ஆத்திரம் அதிகப்பட்டது; வீம்பும் வலுத்தது. அடியோடு கண்டிப்பாய் உண்ண மறுத்துவிட்டேன்.

அஸ்தமித்தது. படுக்கையில் படுத்தேன்.

''இதென்னடா பிடிவாதம்? நீ மகா புத்திமான். அவன், இவன்'' என்றெல்லாம் சொல்லி மீண்டும் ஒரு முறை நய வார்த்தைகள் கூறிப் பார்த்தார் தந்தை. நான் கேட்கவில்லை. எல்லாரும் படுத்தாயிற்று. விளக்குகள் அணைக்கப்பட்டன. இரவின் மௌன இருள் சூழ்ந்தது. குறட்டைச் சத்தம் கேட்கத் தொடங்கிற்று. அனைவரும் தூங்கிவிட்டார்கள். எனக்கு மட்டும் தூக்கம் வரவேயில்லை.

வயிறு கிள்ளுகிறது. உடல் சோர்கிறது; மனம் சுழல்கிறது. புரண்டு புரண்டு படுத்தேன். எத்தனை புரண்டாலும் பசி தீருமா? எழுந்து சொம்பு சொம்பாய்த் தண்ணீர் குடித்தேன். ஐயோ! வயிற்றை என்ன குமட்டுக் குமட்டுகிறது! அப்பாடா! படுக்கையில் கிடைகொள்ள வில்லையே!

என்ன யோசனை? நாள் தோறும் படுக்கையிலே என்னென்ன சிந்தனையெல்லாம் எனக்கு எழும்? என் கீதை எங்கே, பட்டினத்தார் பாடல் எங்கே, ஷேக்ஸ்பியர் எங்கே, திரிகோண கணிதமெங்கே? மற்ற இன்பமான நினைவுகளெல்லாம் எங்கே? சுகமான தூக்கந்தான் எங்கே? இன்பக் கனவுகள் - அல்லது பயங்கர சொப்பனங்கள் எங்கே? ஒன்றுமில்லை. ஒரே நினைவு - பசி, இரவெல்லாம் பசி, ஒரே பசிதான்! உலகமே சூன்யமான ஒரு வனாந்தரமாகி விட்டது - என் பசிக்கு முன்னே.

பொழுது விடிந்தது. பல்லை விளக்கினேன். விளக்கினேனாவது' விளக்கியதாக ஒரு பாவனை செய்தேன். யார் உபசாரத்தையும் எதிர்பாராமல் உண்ண உட்கார்ந்து விட்டேன். வயிறு நிறைந்தபின், கீதா புருஷனின் மோனப் புன்னகையின் உருவெளியைக் கண்டேன். ஷேக்ஸ்பியரின் இன்ப வாசகங்களை உணர்ந்தேன். கணித குதூகலத்தை அடைந்தேன். உலகமே ஆனந்தத் தாண்டவம் புரிந்தது. ஒரு கவளச் சோறு, உலகம் முழுவதுக்குமே பொருள்கொடுத்துவிட்டது. அதன் மந்திரசக்திதான் என்ன!

தனி ஒருவனுக்குணவிலை எனில், ஜகத்தினை அழித்திடுவோம்' என்று பாரதி பாடுகிறாரே, ஏன்? அவ்வளவு ஆத்திரப்பட வேண்டிய விஷயந்தான் அது. 'பசியால் வாடும் மனிதனுக்கு முன்னே, சோற்று உருவிலன்றி வேறெவ்வகையிலும் பிரசன்னமாகக் கடவுளே துணியான்' என்று மகாத்மா காந்தி கூறுகிறாரே; அந்தக் கோஷம் அர்த்தமற்றதல்ல. ''நாட்டிலே ஒரே ஒரு நாய் பட்டினி கிடந்தாலும், அதற்கு உணவு ஊட்டுவதே என் முழுமதமாகும்' என்று சுவாமி விவேகானந்தர் கூறுவதும் இதையே தான்.

ஆத்மா அழிவற்றதாயிருக்கலாம். கலைகள் நித்திய சௌந்தர்யமாயிருக்கலாம். பிரபஞ்சம் தெய்வத் திருக்கூத்தா யிருக்கலாம். 'நாமார்க்குங் குடியல்லோம், நமனையஞ்சோம்' என்று மனிதன் பாடலாம்; பாடத்தான் வேண்டும். மரண பயம் மனிதனுக்கு இருக்கக்கூடாது. ஆனால், அவன் சோற்றுக்கில்லாமல் சாவதுமட்டும் கூடாது. சாவதா, ஒரே ஒரு வேளை பசியால் தவிப்பதும் ஆகாது. அது கேவலம், கேவலம்; மனித குலத்துக்கே கேவலம்.

இது வேதகோஷம்: 'அன்னம் பிராணன்.'

-(குமரிமலர் - 1943)

---

## இணைப்பு: 2

# படைப்புகள் (கால வரிசையில்)

1938 - சந்தனக்காவடி
1940 - தீனபந்து ஆண்ட்ரூஸ்; புதுமைக்கவி பாரதியார்
1941 - கூண்டுக்கிளி
1942 - பொழுதுபோக்கு
1943 - எப்படி எழுதினேன்?; எழுத்தும் எழுத்தாளரும்
1944 - அட்லாண்டிக் சாசனம்
1945 - ஒரே உலகம்
1946 - ஆகா ஊஹூ; லெனின் சரித்திரக் கதைகள்
1947 - புகழ்ச் செல்வர், அரசியல் நிர்ணய சபை
1949 - நொண்டிக்கிளி
1950 - இது என்ன உலகம்!
1955 - மஞ்சள் துணி; குழந்தைகள் அறிவு; புதுநாள்; ரோஜாப் பெண்
1956 - வளர்ச்சியும் வாழ்வும்
1957 - மொழி வளர்ச்சி; அற்புதப்பெண்
1958 - வீடும் வண்டியும்
1960 - விசை வாத்து
1962 - காந்தி வாழ்க்கை; பாப்பாவுக்குப் பாரதி
1964 - பாப்பாவுக்குக் காந்தி
1969 - பாப்பாவுக்குக் காந்தி கதைகள்

**முதற் பதிப்பு விவரம் தெரியாதவை**

1. காளி தரிசனம்
2. யோசிக்கும் வேளையில்
3. குமாவும் புலிகள்
4. அபேத வாதம் (இ.ப. 1941)
5. அலமுவின் அதிசய உலகம்
6. வண்ணாத்திப் பூச்சி
7. சமர்த்து மைனா
8. தலைவர் ஜவாஹர்
9. கோயரிங்

**உதவிய இதழ்கள்**

| | | |
|---|---|---|
| ஊழியன் | - | 1925 - 1930 |
| கணையாழி | - | 1974 |
| சக்தி | - | 1940 - 1946 |
| சுதந்திரச்சங்கு | - | 1939 |
| தாமரை | - | 1974 |
| தீபம் | - | 1974 |
| நூலகம் | - | 1974 |
| மஞ்சரி | - | 1947 - 1974 |

**நூல்கள்**

1. அழகிரிசாமி, கு. நான் கண்ட எழுத்தாளர்கள், சென்னை - 1988
2. சிட்டி, சிவபாத சுந்தரம், தமிழ் நாவல் நூற்றாண்டு வரலாறும் வளர்ச்சியும், சென்னை -1977
3. சீனிவாசன், தம்பி, தி.ஜ.ர. மணி விழா மலர், சென்னை -1969
4. சுப்ரமண்யம், க.நா. படித்திருக்கிறீர்களா, சென்னை - 1957
5. பூவண்ணன், குழந்தை இலக்கிய முன்னோடி - தி.ஜ.ர., சென்னை -1982
6. முருகானந்தம், ச. (பதிப்), கு. அழகிரிசாமி கட்டுரைகள், சென்னை -1991
7. ரங்கநாதன், தி.ஜ. (காளி தரிசனம் தவிர்த்த மற்ற படைப்புகள் அனைத்தும்)
8. விட்டல்ராவ், கி., தி.ஜ.ர. வின் எழுத்தும் தேசிய உணர்வும், சென்னை - 1993

**நண்பர்கள்**

1. பேராசிரியர் மா.ரா. அரசு
2. பேராசிரியர் இ. சுந்தர மூர்த்தி
3. புதுக்கோட்டை ஞானாலயா நூலக நிறுவனர் பா. கிருஷ்ணமூர்த்தி
4. கலைமகள் ஆசிரியர் கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன்
5. பேராசிரியர் வீ. அரசு
6. விரிவுரையாளர் ய. மணிகண்டன்
7. பேராசிரியர் ஆ. இரா. வேங்கடாசலபதி

**தி.ஜ.ரங்கநாதன்** (1901-1974) தமிழ் மறுமலர்ச்சிக் கால எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்கவர். ஆடம்பரமற்ற, தெளிவுமிக்க எழுத்து, சொற் செட்டு ஆகியவற்றின் அடையாளம். சிறுகதை, கட்டுரை, மொழி பெயர்ப்பு, புத்தகச் சுருக்கம், குழந்தை இலக்கியம் ஆகிய துறைகளில் தனக்கெனத் தனியிடம் பெற்ற எழுத்தாளர். டைஜஸ்ட் இதழாகத் தமிழில் அறியப்பட்ட மஞ்சரியில் அதன் தொடக்கம் முதல் 25 ஆண்டுகள் பணி புரிந்த பத்திரிகை ஆசிரியர். ஊழியன், சக்தி ஆகியவை அவர் பணியாற்றிய பத்திரிகைகளுள் முக்கியமானவை.

**பழ.அதியமான்** (1961), சீர்திருத்த தமிழ் எழுத்தாளர் வ.ரா.வின் எழுத்துகளை ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர். நவீன தமிழ்நாட்டு அறிவுலக வரலாற்றில் கவனத்தை குவித்திருக்கும் இவர், தமிழ்ச் சிந்தனை வரலாற்றின் விடுபட்ட கண்ணிகளைத் தொகுக்கும் முயற்சியில் உழைத்து வருகிறார். தற்போது அகில இந்திய வானொலியில் நிகழ்ச்சி அமைப்பாளராகப் பணி புரிகிறார்.

ISBN 812601716-3




***Thi. Ja. Ranganathan***
(Tamil) Rs. 40